# சங்க இலக்கியம் காட்டும் புறவாழ்வியல்

முனைவர் பட்டப் பேற்றிற்காகப் பெரியார் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்
**மு.மோகன்ராஜ்**
(பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளர்)

நெறியாளர்
**முனைவர் க. அன்பழகன்,**எம்.ஏ.,எம்.ஃ.பில்.,பிஎச்.டி.,
தமிழ் உதவிப்பேராசிரியர்
திருவள்ளுவர் அரசு கலைக் கல்லூரி
இராசிபுரம் 637401.



தமிழாய்வுத்துறை
**பி.ஜி.பி கலை மற்றும் அறிவியல் கல்லூரி**
நாமக்கல் 637207.

ஏப்ரல் 2017

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் க.அன்பழகன், எம்.ஏ., எம்.ஃ.பில்.,பிஎச்.டி.,**
உதவிப்பேராசிரியர்
தமிழாய்வுத்துறை
திருவள்ளுவர் அரசு கலைக்கல்லூரி
இராசிபுரம் 637401.

**"சங்க இலக்கியம் காட்டும் புறவாழ்வியல்"** என்னும் தலைப்பில் என் மேற்பார்வையில் அமைந்த இவ்ஆய்வேடு, பெரியார் பல்கலைக்கழக முனைவர் பட்டப்பேற்றிற்காக, நாமக்கல் பி.ஜி.பி. கலை மற்றும் அறிவியல் கல்லூரித் தமிழாய்வுத்துறையில் திரு. மு.மோகன்ராஜ் அவர்களின் சொந்த முயற்சியால் எழுதப்பட்டது. இவ் ஆய்வின் மீது வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

இடம் : நாமக்கல்

நாள் : **நெறியாளர்**

**தமிழாய்வுத்துறைத்தலைவர்** **முதல்வர்**

# ஆய்வாளர் உறுதிமொழி

**மு.மோகன்ராஜ்**
முனைவர் பட்டஆய்வாளர் (பகுதிநேரம்)
தமிழாய்வுத்துறை
பி.ஜி.பி. கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
நாமக்கல் 637207.

**“சங்க இலக்கியம் காட்டும் புறவாழ்வியல்”** என்னும் தலைப்பில் அமைந்த இவ் ஆய்வேடு 2009-2017ஆம் கல்வியாண்டில் பெரியார் பல்கலைக்கழக முனைவா் பட்டப்பேற்றிற்காக என் சொந்த முயற்சியில் எழுதப்பட்டது. இவ் ஆய்வின் மீது வேறு எந்தப் பட்டமும் வழங்கப்படவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

இடம் : நாமக்கல்

நாள் : **ஆய்வாளர்**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | - | அகநானூறு |
| உ.ஆ | - | உரையாசிரியர் |
| குறள் | - | திருக்குறள் |
| சிலம்பு | - | சிலப்பதிகாரம் |
| திருமுருகு | - | திருமுருகாற்றுப்படை |
| தொ | - | தொகுதி |
| தொல் | - | தொல்காப்பியம் |
| தொ.ஆ | - | தொகுப்பாசிரியர் |
| தொல்.சொல் | - | தொல்காப்பியம் சொல்லதிகாரம் |
| தொல்.பொருள் | - | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| நற் | - | நற்றிணை |
| நூ | - | நூற்பா |
| ப | - | பக்கம் |
| ப.ஆ | - | பதிப்பாசிரியர் |
| பக் | - | பக்கங்கள் |
| பா | - | பாடல் |
| பா.எ | - | பாடல் எண் |
| பா.வ | - | பாடல் வரி |
| புறம் | - | புறநானூறு |
| புற.பொ | - | புறபொருள் வெண்பாமாலை |
| பெரும் | - | பெரும்பாணாற்றுப்படை |

| | |
|---|---|
| பொ | பொதுவியல் |
| மேலது | மேற்கூறிய நூல் |
| மொ.ஆ | மொழிபெயர்ப்பு ஆசிரியர் |
| வ | வரி |
| வரி | வரிகள் |
| வெ.ப | வெட்சிப்படலம் |
| p | Page |

# பொருளடக்கம்

## நன்றியுரை

இவ் ஆய்வை மேற்கொள்ள அனுமதியளித்த பி.ஜி.பி கலை அறிவியல் கல்லூரி நிறுவனருக்கும், முதல்வருக்கும் முதற்கண் எனது நன்றியினை உரித்தாக்குகிறேன்.

அகத்திலும் புறத்திலும் சுமந்து என்னைச் சீர்தூக்கிப் பார்த்த அன்னை திருமதி. மு.ராஜேஸ்வரி தந்தை திரு.வ.க.முருகேசன் அவர்களின் பாதங்களில் எனது நன்றியினைச் சமர்ப்பிக்கின்றேன்.

சங்க இலக்கியம் காட்டும் புறவாழ்வியல் என்ற தலைப்பில் அமைந்த இவ் ஆய்வை மேற்கொள்ள ஒப்புதல் அளித்து, என்னை உருவாக்கி ஈடுகொடுத்துச் செவ்வனே செய்த செம்மல் மனிதநேயம் மிக்க பேராசான் ஒப்பற்ற நெறியாளர் முனைவர் க.அன்பழகன் அவர்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் என் நெஞ்சம் மறவாத நன்றியினை நவில்கின்றேன்.

என்னை முகம் மலர வரவேற்று அகம் மலர இன்சொல் பேசி இவ் ஆய்வு முழுமை பெற வழிநின்ற பண்பாளர் முனைவர் சு.லலிதா தமிழாய்வுத்துறைத்தலைவர் அவர்களுக்கும் துறைசார் பேராசிரியர்களுக்கும் நன்றிகள்.

என் உடனிருந்து உதவிய துணைவியார் திருமதி.ரா.சுகன்யா, அத்தை திருமதி. விஜயா, மாமா திரு.ராமதாஸ் ஆகியோருக்கும் என் உளமார்ந்த நன்றியினைக் கூறக் கடமைப்பட்டிருக்கிறேன்.

இவ் ஆய்வு சிறக்க உதவிய நண்பர் திரு.இரா.பிரகாஷ் அவர்களுக்கும் என் நன்றிகள்.

மாறாமல் மறுக்காமல் நிறைவாகக் கணினியில் தட்டச்சு செய்து கொடுத்த தோழி சி.ஜோதி, விநாயகா கணினி மையம், பேளுக்குறிச்சி அவர்களுக்கும் நன்றி.

## முன்னுரை

இலக்கியம் என்பது மானுடனைப் பாடுவது சமூகங்களை இனங்காட்டுவது. சங்க இலக்கியம் தோன்றிய காலகட்டத்தில் வேறு எந்த மொழியிலும் இலக்கியங்கள் தோன்றவில்லை எனலாம். பண்டைகாலத் தமிழ்ச்சமூகத்தின் வாழ்வியலைத் தற்காலத்திற்குப் படம் பிடித்துக் காட்டும் காலக் கண்ணாடியாகவும் பல வரலாற்று நிகழ்வுகளையும் பண்பாடுகளையும் தன்னகத்தே கொண்ட பெட்டகமாகவும் திகழ்கின்றது. ஒழுக்கத்தையும் உயர்ந்த பண்பாட்டினையும், மனித நேயத்தையும் உலகறியச் செய்தவர்கள் சங்க காலத் தமிழர்கள். சங்க இலக்கியம் காதலையும் வீரத்தையும் தன்னுள் பொதிந்து வைத்திருக்கும் அட்சயப் பாத்திரமாகும்.

மனம் சார்ந்த நிகழ்வுகளை அகவாழ்வியல் எனவும், பிறர் அறியச் செய்யும் செயல்களைப் புறவாழ்வியல் எனவும் கூறலாம். சங்க இலக்கியம் அன்றைய மக்களின் வாழ்வியல் உணர்வுகளையும் இன்ப துன்பங்களையும் உணர்வுத்ததும்ப எடுத்தியம்புகின்றது. புறப்பாடல்களைவிட அகப்பாடல்களே அதிகம். தொல்காப்பியர் அகப்பொருள் இலக்கணத்தை நான்கு இயல்களிலும் புறப்பொருளுக்கான இலக்கணத்தை ஓர் இயலிலும் கூறியுள்ளார். புறவாழ்வியலின் பல்வேறு நிகழ்வுகள் தொல்காப்பியரால் தொகுத்தளிக்கப்படவில்லை. போர், போர்முறைகள், அரசரைப் போற்றுதல் என்ற அளவிலேயே புறத்திணையியல் அமைகின்றது. புறநானூறு, பதிற்றுப்பத்துப் போன்ற புறநூல்கள் மட்டுமின்றி அகநானூறு, கலித்தொகை, நற்றிணை போன்ற அகநூல்களிலும் எண்ணற்ற புறச்செய்திகள் பொதிந்துள்ளன.

உலகில் ஒப்பற்ற தாய்மொழியான தமிழ் மொழியை முத்தமிழ், பைந்தமிழ், செந்தமிழ், வண்டமிழ், ஒண்டமிழ் எனச் சிறப்பித்துத் தொன்று தொட்டு அழைப்பர். தமிழர்களின் வாழ்வியலை வடித்துக் காட்டும் கருவூலமாகச் சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன. அகமும் புறமும் தமிழர்களின் ஒப்பில்லாக் கலைச் செல்வமாகும். ‘யாதும் ஊரே யாவரும் கேளிர்’, ‘புகழெனின் உயிரையும் கொடுப்பார்’ போன்ற உயர்ந்த நற்கருத்துக்களை மீட்டுருவாக்கம் செய்யும் நோக்கத்தோடு சங்க இலக்கியம் காட்டும் புறவாழ்வியல் என்னும் இவ் ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

### ஆய்வுத் தலைப்பு

**"சங்க இலக்கியம் காட்டும் புறவாழ்வியல்"** என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

## ஆய்வு நோக்கம்

சங்க இலக்கியத்தில் காணப்படும் வழிபாட்டு முறைகள் தற்காலத்தில் எவ்வாறு மாற்றமடைந்துள்ளன என்பதை வெளிப்படுத்துவது.

ஆநிரை கவர்தலுக்காகத் தொடங்கிய போர் நாளடைவில் மாற்றம் அடைந்த விதத்தினையும், கற்றறிந்த புலவர்களுக்கு அரசர்களிடம் இருந்த செல்வாக்கினையும் வெளிக்கொணர்தல்.

பண்டைத் தமிழர்கள் நோயின்றி வாழ்ந்தமைக்கு அவர்களின் உணவு, உடை, இல்லங்களே காரணமாகத் திகழ்ந்தமையையும் கலையின் மீது அவர்கள் கொண்ட ஈடுபாட்டினையும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இருந்த வானியல் அறிவினையும் ஆராய்ந்து, அதனை மீட்டுருவாக்கம் செய்வதே இவ் ஆய்வின் நோக்கமாகும்.

## ஆய்வுக் கருதுகோள்

அச்சத்தின் காரணமாகத் தோன்றிய இயற்கை வழிபாடுகள் காலப் போக்கில் உருவ வழிபாடாக உருப்பெற்றிருக்கும்.

தன் வீரத்தை வெளிப்படுத்துவது புகழ் பெறுவதற்காகவும் நாட்டை விரிவுபடுத்தவும் போர் தொடங்கியது.

விருந்தோம்பல் தமிழர் பண்பாடு. கல்வி மனிதனை விலங்குகளிடம் இருந்து வேறுபடுத்திக் காட்டுவது. ஆகியவற்றைக் கருதுகோளாகக் கொண்டு இவ்ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியவற்றில் காணலாகும் புறவாழ்வியல் நிகழ்வுகள் மட்டும் ஆய்வு எல்லையாக அமைகின்றன.

## ஆய்வு மூலங்கள்

ஆய்வின் உறுதுணையாய் விளங்கிய சான்றுகள் முதன்மைச்சான்றுகள், துணைமைச் சான்றுகள் என இருவகையாகப் பகுக்கப்பட்டுள்ளன.

## முதன்மைச் சான்றுகள்

நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு முதலிய எட்டுத்தொகை நூல்களும், திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் ஆகிய பத்துப்பாட்டு நூல்களும் ஆய்வு எல்லையாக அமைகின்றன.

## துணைமைச் சான்றுகள்

தொல்காப்பியம், புறப்பொருள் வெண்பாமாலை, போர் தொடர்பான ஆய்வுக்கட்டுரைகள், வாழ்வியற் களஞ்சியம் போன்றவை துணைமைச் சான்றுகளாக அமைகின்றன.

## ஆய்வு அணுகுமுறை

சங்க இலக்கியங்களில் காணலாகும் வழிபாட்டு முறைகளைக் கண்டறிய தொன்மவியல் ஆய்வு அணுகுமுறையும், சங்ககாலப் போர்முறைகளை விளக்குவதற்குச் சமூகவியல் ஆய்வு அணுகுமுறையும், மக்களின் வாழ்வியலை விளக்குவதற்கு விளக்கவியல் ஆய்வு அணுகுமுறையும் இவ் ஆய்வில் பின்பற்றப் பட்டுள்ளன.

## ஆய்வு முன்னோடிகள்

சங்க இலக்கியங்கள் குறித்துப் பல்வேறு ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன. அவற்றுள் பல நூல்களாகவும் வெளிவந்துள்ளன. வி.சி.சசிவல்லியின் தமிழர் திருமணம் என்ற நூலும் கு.பகவதியின் தமிழர் ஆடைகள் என்ற நூலும்

சு.விஜயகுமாரின் சங்க இலக்கியத்தில் மனிதவள மேம்பாடு என்னும் முனைவர் பட்ட ஆய்வேடும் ஆய்வு முன்னோடிகளாக அமைகின்றன.

**ஆய்வுப் பகுப்பு**

சங்க இலக்கியம் காட்டும் புறவாழ்வியல் என்னும் இவ்ஆய்வேடு முன்னுரை முடிவுரை நீங்கலாக மூன்று இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

முன்னுரை

இயல் ஒன்று : சங்க இலக்கியத்தில் வழிபாடு

இயல் இரண்டு : சங்க இலக்கியத்தில் ஆட்சியும் போர் முறைகளும்

இயல் மூன்று : சங்க இலக்கியத்தில் புறவாழ்வியல்

முடிவுரை

துணைநூற் பட்டியல்

**இயல் ஒன்று: சங்க இலக்கியத்தில் வழிபாடு**

சமயம் பற்றிய பல்வேறு அறிஞர்களின் கருத்துகள் சங்க கால மக்களின் ஞாயிறு, பிறை, மழை, மாலை போன்ற இயற்கை வழிபாட்டு நிகழ்வுகள், அவற்றின் மீது கொண்ட நம்பிக்கைகளையும், தைநீராடல் மூலம் நல்ல கணவனை அடைதல், போரில் இறந்துபட்ட வீரனுக்கு நடுகல் வழிபாடு, சங்க கால சமண பௌத்த வழிபாடு, மரம், சிவன், திருமால், முருகன், தாய்தெய்வ வழிபாடு, இந்திரன், மன்மதன் வழிபாடு போன்றவற்றை இவ்வியல் ஆராய்கின்றது.

**இயல் இரண்டு: சங்க இலக்கியத்தில் ஆட்சியும் போர் முறைகளும்**

சங்ககால ஆட்சிமுறை, அரசாளும் உரிமை, அரசியல் முறை, சேரலாதன், மாவளத்தான், நலங்கிள்ளி, இளவெளிமான், கிள்ளிவளவன், கோப்பெருஞ்சேரல், நன்னன், குமணன் போன்ற அரசர்களுடன் புலவர்கள் கொண்டிருந்த நட்பு, நீதி வழங்கும்முறை போர்முறைகள், அதியமான், சேர சோழன், நெடுஞ்செழியன், முதுகோசர், கரிகால்பெருவளத்தான் போன்ற அரசர்களின் போர்த்திறன்,

ஆய்ஆண்டிரன், நள்ளி, பாரி, ஓரி ஆகியோரின் கொடை போன்றவற்றை இவ்வியல் ஆராய்கின்றது.

**இயல் மூன்று: சங்க இலக்கியத்தில் புறவாழ்வியல்**

சங்ககால மக்களின் உணவு முறைகள், ஆடைகள், இல்லங்களின் அமைப்புகள், பரிசமணம், ஏறுதழுவி மணம் முடித்தல், போர்மணம், பலதாரமணம் போன்ற திருமணமுறைகள், இல்வாழ்க்கையின் சிறப்பு, தமிழர்களின் பண்பாடாகிய விருந்தோம்பல், பெண்ணின் மாண்பு, பெண்களுக்கான கைம்மை நோன்பு, மனிதனைப் பக்குவப்படுத்தும் கல்வியின் தேவை, சங்க கால மக்களாலும் அரசனாலும் போற்றப்பட்ட கூத்துக்கலையின் சிறப்பு, இசைக்கலையின் சிறப்பு, அக்கால மக்களின் வானியல் அறிவு, நம்பிக்கைகள் ஆகியவற்றைப் பற்றி இவ்வியல் ஆராய்கின்றது.

**முடிவுரை**

மூன்று இயல்களில் கண்ட முடிவுகளைத் தொகுத்துத்தரப்பட்டுள்ளன.

**துணைநூற் பட்டியல்**

இவ் ஆய்விற்குப் பயன்பட்ட நூல்கள் துணைநூற் பட்டியலில் அகரநிரலில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

# இயல் ஒன்று

# சங்க இலக்கியத்தில் வழிபாடு

காதலொழுக்கத்தைத் தவிர ஏனையவற்றையெல்லாம் புறமெனப் பகுத்தது தமிழ் இலக்கணம். ஆழ்ந்த சிந்தனைகளும், நுண்ணுணர்வுகளும் கொண்ட ஞானிகளின் அறிவார்ந்த முடிவுகளைக் கொண்டு சமயம், புறப்பொருளாகவே கருதப்பட்டது. ஆனால் நாயகன், நாயகியாய் நின்று பாடிய பக்தி இலக்கியங்களும் உண்டு. இறை பற்றிய செய்திகளை வெளியிட எந்த வரம்புகளும் இலக்கண மரபுகளும் இல்லை. சமயம் என்பது பலருக்கு உரியதாகிப் புறப்பொருளில் வைத்து எண்ணப்படுகிறது. சில சமயங்கள் தோன்றும் முன்னரே சங்க இலக்கியமும், தொல்காப்பியமும் தோன்றிவிட்டன எனலாம். சங்க இலக்கியங்களில் காணலாகும் பல்வேறு வழிபாட்டு நிகழ்வுகளைப் பற்றி இவ்வியல் ஆய்கிறது.

**சமயம்**

சமயம், மதம் என்னும் சொற்கள் சங்க இலக்கியத்தில் வழங்கப்படவில்லை எனினும் இச்சொற்களால் குறிக்கப்பெறும் உணர்வுகளும் வாழ்வு நெறிகளும் அக்காலத்திலும் இருந்தது. கடவுள் நம்பிக்கையே சமயத்திற்கு அடிப்படை என்று கூறுவதற்கில்லை. கடவுள் என்ற கருத்துக்கு இடம் தராத பௌத்த நெறியையும் சமயம் எனக் குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகின்றது. மக்கள் வாழ்க்கையின் பயன்பாடுகளை உணர்ந்து தம்மைத்தாமே செம்மைப்படுத்திக் கொள்ள இறைநெறியினைப் பின்பற்றினர். இறைவனோடு தொடர்புடையவற்றைச் சமயம் எனக் குறித்தனர்.

சமயம் என்பது மரபுவழிப்பட்ட நம்பிக்கைகள், வாழ்க்கைச் சடங்கு முறைகள், பிறப்பு, இறப்புப் பற்றிய எண்ணங்கள், நல்லன தீயன என்னும் பாகுபாடு, வாழ்வியற்பற்று ஆகிய உணர்வுகள் கூறப்பெறும் அனைத்தையும் உள்ளடக்கியதாக அமைகிறது.

மதம் என்னும் சொல்லைக் கொள்கை என்ற பொருளில் தமிழ் நூலார் ஆளுகின்றனர். Religion என்ற ஆங்கிலச்சொல்லைத் தோற்றுவித்த இத்தகைய வேர்ச்சொல்லிற்குக்(Religare) கட்டுதல், கூடுதல், மீளவும் எண்ணுதல் ஆகிய

பொருள்கள் தரப்படுகின்றன. ஆகவே மனித வாழ்வு குறித்த ஆழமான சிந்தனைகளும் கோட்பாடுகளுமே சமயம், மதமென்று வழங்கப்பட்டன என்பதை அறியமுடிகின்றது. இந்து, சமணம், பௌத்தம், இசுலாமியம், கிறிஸ்து, ஈபுரு, கன்பூசியம், சீக்கியம் ஆசிவக ஷிண்டே போன்ற பல சமயங்கள் உலகின் பல பகுதிகளிலும் தோன்றி வளர்ந்திருக்கின்றன. வெவ்வேறு மொழிகளில் இலக்கியங்கள் வளர்வதற்கும் தத்துவஞானம் செழிப்பதற்கும் இம்மதங்கள் உதவியிருக்கின்றன.

இந்தியாவின் தொல்பழங்குடிகளாகவும், ஆரியர் இந்நாட்டுக்குள் வருவதற்கு முன்பே சிறந்த நாகரிகம் படைத்தவர்களாகவும் திராவிடர்கள் விளங்கினர் என்பதைச் சிந்துவெளி அகழ்வாராய்ச்சிகள் உறுதிப்படுத்தியுள்ளன. திராவிடர்களை இந்தியாவின் உரிமைக்குடிகளாகக் கருதாதவர்களும் ஆரியர் இந்தியாவிற்கு வரும் முன்னரே திராவிடர்கள் இருந்தமையை ஒப்புக்கொள்கின்றனர். ரிக்வேதம், ஆரியர் திராவிடரோடு கொண்டிருந்த மாறுபாட்டைத் தெளிவாகக் கூறுகின்றது. எனினும் அறிஞர் பலர் திராவிடர்களின் தனித்தன்மை வாய்ந்த நாகரிகத்தை அறிந்து கொள்ளாதவர்களாகவே இருந்திருக்கின்றனர். சிந்து சமவெளி நாகரிகத்தைத் திராவிட நாகரிகமாகச் சித்தரிப்பதற்கு அடிப்படைக் காரணமே அங்குக் காணப்படும் சிவலிங்க வழிபாடுதான்.

இந்து சமயம் என்பது பொதுப்பெயர். சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்டது சைவம், திருமாலை முழுமுதற் கடவுளாகக் கொண்டது வைணவம், சக்தியை வணங்கும் சமயம் சாக்தம், கணபதியை வழிபடும் சமயம் காணாபத்தியம், முருக வழிபாட்டைக் குறிப்பது கௌமாரம், சூரியனை வழிபடுவது சௌர சமயமாகும். இந்த அறுவகைச் சமயங்களும் இந்து சமயத்தின் உட்பிரிவுகளாகும். தமிழக மக்கள் தொன்று தொட்டு இறைவழிபாட்டில் நம்பிக்கை கொண்டவர்களாக இருக்கின்றனர்.

நமது நாட்டில் பல்வேறு சமயங்கள் தோன்றியிருப்பினும் தொன்மைச் சிறப்புடையன சிலவேயாம். அவற்றுள் சைவம் வைணவம் என்னும் இருபெரும் சமயங்களும் தமிழகத்தில் தொன்று தொட்டு நிலவி வருவனவாகும்.

சமயங்கள் பற்றிய பல்வேறு அறிஞர்களின் கருத்துகள் பின்வருமாறு:

1. ‘‘சமயம் என்னும் இச்சொல் சமையம் என்னும் சொல்லிலிருந்து மருவி இருக்கலாம். சமையம் என்னும் சொல் சமைக்கப்பட்டது என்றும் வகுக்கப்பட்டது என்றும் பொருள் தருவதாகும்.’’[1] எனச் சுப்பிரமணியபிள்ளை கூறுகிறார்.
2. ‘‘வழிபாடும் பிரார்த்தனையும் உலகியல் தன்மை வாய்ந்தன. பிரார்த்தனையை ஏற்கும் கடவுள் ஒருவர் உளர் என்னும் நம்பிக்கை உண்டாவது இயல்பாகும்.’’[2] என்று கலைக்களஞ்சியம் கூறுகிறது.
3. சுவாமி விவேகானந்தர் ‘‘வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலேயே தோன்றி இன்னும் உலகத்தில் நிலைத்து நிற்கும் சமயங்கள் மூன்று. அவை இந்து சமயம், சௌராஸ்திரிய சமயம், யூத சமயம் ஆகும்’’[3] என உலகின் பழமையான சமயங்களைப் பற்றித் தமது கருத்தைக் கூறியுள்ளார்.
4. ‘‘பழைய கற்காலம் புதிய கற்காலம் என வழங்கப்பெறும் அக்காலத்திலேயே சிவலிங்க வழிபாடு இருந்து வந்தது’’[4] என்று வரலாற்றுப் பேராசிரியர் சீனிவாச ஐயங்கார் குறிப்பிடுவதாக நாராயணவேலுப்பிள்ளை கூறுகிறார்.
5. ‘‘புதிய கற்காலத்தைச் சேர்ந்த லிங்கத்தைக் குறிக்கும் கற்கள் பல கிடைத்துள்ளன. சிவபெருமான் மலைவாழ் கடவுள், யானைத் தோலையும், புலித்தோலையும் உடையவர். அவர் விலங்குகளுக்குத் தலைவர் என்னும் பொருள் படப் பசுபதி என்னும் பெயரால் அழைக்கப்படுகிறார்.’’[5] எனப் பாலசுப்பிரமணியம் கூறுகிறார்.
6. ‘‘சமய நோக்கில் ஆராய்ந்தால் சைவமும் வைணவமும் இரு கண்களாகத் திகழ்கின்றன. வேதகாலத்திற்கு முற்பட்ட காலத்திலேயே சிவலிங்கங்கள் கிடைத்திருப்பதால் சிவலிங்க வழிபாடு வேதகால வழிபாட்டிற்கு மிக முற்பட்டது’’[6] என்பர் பி.டி.சீனிவாச ஐயங்கார். ஆரியர் வருகைக்கு முற்பட்ட சிந்துவெளி நாகரிகத்தில் சிவ வழிபாடு சிறந்திருந்தது என்னும் உண்மை அகழ்வாராய்ச்சியின் மூலம் நிறுவப்பட்டுள்ளது என்று கூறுகிறார் க.ப.அறவாணன்.

7. “சிந்துவெளியில் ஹராப்பாவில் அகப்பட்ட முத்திரையில் காணப்படும் மூன்று முகக் கடவுளையும் அதன் இருபுறங்களிலும் காணப்படும் விலங்குகளையும் வைத்து இது சிவன் யோகத்தில் இருக்கும் நிலை”[7] என மார்ஷலும்

8. “மொகஞ்சதாரோ முத்திரைகளில் கடவுள் ஆண் பெண் வடிவின் ஆக்கல், அழித்தல், கொடுத்தல், எட்டுருவுடையவர் போன்ற வாக்கியக் கோவைகள் காணப்படுகின்றன என ஈராசுப் பாதிரியார் கூறுகிறார். கடவுளைக் குறித்த சிவபுராணக் கருத்துகள் மிகப் பழங்காலத்திலிருந்து தொடர்ந்து வருவன என்பதை உணரலாம்”[8] என்று க.மு.கோவிந்தராய நாட்டாரும்

9. “வரலாற்றுக்கு முற்பட்ட திராவிட தேசிய மதமானது ஒருவகைச் சைவ மதமாக இருந்தது”[9] என்று டாக்டர் ஜி.யு.போப் கூறுவதாக அ.ச.ஞானசம்பந்தன் கூறுகிறார்.

10. “மெகஸ்தனிஸ் தமது இண்டிகா என்னும் நூலில் சிவன், விஷ்ணு ஆகிய இரு கடவுளரும் முன்னிலை பெற்று வருதலையும் இந்து சமயம் சைவமாகவும், வைணவமாகவும் பிரிந்திருத்தலையும் சுட்டுகிறார் அ.ச.ஞானசம்பந்தன்.”[10]

11. “குடிமல்லம் களத்தூர், குடுமியான் மலை போன்ற இடங்களில் உள்ள லிங்கங்கள் கி.மு.2ஆம் நூற்றாண்டுக்கு முன்னரே சைவ சமயம் தமிழகத்தில் பெருவழக்காகப் பரவியிருந்தது”[11] என்று மா.இராசமாணிக்கனார் கூறுகிறார்.

இவ்வாறு சமயங்கள் பற்றிய அறிஞர்களின் கருத்துகள் ஏற்புடையதாக உள்ளன.

## வழிபாடு

ஆதி மனிதன் இயற்கையோடியைந்து வாழ்ந்தான். இயற்கையின் ஆற்றலைக் கண்டு அஞ்சிய மனிதன் அதனை வழிபட ஆரம்பித்தான். பலி கொடுப்பதன் மூலம் இயற்கையினை வயப்படுத்தி விடலாம் என்ற அடிப்படையில் வழிபாடுகளும் விழாக்களும் நிகழ்த்தினான். வழிபாட்டின் மூலம் இயற்கைக்கு நன்றி செலுத்தினான். இயற்கைத் தோற்றங்களாகிய கதிரவன், மதி, மழை, மின்னல் முதலானவற்றைக் கண்டு ஏற்பட்ட வியப்பு, அதிர்ச்சி, அச்சம் என்னும் உள்ளத்து உணர்வுகளே சமயம் தோன்றக் காரணமாயின”[12] என மாக்ஸ் முல்லர் கூறுவதாக சு.சக்திவேல் கூறுகிறார்.

“வழிபாடு என்பதற்கு வழிபடு, வழியிற்செல்லுகை, பின்பற்றுகை, வணக்கம், வழக்கம், சமயக்கோட்பாடு”[13] என அகராதிப் பொருள் தருகிறது.

“இந்துக்களின் வழிபாட்டு முறையில் பல சடங்குகள் இடம்பெற்றுள்ளன.

1. ஆராதனை - வணங்குதல்
2. ஆசனம் - தெய்வத்திற்கு இருக்கை அளித்தல்
3. பாத்யம் - திருவடிகளைக் கழுவுதல்
4. அர்க்யம் - அட்சதை வழங்குதல்
5. ஆசமனியம் - உள்ளங்கையில் வைத்துப் பருக நீர் தருதல்
6. ஸ்நானம் - நீராட்டப் பால் தேன் தருதல்
7. வஸ்திரம் - ஆடை வழங்குதல்
8. உபவஸ்திரம் - மேலாடை முதலியவை வழங்கல்
9. கந்தம் - சந்தனம் முதலிய வாசனைப் பொருள் வழங்கல்
10. புஷ்பம் - பூ வழங்குதல்
11. தூபம் - கற்பூரம் சாம்பிராணி முதலியவை காட்டல்
12. தீபம் - கோயிலில் விளக்கேற்றுதல்
13. நைவேத்தியம் - அமுது படைத்தல்
14. பிரதட்சணம் - கோயிலை வலம் வருதல்
15. மந்திர புஷ்பம் - மந்திரம் அல்லது பாசுரங்களை உச்சரித்துக் கொண்டு மலர் தூவுதல்.
16. நமஸ்காரம் - சாஷ்டாங்கமாக விழுந்து வணங்குதல்”[14]

இந்நிகழ்வுகள் எல்லாம் வழிபாடுகளைச் சேரும் என்னும் கருத்து ஏற்புடையதாக உள்ளது.

**சங்ககாலக் கடவுள்**

சைவம், வைணவம், சமணம், பௌத்தம் ஆகிய சமயங்கள் தோன்றும் முன்பே பண்டைய தமிழர்களுக்குக் கடவுள் நெறியும் மெய்யுணர்வும் இருந்திருக்கின்றன. சமண, வைணவ சமயக் கோட்பாடுகளும் தொல்காப்பியத்தில் சுட்டப்பட்டுள்ளன. இதனால், தொல்காப்பியர் குறிப்பிட்ட சமயத்தைச் சார்ந்தவர் தான் என்பதற்குத் துணியவில்லை. ஆகவே, பழந்தமிழர் ஓர் இயற்கை நெறி சார்ந்த பொதுவுடைமைச் சமூகத்தார் என்பதை அறிய முடிகின்றது.

சங்க காலம் எல்லா சமயங்களிலும் அமைந்த நல்ல கோட்பாடுகளை ஏற்றுக் கொண்ட ஒரு பொதுமை நெறிக்காலமாகும்.

சங்க காலத்தில் சமய சகிப்புத்தன்மை காணப்பட்டது. பல சமயத்தவர்களும் வேறுபாடு இல்லாமல் அன்பையே இறைவனாகக் கருதி வாழ்ந்து வந்தனர். எந்நிலத்தில் வாழ்ந்தவராயினும் அந்த நிலத்திற்கான உண்மைத் தத்துவத்தை உணர்ந்து அன்புடன் வாழ்ந்தனர். தாம் வாழும் நிலத்திலுள்ள தெய்வத்திற்குக் கோயில் கட்டி, விழா நடத்தினர். மாலைகள் சூட்டி மகிழ்ந்தனர். தொல்காப்பியத்தில் முதற்பொருளான நிலத்தின் பாகுபாடு பற்றித் தொல்காப்பியர் கூறும்போது,

''மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுகமும்
வருணன் மேய பெருமண லுகமும்''[15]

என ஒவ்வொரு நிலத்தையும் தெய்வத்தோடு இணைத்துக் கூறுகின்றார். ஆகவே, காடுறையுலகு, மைவரையுலகு, தீம்புனலுலகு, பெருமணலுலகு என்ற முதற்பொருளைக் கொண்ட மாயோன், சேயோன், வேந்தன், வருணன் ஆகிய தெய்வங்களை வழிபட்டனர் என்றும் அறியலாம். இந்நிலத் தெய்வங்களை மட்டுமல்லாது பிற தெய்வங்களையும் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

''பால்வரை தெய்வம் வினையே பூதம்
ஞாயிறு திங்கள் சொல்லென வரூஉம்''[16]

என வரும் சொல்லதிகார நூற்பாவில் உலகம், உயிர், உடம்பு, தவிர்த்த ஏனையவெல்லாம் தெய்வத்தையே உணர்த்துகின்றன என்று நச்சர் தனது உரையில் விளக்கியுள்ளார்.

இவை மட்டுமின்றிப் பாடாண் திணைப் பகுதியில்,

''கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்

கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே’’[17]

என்னும் நூற்பாவில் கடவுள் வாழ்த்துப் பற்றிக் கூறியுள்ள செய்தி நோக்கத்தக்கதாகும். கொடிநிலை, கந்தழி, வள்ளி என்பனவற்றுள் முதலிரண்டும் முறையே வேந்தனது கொடியின் நிலையையும், பகைவர் அரண் அழித்தலையும் குறிக்கும் என்பர் இளம்பூரணர். ‘தலைவன் கொடியைப் புகழும் போதும் பகை அரசனின் அரணை அழித்தலைக் கூறும்போதும், பகைவரை வென்று வள்ளிக் கூத்தாடும் போதும் கடவுள் வாழ்த்தையும் இணைத்துத் தலைவனைப் புகழ்ந்து கூறல் மரபு என்று பொருள் கொள்வதே பொருத்தம் உடையதாகும்’.

இதைப் பின்பற்றியே சோழவேந்தனின் குடையையும், சக்கரத்தையும் தண்ணளியையும், ஞாயிறு, திங்கள், மலை என்ற மூன்றோடு உவமித்து இளங்கோவடிகள் வாழ்த்தினார் எனக் கருதலாம்.

## ஞாயிறு வழிபாடு

ஞாயிறு வழிபாடு பழங்காலந்தொட்டு இன்றுவரை நடைபெற்று வரும் வழிபாடாகும். பழங்கால மக்கள் இயற்கையை இறைவன் என நினைத்து மகிழ்ந்தனர். சங்க இலக்கியங்களில் காணப்படுகின்ற இயற்கை வழிபாட்டு முறைகளே சங்க காலத்திற்கு முன்னர் வழிபாட்டின் தொடக்க நிலையாக அமைந்திருந்தன எனக் கூறலாம்.

‘‘நான்முகன் வணங்கு மலர்த்தாட் சூரி’’[18]

என்று அரிச்சந்திரபுராணமும்,

‘‘விரிகதிர் முற்றா விரிசுடர் ஒத்தி’’[19]

எனப் பரிபாடலும்,

‘‘பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாங்கு’’[20]

என்று திருமுருகாற்றுப்படையும்,

‘‘ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்’’[21]

எனச் சிலப்பதிகாரமும் சூரியனை மக்கள் வழிபட்டனர் என்று சுட்டுகின்றன. உலகைப் படைக்கும் கடவுளாகிய நான்முகனே சூரியனை வழிபட்டார் என்பதை அறியமுடிகிறது. உலகின் இருளை நீக்கி உயிர்களின் இயக்கத்திற்குக் காரணமாக அமைந்த சூரியனைச் சங்க கால மக்கள் ஞாயிறு என்றே அழைத்தனர்.

“ஞாயிறு அனையன் - தோழி!
நெருஞ்சி அனையஎன் பெரும்பணைத் தோளே”[22]

என்று மதுரை வேளாதத்தன் என்னும் புலவர் நெருங்சி மலர் ஞாயிற்றை நோக்கி நிற்கும் இயல்புடையது என்கிறார்.

“நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்தும்”[23]

எனப் புறநானூறும்,

“வயங்குகதிர் விரிந்த உருகெழு மண்டிலம்”[24]

என்று அகநானூறும், அலைமோதும் பெருங்கடலில் உலக உயிர்கள் எல்லாம் தொழும் வண்ணம் சுடரொளியுடன் ஞாயிறு உதயமாகி வருகிறது என்று கூறுகின்றன. சங்ககால மக்கள் ஞாயிறை தெய்வமாக நினைத்து வழிபட்டனர் என்பதை இலக்கியங்கள் மூலம் அறியமுடிகின்றது. இன்றும் தை மாதத்தில் போகிப்பண்டிகைக்கு மறுநாள் சூரியனுக்குப் பொங்கல் வைத்து வாசலில் வண்ணக் கோலமிட்டு வழிபடுகின்றனர்.

போகிப்பண்டிகை கொண்டாடாதவர்கள் கூடச் சூரியனை வழிபடுகின்றனர். கிராமங்களில் வாசல் பொங்கல் என்னும் பெயரில் இவ்வழிபாடு இன்றும் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டுதான் இருக்கிறது.

**பிறை வழிபாடு**

சங்க காலம் தொட்டு இன்று வரை பிறையை தெய்வமாக நினைத்து வழிபடும் மரபு நிலவுகிறது. கன்னியர் பலரும் வானத்தில் தோன்றும் பிறையை வணங்கியுள்ளனர். பிறை நிலவைக் காணும் காதலர் பருவம் வந்தது என அறிந்து தலைவியைக் காண்பதற்குச் செல்வர் என்பதை,

“செவ்வாய் வானத்து ஐயெனத் தோன்றி
இன்னாப் பிறந்தன்று பிறையே”[25]

என்னும் குறுந்தொகைப் பாடல் உணர்த்துகின்றது. இளம் பிறையைச் சிவபெருமான் தலையில் சூடியதால் அனைவரும் வணங்கினர் என்பதை,

"பிறைநுதல் வண்ணம் ஆகின்றுஅப்பிறை
பதினெண் கணனும் ஏத்தவும் படுமே"[26]

என்று புறநானூற்றுப்பாடல் சுட்டுகிறது. தக்கனுக்கும் தரணிக்கும் பிறந்த இருபத்தேழு பெண்களைச் சந்திரன் மணம் செய்து கொண்டான். மாதத்தில் நாளொன்றுக்கு ஒரு மனைவியிடம் வாழ்க்கை நடத்த வேண்டும் என்பது தக்கனின் கட்டளை. சந்திரன் அதைப் பின்பற்றாததால் நாளுக்கு ஒரு கலையாகத் தேயக் கடவாய் எனச்சாபம் இட்டார். சந்திரனின் சாபம் தீர்ப்பதற்காகச் சிவபெருமான் மூன்றாம் பிறையைத் தலையில் சூடினான். தக்கன் சாபத்தால் தேய்பிறையாகி, சிவன் வரத்தால் வளர்பிறையானான்.

இன்றும் கோயில் திருவிழாக்கள், சுபநிகழ்ச்சிகள் போன்றவற்றைப் பெரும்பாலும் வளர்பிறையில் நடத்துகின்றனர். சங்க கால மக்களும் வளர்பிறையைத் தொழுதனர் என்பதை,

"ஒள்ளிழை மகளிர் உயர்பிறை தொழூஉம்"[27]

என அகநானூறும்,

"அவ்வாய் வளர்பிறை சூடிச் செவ்வாய்"[28]

என்று பெரும்பாணாற்றுப்படையும்,

"பிறைச்சந்திரனை வணங்குதல் பிறைதொழுகென்றல்"[29]

எனத் திருக்கோவையும்,

"வெண் மதிக்கொழுந் தொன்று"[30]

என்று திருவாசகமும்,

"ஓரினன் மதியத்தினை யோதுமே"[31]

என மேருமந்திர புராணமும்

பண்டையத் தமிழர்கள் பிறையைத் தொழுதனர் என்பதைச் சுட்டிக்காட்டுகின்றன. பிறை வழிபாடு சங்க காலத்தோடு முடிந்துவிடவில்லை. இசுலாமியர்கள் பிறை தொழுவது போல் இந்துக்களும் தை மாதத்தில் பிள்ளையார்க்குத் திருவிழா எடுத்து பௌர்ணமி அன்று மாவிளக்கு வைத்துத் திங்களை வழிபடுகின்றனர்.

**மழை வழிபாடு**

சங்ககால மக்கள் இரும்பை உருக்கி செய்யப்பட்ட ஊதுகோலால் ஊதி ஓசை எழுப்பி, வயல்களில் விதைத்த விதைகள் நன்றாக வளர வேண்டும் என்று வானத்தை நோக்கி வழிபட்டனர் என்பதை,

"விதைக் குறுவட்டி போதொடு பொதுளப்…..
ஊது உலைப் பெய்த பகுவாய்த் தெண்மணி"[32]

என்னும் பாடல் உணர்த்துகின்றது. இடி இடித்து மின்னலைச் செய்து மழை பொழிய வேண்டும் என்று மக்கள் வழிபட்டதை,

"கடிப்புஇகு முரசின் முழங்கி இடித்து இடித்துப்
பெய்க, இனி வாழியோ, பெருவான்!"[33]

என்று குறுந்தொகையும் மழை வழிபாட்டினை எடுத்துரைக்கின்றது.

வறட்சிக் காலத்தில் மழை பெய்யும் பொருட்டுக் கடவுளுக்கு மலர் தூவியதையும் மழை அதிகமாகும் போது குறைவதற்காக வழிபட்ட மரபையும் குறவர் மக்களின் செயலால் அறியமுடிகின்றது. இதனை,

"மலை வான் கொள்க! என் உயிர்பலி தூஉய்
மாரி அன்று மழைமேக்கு உயர்க! எனக்
கடவுட் பேணிய குறவர் மாக்கள்"[34]

என்னும் புறநானூற்றுப் பாடல் எடுத்துரைக்கின்றது. மழை பொழியாத வறட்சிக் காலங்களில் பெண்கள் ஒவ்வொரு வீட்டிற்கும் சென்று தானியங்களைப் பெற்றுக் கோயில் அருகில் மழைக்கஞ்சியைக் குடித்துப் பாட்டுப் பாடினால் மழை பொழியும் என்று நம்புகின்றனர். சில ஊர்களில் திருவிழாக்களில் அண்ணன்மார் சுவாமி கதையை ஏறத்தாழ ஒரு மாதம் நடத்துகிறார்கள். தபசு நட்டால் மழை பொழியும் என்று எதிர்பார்க்கின்றனர்.

‘அர்ச்சுனன் தபசு’ ‘மின்னலொளியால் சிவபூசை‘ போன்ற கூத்துக்களை நடத்துகின்றனர். ‘ஆடாத ஆரியக் கூத்தாடினாலும் அர்ச்சுனன் தபசுக்கு இணையாகாது’ என்பார்கள். இக்கூத்திற்காகப் பனை மரத்தை அடியோடு அறுத்து அதற்குப் பூசை செய்து கூத்தாடும் இடத்தில் குழிவெட்டி நடுவார்கள். அதற்குத் தபசு என்று பெயர். கூத்து நிறைவடையும் அதிகாலை நேரத்தில் அர்ச்சுனன் வேடமிடுபவர் முதுகில் மயிலிறகு கட்டி சந்நியாசி போல வேடமிட்டு தபசின் மீது ஏறி மழையை வேண்டிப் பாடுவார். அதனால் மழை பொழியும் என்று வருடந்தோறும் மழைக்கஞ்சி கூத்து நடத்தி வழிபடும் மரபு நவீன யுகத்திலும் தொடர்ந்து வந்து கொண்டுதான் இருக்கிறது.

**மாலை வழிபாடு**

பெண்கள் பசுமையான காம்புகளை உடைய செம்முல்லையின் அரும்புகளை அழகிய பூந்தட்டுகளில் வைத்திருப்பர். அவை மலர்ந்து மணம் வீசுவதை அறிந்து மாலைக்காலம் வந்தமையை அறிவர். இரும்பினால் செய்யப்பட்ட விளக்கில் நெய் தோய்ந்த திரியைக் கொளுத்தி, நெல்லையும் மலரையும் தூவி கைகூப்பி இல்லுறை தெய்வத்தை வழிபடுவர் என்பதை,

“இரும்பு செய் விளக்கின் ஈர்ந்திரி கொளீஇ
நெல்லும் மலரும் தூஉய் கை தொழுது
மல்லல் ஆவணம் மாலை அயர”[35]

என்று நெடுநல்வாடை உணர்த்துகின்றது.

தோள், சாயல், முறுவல், கண், மடமை ஆகியவற்றை உடைய மகளிர் அரும்பின் அவிழ்பதம் கமழுகையால் பொழுதறிந்து மாலைக்காலத்தை வழிபட்டதை,

“நெல்லொடு தூஉய்ப் பகல்மாய்ந்த மாலை”[36]

எனச் சிலப்பதிகாரமும் சுட்டுகிறது. மாலைப் பொழுதில் கோயிலின் முன் மறவர்கள் கூடி தெய்வத்தை வணங்கினர் என்பதை,

“எழுஅணி சீறூர் இருள்மாலை முன்றில்
குழுவினம் கைகூப்பி நிறப்பத் - தொழுவில்”[37]

என்று புறப்பொருள் வெண்பாமாலை கூறுகிறது. அந்திவழிபாடு என்பது ஐம்பூதங்களான நிலம், நீர், காற்று, தீ, ஆகாயம் ஆகியவற்றைப் படைத்த சிவபெருமான், திருமால், முருகன் முதலிய தெய்வங்களுக்குப் பலி கொடுப்பதற்காக அந்திக்காலத்தில் இசைக் கருவிகளை முழக்கி ஒலி எழுப்பினர். வாடாத பூவினையும் இமையாத கண்களையும் அவி என்னும் உணவினையும் அச்சம் தரும் தோற்றத்தினையும் உடைய ஏனைய தெய்வங்கள் பெரியோர் என்ற சொல்லால் குறிக்கப்பட்டுள்ளனர். அத்தெய்வங்களுக்கு உயர்ந்த பலி வழங்க அந்திக் காலத்தில் விழா எடுத்து வழிபாடு செய்தனர் என்பதை,

''நீரும், நிலனும், தீயும், வளியும்
மாக விசும்போடு ஐந்து உடன் இயற்றிய…
அந்தி விழாவில் தூரியம் கறங்க''[38]

என்னும் பாடல் மூலம் அறியலாம். சங்க காலத்தில் கதிரவன் மறையும் மாலை நேரத்தை நெல்லும் மலரையும் தூவி வரவேற்று மகிழ்ந்ததை அறியமுடிகின்றது.

**மர வழிபாடு**

இயற்கையையும் சந்திரனையும் சூரியனையும் வணங்கிய மக்கள் பசுமையான மரங்களையும் தெய்வமாக வழிபட்டனர். சிவபெருமான் ஆலமரத்திற்கடியிலும், விநாயகப்பெருமான் அரசமரத்திற்கடியிலும், முருகன் கடம்ப மரத்திற்கடியிலும் கொற்றவை வாகை மரத்திற்கடியிலும், மாரியம்மன் வேம்பின் அடியிலும் உறைவதாகக் கருதுகின்றனர்.

''தொல் மூதாலத்துப் பொதியில் தோன்றிய
நால் ஊர்க் கோசர் நல்மொழி போல''[39]

என்னும் பாடலில் தொல்மூதாலம் என்பது பழைமையான ஆல மரத்தைக் குறிக்கின்றது. அதில் தெய்வம் உறையும் என்று நம்புவதால் நன்மை தரும் சொற்களை மட்டும் பேச வேண்டும். தீமை தரும் சொற்களைப் பேசினால் துன்பம் நேரும் என்று கருதினர்.

''தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில்
கொழுப்புஆ எறிந்து குருதி தூஉய்''[40]

என்ற பாடல் வரிகள் பருத்த அடியை உடைய வேம்பின் கீழ் தெய்வம் உறைவதாகக் கருதி, கொழுத்த ஆவினைப் பலியிட்டு அதன் குருதியை மரத்தின் மேல் தெளித்து விட்டு இறைச்சியைச் சமைத்து உண்டனர் என்பதைச் சுட்டுகிறது.

''மன்ற மராஅத்த பேஎம்முதிர் கடவுள்
கொடியோர்த் தெறூஉம் என்ப யாவதும்''[41]

என்னும் பாடல் கடம்ப மரத்தில் உறைகின்ற அச்சம் தரும் தெய்வம் கொடுமை செய்பவரைக் கொல்லும் என்று கூறுகிறது.

''துறையும் ஆலமும் தொல்வலி மராஅமும்
முறையுளி பராஅய், பாய்ந்தனர் தொழூஉ''[42]

என்ற கலித்தொகைப்பாடல் ஏறு தழுவுதலுக்குச் செல்லும் இளைஞர்கள் நீர்த்துறையிலும் ஆலமரத்தின் கீழும் பழைய வலிமையுடைய மரங்களின் கீழும் இருக்கும் தெய்வங்களை வணங்கித் தொழுவினுள் பாய்ந்தனர் என்று குறிப்பிடுகிறது. பலரும் நீருண்ணும் துறைக்கு அருகில் உள்ள மரத்திற்கடியில் இருக்கும் தெய்வத்தைச் சங்க கால மக்கள் வழிபட்டனர் என்பதை அறியமுடிகின்றது.

தம் குலதெய்வத்தையும் ஊர்ப்பொது தெய்வத்தையும் பனையிலேற்றிவித்து வணங்கி வருவது தொன்று தொட்டு வரும் நெய்தல் நிலத்து வழக்கு என்கிறார் பின்னத்தூரார்.

''ஆலமர் செல்வன் அணிசால் மகன்விழாக்
கால்கோள் என்று ஊக்கி கதுமென நோக்கி''[43]

என்னும் வரிகள் ஆலமரத்திற்கடியில் இருக்கும் சிவபெருமான் மகன் முருகப்பெருமானுக்கு விழாத் தொடங்கியது என்பதைக் குறிப்பிடுகிறது.

உருவ வழிபாடு தோன்றுவதற்கு முன் சங்ககால மக்கள் மரங்களைத் தெய்வமாக நினைத்து வழிபட்ட நிகழ்வுகளுக்கு இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. இருபத்தோராம் நூற்றாண்டிலும் அரச மரத்தை ஆண் தெய்வமாகவும் வேப்ப மரத்தை பெண் தெய்வமாகவும் கருதி அரச வேம்புத் திருமண நிகழ்வுகள் நடந்தேறிக் கொண்டுதான் இருக்கின்றன. மரத்திற்கடியில் இறைவன் உறைவதாகக் கருதுவதால் அரச மரத்தைச் சுற்றினால் குழந்தை பிறக்கும் என்று நம்புகின்றனர்.

சங்க காலம் முதல் தற்காலம் வரை மரவழிபாடு தொடர்ந்து கொண்டுதான் வருகிறது.

**கார்த்திகை வழிபாடு**

கார்த்திகை பௌர்ணமியில் பெண்கள் விளக்கேற்றி வழிபட்டனர். கார்த்திகை விழாவை அகநானூறு பெருவிழா எனக் கூறுகிறது.

''அம்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றி''[44]

என்னும் பாடல் மகளிர் கூட்டம் சேர்ந்து ஆரவாரத்தோடு கார்த்திகைத் திங்களில் விளக்குகளை நிரல்பட ஏற்றி விழாக் கொண்டாடும் வழக்கம் தொன்றுதொட்டு இருந்து வருவதை அறியமுடிகின்றது.

''குறுமுயல் மறுநிறம் கிளர மதிநிறைந்து
அறுமின் சேரும் அகில்இருள் நடுநாள்
மறுகுவிளக் குறுத்து மாலைதூக்கி''[45]

என்ற பாடல் மூலம் மதி நிறைந்த நன்னாளில் இருள் அகன்ற நள்ளிரவில் வீதிகளில் திருவிளக்குகள் ஏற்றப்பட்டன் மாலைகள் தொங்கவிடப்பட்டன் ஊர்மக்கள் பலரும் ஒருசேரக் கொண்டாடும் கார்த்திகைத் திருவிழாவினைத் தலைவி தலைவனோடு கொண்டாட விரும்பினாள் என்பதை அறியமுடிகின்றது.

''அருவி ஆன்ற உயர்சிமை மருங்கில்
பெருவிழா விளக்கம் போல பலஉடன்''[46]

என்னும் பாடல் அருவி விழும் உயர்ந்த மலைச் சிகரங்களில் கார்த்திகைப் பெருவிழாவில் விளக்குகள் ஏற்றி வழிபட்டனர் என்று கூறுகிறது.

கார்த்திகை வழிபாடு இன்றும் தீபம் ஏற்றிக் கொண்டாடப்படுகிறது. தீபத் திருநாளில் வீடுகளைச் சுத்தப்படுத்தி, நீராடி வீடுகளிலும் கோயில்களிலும் விளக்குகளையேற்றி வழிபடுகின்றனர். திருவண்ணாமலை சிவன் கோயிலில் இவ்வழிபாடு மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. திருவிளக்குகளை ஏற்றுவதன் மூலம் தீய சக்திகள் தங்களை நெருங்காது என்ற நம்பிக்கையில் வழிபாடு நடத்துகின்றனர்.

கிராமங்களில் தீபத்திருநாளன்று கோயிலில் முன்பு சோளத்தட்டையைக் கத்தையாகக் கட்டி அதன் நுனியில் தீ வைத்துக் கொண்டு தீப்பந்தத்தால் ஊரை மூன்று முறை சுற்றி வந்து மீண்டும் கோயிலுக்கு அருகில் வந்து அந்தத் தட்டை நன்றாக எரிய விடுவர். பிறகு தீயைத் தாண்டுவர். இந்நிகழ்வு இன்றும் பல கிராமங்களில் நடைபெற்றுக் கொண்டுதான் இருக்கின்றது. தீப்பந்தத்தால் ஊரைச் சுற்றுவதன் மூலம் பில்லி, சூனியம் போன்ற அச்சம் தரும் தீய சக்திகளால் தங்கள் ஊருக்குக் கெடுதல் நேராது என்று நம்புகின்றனர்.

**தைநீராடல்**

மணமாகாத பெண்கள் அதிகாலையில் வையையில் நீராடி நோன்பு இருந்தால் குலம் செழிக்கும் மாதம் மும்மாரி மழை பொழியும் என்று நம்பினர். வையையில் நீராடினால் மறுபிறப்பிலும் பேறு கிட்டும் என்பதை,

‘‘முன்முறை செய் தவத்தின் இம்முறை இயைந்தேம்
மறுமுறை அமையத்தும் இயைக
நறுநீர் வையை நயத்தகு நிறையே’’[47]

எனப் பரிபாடல் விளக்குகிறது. திருமால், செவ்வேள் ஆகிய கடவுள்களை ஆராதனைப் பொருட்கள் கொண்டு மக்கள் வழிபட்டது போலவே வையையும் வழிபட்டனர் என்பதை,

‘‘தைஇ நின்ற தண்பெயல் கடைநாள்
வண்டற் பாவை உண்துறைத் தரீஇ’’[48]

என்ற அகநானூறு பாடல் மூலம் அறியலாம். தான் விரும்பிய ஆடவனைக் கணவனாக அடையும் பொருட்டுத் தைத்திங்கள் அன்று அதிகாலையில் நீராடி நோன்பு மேற்கொள்ளும் மரபு சங்க காலத்தில் இருந்ததை,

‘‘பெரும் புலர் விடியலின் விரும்பிப் போத்தந்து
தைஇத் திங்கள் தண் தயம் படியும்’’[49]

என நற்றிணையும்,

‘‘தையில் நீர் ஆடிய தவம் தலைப்படுவாயோ?’’[50]

எனக் கலித்தொகையும் சுட்டுகின்றன. சங்க இலக்கியங்களில் சுட்டப் பெறும் நீராடல் பண்பாட்டுத் தொடர்புடையது. மணமாகாத பெண்கள் மார்கழி முழுமதி நாள் தொடங்கித் தை முழுமதி நாள் வரை நாட்காலையில் நீராடி நோன்பிருப்பர்.

தைநீராடும் மகளிர் பிறர் மனைக்கண் சென்றுபாடி ஐயம் ஏற்றுக் கிடைத்தவற்றைப் பிறர்க்குக் கொடுக்கும் வழக்கத்தைக் கொண்டிருந்தனர். மரத்தால் ஆண், பெண் பாவை அமைத்து, நீராடும் மகளிர், விளையாடுங்கால் பாவைத் திருமணம் நடத்துவர். பெண்ணைக் கொள்வதற்காகச் சிறு சோறு சமைப்பர் இதனை ஆயத்திற்கு இட்டு மகிழ்வர். பாவை நோன்புக்கு வித்திட்டது கலித்தொகை என்றே கூறலாம்.

> ''மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
> நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்''[51]

என்று ஆண்டாள் மார்கழி பௌர்ணமி நாளன்று மணமாகாத பெண்களை அழைத்து அதிகாலையில் நீராடி நோன்பு இருக்கிறாள். கிருஷ்ணருக்குப் பிடித்த மார்கழி மாதத்தையே ஆண்டாளும் தேர்வு செய்கின்றாள். சங்க காலப் பெண்கள் தை மாதத்தில் நீராடியதை,

> ''தாய் அருகா நின்று தவத் தைந் நீராடுதல்
> நீ உரைத்தி வையை நதி!''[52]

எனப் பரிபாடலும்,

> ''நறுவீ ஐம்பால் மகளிர் ஆடும்
> தைஇத் திங்கள் தன் கயம் போலப்
> பலர் படிந்து''[53]

என்று ஐங்குறுநூறும் கூறுகின்றன. கார்காலத்தில் தலைப்பெயல் என்னும் மழை தொடங்கும் கார்காலத்திலும் கூதிர் காலத்திலும் மழைபெய்து ஓய்ந்துவிடும் மழைபொழியும் போது இடியும் முழங்கும் முன்பனிப் பருவமாகிய மார்கழி தொடங்கியது இப்பருவத்துக் கதிரவன் சுடுவதில்லை மழைக்காலத்தின் கடைசி மழை மட்டும் பெய்தது. மார்கழித் திங்களில் வரும் முழுமதியுடன் கூடிய திருவாதிரை நாளில் சிவன் கோயில்களில் திருவிழாவைத் தொடங்கினர்.

திருவாதிரை நாளில் திருமணமாகாத பெண்கள் தாயாருடன் சென்று, சடங்கு முறைகளை அறிந்த முது பார்ப்பினிகள் நோன்பு செய்யும் முறையை அறிவித்தவாறு, கன்னிப் பெண்கள் கூடி நல்ல கணவரைப் பெற வைகறைப் பொழுதில் நீராடி நோன்பு நோற்பது பாவை நோன்பாகும். அம்பா ஆடல் என்னும் நோன்பு தாயின் துணையுடன் சென்று நீராடி நோற்பிருப்பது.

திருமணமாகாத பெண்கள் மார்கழி மாதத்தில் அதிகாலையில் எழுந்து குளிர்ந்த நீரில் நீராடி நோன்பிருந்தால் மனதிற்கு ஏற்ற மணாளன் கிடைப்பான் என்ற நம்பிக்கை இன்றளவும் நிலவுகிறது.

**பேய் பற்றிய நம்பிக்கைகள்**

சங்க காலம் தொட்டு இன்றைய நவீன யுகத்திலும் பேய் பற்றிய நம்பிக்கைகள் உலா வந்து கொண்டுதான் இருக்கின்றன. அது மறுதலிக்கவும், நிருபிக்கவும் முடியவில்லை.

ஆவியுலக வழிபாட்டைப் பற்றி டைலர், ''சமயத்தின் தொடக்கம் ஆவிகளின் பாற் ஏற்பட்ட நம்பிக்கையிலிருந்து தோன்றியது என்கிறார்.''[54] ஆதிமனிதன் ஆவியின் சீற்றத்தைத் தணிக்க அதனை வழிபட ஆரம்பித்தான் சங்க கால மக்கள் முன்னோரது ஆவியை வழிபட ஆரம்பித்தனர். பெரும்பாலான பழங்குடி மக்களும் தமிழர்களும் ஆவி வழிபாட்டினரே. பண்டையத் தமிழர்கள் இரவின் பதினைந்தாம் நாழிகையை முடிவாகக் கொண்ட மூன்றாம் யாமப் பொழுதில் பேய்களும் வருத்தும், தெய்வங்களும் சுழன்று திரியும் என்று நம்பினர். என்பதை,

''பேயும் அணங்கும் உருவுகொண்டு ஆய்கோல்
கூற்றக் கொல்தேர் கழுதொடு கொட்ப''[55]

என்னும் மதுரைக்காஞ்சிப் பாடல் உணர்த்துகிறது. திருமாவளவன் பகைவர்களைப் போர்க்களத்தில் பிணமலை போலக் குவித்தான். கூட்டமாகிய ஆண் பேய்களும் மயிரை விரித்து ஆடி இளைக்கும், பிணத்தைத் தின்னும் தோற்றத்தையும் வளைந்த காலையும் உடைய பெண் பேய்களும் போர்க்களத்தை நெருங்கிச் சூழ்ந்ததை,

''கணம் கொள் கூகையொடு கதுப்பு இகுத்து அசைஇ

பிணம்தின் யாக்கைப் பேய்மகள் துவன்றவும்''[56]

எனப் பட்டினப்பாலை இயம்புகிறது. எண்ணெய்ப் பசையின்றிக் காய்ந்த தலைமயிரையும் அகன்ற வாயினையும், பெரிய பற்களையும் கோபத்தால் சுழல்கின்ற பசிய கண்களையும், கொடிய பார்வையினையும், பெரிய முலைகளையும், சொர சொரப்பான வயிற்றையும், இருள் பொருந்திய வடிவையும், கண்டார் அஞ்சும் நடையையும், கூரிய நகங்களையும், வளைந்த விரல்களையும் உடைய பேய்மகள் நிணத்தைத் தின்று கொண்டே துணங்கைக் கூத்தாடும் காட்சியை,

''உலறிய கதுப்பின் பிறழ்பல் பேழ்வாய்......
உருகெழு செலவின் அஞ்சுவரு பேய்மகள்''[57]

என்று திருமுருகாற்றுப்படையும்,

''நிணம்வாய்ப் பெய்த பேய்மகளிர்''[58]

என மதுரைக்காஞ்சியும்,

''இரும்பேர் உவகையின் எழந்தோர் பேய்மகள்''[59]

என்று மணிமேகலையும் கூறுகின்றன. மேல்நோக்கி எரியும் தீப் பிழம்புபோல் பேயின் நாக்கு இருந்தது.

''சுடுகாட்டுக் கோட்டத்துத் தூங்கிருளில் சென்றாங்கு
இடுபிணம் தின்னும் இடாகினிப்பேய் வாங்கி''[60]

எனச் சிலப்பதிகாரமும்,

''கருமாறிக் காதின் கவைஅடிப் பேய்மகள்''[61]

என்று சிறுபாணாற்றுப்படையும் பேய்களின் உருவத்தைச் சித்தரிக்கின்றன. தீய சக்திகளிலிருந்து மக்கள் தங்களைக் காத்துக் கொள்வதற்காகத் தெய்வங்களை வழிபட்டனர்.

**நடுகல் வழிபாடு**

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப்பாடுகளைத் தமிழா் மரபில் காண்கிறோம். வீடு பேறு என்பதைச் சுவா்க்கம் பெறுதல் என்றும் விண்ணூா்ப்புகுதல் என்றும் கல்வெட்டுகள் கூறுகின்றன. கொங்கு மண்டலத்தில் அதிக அளவில் நடுகற்கள் உள்ளன. ‘‘நடுகற்கள் கி.பி. 5ஆம் நூற்றாண்டிலிருந்து கிடைக்கின்றன. இந்தியாவில் குறிப்பாகத் தமிழகத்தில் கிடைக்கும் நடுகற்கள் இந்திய மக்களின் வீரதீரச் செயல்களையும் மகளிா் மாண்பினையும் பண்பாட்டினையும் அறிந்து கொள்ள உதவுகின்றன.’’[62] என்று கூறும் மனோன்மணி அவா்களின் கருத்தும் ஏற்புடையதாக உள்ளது.

சங்க காலத்தில் போரில் இறந்துபட்ட வீரா்களுக்குக் கல் நட்டுக் கடவுளாக வழிபட்ட மரபினை இலக்கியங்கள் வாயிலாக அறியமுடிகின்றது. முன்னோா்கள் மாடுகளைச் செல்வமாகக் கருதியதால் அதனைக் காக்கும் முயற்சியில் ஈடுபட்டு உயிா் நீத்த கரந்தை வீரா்களுக்குக் கல் நடப்பட்டதைக் காண முடிகிறது. பழங்காலத்தில் மரத்துண்டுகளையே நடு கற்களாக வழிபட்டனா். அதனைக் கந்து என்றழைத்தனா் என்பதை,

‘‘மலா் அணி மெழுக்கம் ஏறிப் பலா்தொழ
வம்பலா் சேக்கும் கந்துடைப் பொதியில்’’[63]

என்று பட்டினப்பாலை கூறுகின்றது. தெய்வம் உறையும் நெடிய தூண்களைக் களிறுகள் உரசுவதால் சாய்ந்தன. காலப்போக்கில் மரங்களால் ஆன நடுகற்கள் அழிந்துபடக் கண்டவா்கள் கல்லை நட்டு வழிபட்டிருக்க வேண்டும்.

ஆநிரையை மீட்டு உயிா் துறந்த வீரனின் வீரத்தையும் சிறப்பையும் நடுகல்லில் பொறித்து ஊருக்குப் புறத்தே தொலைவில் இருந்த திடல்களில் நடப்பட்டதை,

‘‘ஊா் நனி இறந்த பாா் முதிா் பறந்தலை
ஓங்குநிலை வேங்கை ஒள் இணா் நறுவீப்...
பல் ஆன் கோவலா் படலை சூட்ட
கல் ஆயினையே – கடுமான் தோன்றல்’’[64]

என்னும் பாடல் உணா்த்துகின்றது. இரவு நேரங்களில் ஆநிரைகளை மீட்பதற்கு வெட்சியாருடன் போரிட்டு வென்று வீர மரணம் அடைந்தவா்களின் நினைவாக நடப்படும் நடுகல்லில் வீரனின் பெயரையும் சிறப்பையும் பொறித்தனா்.

நடுகல்லின் முன்பு போருக்குப் பயன்படுத்திய வேலும், கேடயமும் நட்டு வைத்தனர் என்பதை,

''நல் அமர்க் கடந்த நாணுடை மறவர்
பெயரும் பீடும் எழுதி அகர்தொறும்
பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல்
வேல் ஊன்று பலகை வேற்று முனை கடுக்கும்''[65]

என்று அகநானூறும்,

''விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோர்
எழுத்துடை நடுகல்''[66]

என்று ஐங்குறுநூறும் பதிவு செய்கின்றன. போரில் இறந்தவர்களின் பிணங்களைத் தழை, சருகு ஆகியவற்றால் மூடுதலும் உண்டு. பாழ்பட்ட இடத்தில் நடுகற்கள் மிகுந்து காணப்படும். மேலும் நிரைமீட்டுப் போரில் இறந்துபட்ட கரந்தை வீரர்களின் பெயரும் பெருமையும் பொறித்து நடப்பட்டது.

வீரர்களுக்கு நடப்பட்ட நடுகற்கள் வரிசையாக அமைந்துள்ளன. அதற்கு மயிற்பீலி சாற்றி, துணியால் பந்தல் அமைத்துள்ளனர் என்பதை,

''காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்''[67]

எனத் தொல்காப்பியமும்,

''அவன் பெயர்கல் மிசைப்பொறித்து
கவின் பெறக் கல்நாட்டின்று''[68]

என்று புறப்பொருளும் கூறுகின்றன. போரில் இறந்த வீரனுக்கு நடுவதற்காக ஒரு கல்லைத் தேர்ந்தெடுத்து அதை நீரில் இட்டு வைத்துச் சுத்தம் செய்து நறுமணப் பொருள்களால் நீராட்டி மலர்களால் அலங்கரித்து மாலைசூட்டி நடுவார்கள். இறந்த வீரனைத் தெய்வமாக நினைத்து நாட்பலியிட்டு வழிபாடு செய்தனர் என்பதை,

''நெடுநிலை நடுகல் நாட்பலிக் கூட்டும்''[69]

என்னும் பாடல்வரி உணர்த்துகிறது. மல்லிகைப் பூக்களால் நீண்ட காலம் நிலைத்து நிற்கும் நடுகல்லாகிய தெய்வத்தை வணங்கினர். சங்க காலத்தில்

தலைவி ஒருத்தித் தனக்கு நல்ல விருந்தினரும் தன் கணவனுக்கு நல்ல பகைவனையும் வேண்டி நடுகல்லைத் தொழுதாள். பெண்யானை படுத்திருத்தலை ஒத்த குன்றுகளின் அருகில் பல வீரர்களின் பெயர்கள் பொறிக்கப்பட்டிருந்த நடுகல்லை நீராட்டி நறுமணமுள்ள மஞ்சளை ஈரம் புலராப் புறப்பகுதியில் பூசினர் ஆத்தி நாரினால் கட்டப்பெற்ற கரந்தைப் பூவினைச் சூட்டி வணங்கினர். கூட்டமாக மடிந்த வீரர் கூட்டத்திற்கு நன்றி செலுத்தும் விதமாக அவர்களை வணங்கினார்கள் என்பதை,

"நட்ட போலும் நடாஅ நெடுங்கல்
அகல்இடம் குயின்ற பல்பெயர் மண்ணி...
இளையர்பதிப் பெயரும் அருஞ்சுரம் இறந்தோர்"[70]

என அகநானூற்றுப் பாடல் உணர்த்துகிறது. மழைபெய்து ஓய்ந்து போன தைத்திங்களின் இறுதி நாட்களில் பெண்கள் இசை முழங்க வண்டல் விளையாட்டுக்குரிய பாவையை நீர் உண்ணும் துறையில் கொண்டு வந்து வைத்துக் குரவைக் கூத்திடுவர் என்று அகநானூறு கூறுகிறது.

"நல்வழிக் கொடுத்த நாணுடை மறவர்
செல்லா இல்இசைப் பெயரொடு நட்ட...
இன்புறு முரற்கை நும்பாட்டு விருப்பு ஆக"[71]

என்னும் பாடல் இன்பத்தை மிகுதிப்படுத்தும் தாளத்துடன் கூடிய பாட்டு நடுகல் தெய்வத்திற்கு விருப்பத்தைக் கொடுத்தது. மேளம் கொட்டி இசையுடன் பாடி வழிபாடு செய்தார்கள் என்று கூறுகிறது.

போரில் இறந்துப்பட்ட அதியமானுக்கும், வடக்கிருந்து உயிர் நீத்த கோப்பெருஞ்சோழனுக்கும் நடுகல் அமைத்து வழிபட்டதை,

"பாடுநர்க்கு ஈந்த பல் புகழன்னே
ஆடுநர்க்கு ஈத்தபேர் அன்பினனே.....
நனந்தலை உலகம் அரந்தை தூங்க
கெடு இல் நல்இசை ஆடி
நடுகல் ஆயினன் புரவலன் எனவே"[72]

என்ற புறநானூற்றுப் பாடல் விளக்குகின்றது. அனைவரும் வருந்துமாறு கோப்பெருஞ்சோழன் உயிர் பிரிந்தது. பாடுநர், ஆடுநர், அறவோர், திறவோர், மகளிர், மைந்தர், உயர்ந்தோர் எனப் பல நிலையினருக்கும் அவனது இழப்பைத் தாங்க முடியவில்லை. அவனது நடுகல்லிற்கு மாலை சூட்டி ஆடிப்பாடி அக்கூற்றத்தைப் பழித்துரைத்தனர்.

‘‘பலர்க்கு நிழல் ஆகி, உலகம் மீக்கூறி
தலைப் போகன்மையின் சிறுவழி மடங்கி
நிலைபெறு நடுகல் ஆகியக் கண்ணும்
இடம் கொடுத்து அளிப்ப’’[73]

என்னும் இப்பாடல் உலகை ஆளும் கடமை பூண்டவர் தம் வாழ்நாள் முழுவதும் ஆளும் பேறு உடையவராயினும் மறுமை உணர்வு வந்து தீண்ட அவர்கள் துறவு பூணுவர். அப்போதும் தமக்கு நெருக்கமான நட்புடையவர் கேட்டால் தம்முடன் அவரும் இறந்துபடுதற்கு இடமளிப்பர். நடுகல்லாகியும் இடம் கொடுத்த கோப்பெருஞ்சோழனைப் பொத்தியார் புகழ்ந்து பாடுகிறார்.

‘‘ஒளிறு ஏந்து மருப்பின் களிறு எறிந்து வீழ்ந்ததென
கல்லே பரவின் அல்லது
நெல் உகுத்துப் பரவும் கடவுளும் இலவே’’[74]

என்ற புறநானூற்றுப் பாடலில், யானைகளைக் கொன்று இறந்துபட்டவனுக்கு வைக்கப்பட்ட நடுகல்லை தெய்வமாக நினைத்து வழிபடுதலின்றி, நெல்லைத் தூவி வணங்கும் கடவுள் இவ்வூரில் இல்லை என்று மாங்குடிக்கிழார் பாடியுள்ளார்.

வீரநிலைக் குடிகளிடம் இவ்வகை வழிபாடே நிலவியிருக்க வேண்டும். அயல் நாகரிகத் தாக்கத்தால் வந்த நில தெய்வங்களைக் கடவுள் என்று ஏற்றுக்கொள்ளாத தமிழ்ப்பெண்ணின் மனநிலையை இப்பாடல் காட்டுகிறது.

‘‘அருந்தவர்க் காயினும் அரசர்க் காயினும்
ஒருங்குடன் மாய்ந்த பெண்டிர்க்காயினும்
நால்வேறு வருணப் பால்வேறு காட்டி
இறந்தோர் மருங்கிற் சிறந்தோர் செய்த
குறியவும் நெடியவும் குன்று கண்டன்ன
சுடும ணோங்கிய நெடுநிலைக் கோட்டமும்’’[75]

என்னும் மணிமேகலைப்பாடல் இத்தகு நடுகற்கள் கால வளர்ச்சியால் வருணப்பாகுபாடு தோன்றிய பின்பு அது கோயிலான நிலையைக் கூறுகின்றது. செங்குட்டுவன் தன் தாய் நற்சோணைக்குக் கல்லெடுத்துக் கங்கையில் நீர்ப்படுத்தினான். கண்ணகிக்கும் கல்லெடுத்துக் கோயில் கட்டியதிலிருந்து நடுகல் வழிபடும் நிலைக்கு வளர்ந்ததை நாம் உணர முடிகின்றது.

வீரநிலைக் காலச் சமூகத்தின் வழி வந்தவர்கள் வேற்று நாகரிக அலைகளால் தாக்கப்படாத உள்ளொடுங்கிய சிற்றூர்களில் வாழ்த்திருந்தனர். அவர்கள் வழிவழி வந்த வழிபாட்டு நெறிகளையும் வாழ்க்கைச் சடங்குகளையும் கைவிடாது போற்றி வந்தனர். போரில் இறந்த வீரனுக்குக் கல்நட்டு அக்கல்லுக்குப் பீலிசூட்டி, துடிமுழக்கி, நெல்லிற் செய்த கள்ளுடன் செம்மறி ஆட்டினைப் பலி கொடுத்தனர் என்ற செய்தியை,

> ‘‘வல்ஆண் பதுக்கைக் கடவுட் பேண்மார்,
> நடுகல் பீலிசூட்டி, துடிப்படுத்து,
> தோப்பிக் கள்ளொடு துரூஉப் பலி கொடுக்கும்’’[76]

என்னும் அகநானூற்றுப் பாடல் பதிவு செய்துள்ளது. நடுகல் வழிபாட்டு முறை எளிய சிற்றூரினர் வழிபடும் முறையாகும். இதுவே நாகரிக வளர்ச்சிக்குப் பின் நகரங்களில் பீலி(மயில்) சூட்டுவதற்குப் பதில் மலர்மாலையும், துடியோசைக்கு மாறாக மணியோசையும், கள்ளிற்கு மாற்றாகப் புனித தீர்த்தமும்(நீர்), உயிர்ப்பலி கொடுப்பதற்குப் பதிலாகச் சர்க்கரைப் பொங்கல் போன்ற திருவமுது படைத்தும் வழிபடும் முறை தோன்றியிருக்கலாம் எனக் கருத முடிகின்றது. தெய்வம் என்றாலே ஒரு மரத்தையோ, கல்லையோ நட்டு வழிபடும் பழக்கமிருந்த ஒரு சமூகத்தின் எண்ணத்தை இச்செயல் காட்டுகிறது.

சங்க காலத்தில் போரில் இறந்த வீரர்களுக்கு நடுகல் வழிபாடு நிகழ்ந்தது. அங்குக் குரவைக் கூத்து ஆடினர் என இலக்கியங்கள் சுட்டுகின்றன. இன்றும் அருந்ததியர், நாயக்கர் இனச் சமூகத்தில் குழந்தைகள் இறந்தால் மட்டும் கல் நடுவதில்லை. மற்றவர்களுக்குக் கல் நடும் வழக்கம் இருக்கின்றது. வாலிப பருவத்தினர் இறந்தால் எரியூட்டியும் அகவை முதிர்ந்தவர்களைப் புதைத்தும் கல் நட்டு வழிபடுகின்றனர். நடுகற்கள் இருக்கும் இடத்திற்கு ‘மாளா கோவில்’ என்று பெயர்.

அருந்ததியர் சமூகத்தினர் வருடந்தோறும் தை மாதத்தில் உழவர் திருநாளன்று மாளா கோவிலை வழிபடுகின்றனர். இறந்தவர்களைத் தெய்வமாக நினைத்து நடுகற்களுக்கு நல்லெண்ணெய், வாழைப்பழம், சந்தனம் ஆகியவற்றைத் தேய்த்துத் தூய்மையான நீரால் கழுவி மலர்களால் அலங்கரிக்கப்பட்டு வாணவேடிக்கையுடன் பூசை செய்யும் வழக்கம் இன்றளவும் நடைபெறுகின்றது.

சங்க காலத்தில் குரவைக் கூத்தாடியது போல இன்று புராணங்களையும், இராமாயணம், மகாபாரதக் கதைகளையும் கூத்தாக நடத்துகின்றனர். நடுகல் வழிபாட்டில் கூத்து முக்கியப் பங்கு வகிக்கிறது. ‘அரிச்சந்திரா’ சத்தியாவதி கல்யாணம், மாற்றாந்தாய் கொடுமை போன்ற சோகக் கதைகள் உள்ள கூத்துகளைப் பெரும்பாலும் நடத்துகின்றனர். குழந்தைப்பேறு இல்லாதவர்கள் தங்கள் முன்னோர்களை வழிபட்டால் குழந்தை பிறக்கும் என்றும் நம்புகின்றனர்.

**சமண பௌத்த வழிபாடு**

தேன் நிறைந்த பூக்களையும் புகையினையும் ஏந்தி விரதம் பூண்ட சாவகா் அருகதேவனை வழிபடுவர். முக்காலத்தையும் உணர்ந்து உலகத்தார்க்கு உரைப்பர் விரதங்களால் உடல் எடை குறையாமல் வைத்துக்கொள்வர் நிறைந்த கல்வியறிவு உடையவர்கள், அருகதேவனுக்கு மேட்டு நிலத்தில் அமைக்கப்பட்டுள்ள ஓவியம் தீட்டப்பட்ட சுவர்களுடன் குன்றுபோல காட்சியளிக்கும் சமணப்பள்ளியில் துறவிகள் தங்குவர். மதுரை நகரில் புறச் சமயத்தவராகிய சமண சமயத்தினர் பலர் தங்கள் சமய நெறிகளைப் பரப்பியும், வழிபாடு நடத்தியும் வாழ்ந்தனர் என்பதை,

“பூவும் புகையும் சாவகர் பழிச்ச
சென்ற காலமும் வரூஉம் அமயமும்……..
கயம் கண்டன்ன வயங்குடை நகரத்து”[77]

என மதுரைக்காஞ்சி விளக்குகிறது. அறிவர் எனப்படும் இவர்கள் எல்லா இடங்களிலும் நடக்கும் நிகழ்ச்சிகளுக்குச் சென்று அளந்து அறிந்தோர் போல கூறவல்லவர். அனுவிரதம் என்ற தங்கள் கொல்லா விரதத்தில் தலை நின்றவர். விரதங்களால் உடல் மெலியாதவர் என்பதை,

“மறுவில் செய்தி மூவகைக் காலமும்

நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்''[78]

என்னும் தொல்காப்பிய நூற்பா சுட்டுகிறது.

சிலப்பதிகாரம் பல சமயங்களையும் சரிநிகராக மதிக்கின்ற சமணக்காப்பியம். பௌத்த சமயத்தின் உயர்வினை வலியுறுத்துவது மணிமேகலை. அக்காலத்தில் பல்வேறு கோயில்களும் கோட்டங்களும் சதுக்கங்களும் வழிபாட்டுத் தலங்களாகத் திகழ்ந்தன.

''பாங்குறு முலோகா யதமே பௌத்தம்
சாங்கிய நையா யிகம்வை சேடிகம்
மீமாம் சகமாம் சமயம்''[79]

என்னும் பாடல் அறுவகைச் சமயங்களைப் பற்றிக் குறிப்பிடுகிறது.

மதுரை மாநகரில் பௌத்தப் பள்ளிகள் இருந்தமையும் அவற்றில் வழிபாடு செய்வோரின் இயல்புகளும் சுட்டப்பட்டுள்ளன. இல்லத்தில் வாழ்பவர் தங்கள் குடும்பத்துடன் சென்று மலர்தூவி போற்றி வழிபட்டனர். தாயார் தம் குழந்தைகளை அணைத்துச் செல்லும் தோற்றம், தாமரைப் பூவினைக் கையினால் பற்றிருப்பது போலக் காட்சியளித்தது. பௌத்தக் கோட்பாடாகிய ஐவகை ஒழுக்கங்களில் தங்கள் குடும்பமே சிறந்து விளங்க வேண்டுமென்பது வழிபாட்டின் நோக்கமாகும் என்பதை,

''திண்கதிர் மதாணி ஒண்குறு மாக்களை…
பூவினர் புகையினர் தொழுவனர் பழிச்சிச்
சிறந்து புறங்காட்கும் கடவுட் பள்ளியும்''[80]

என்ற பாடல் உணர்த்துகின்றது. களப்பிரர்களும் பல்லவர்களும் அரசியல் தலைமைக்கு வந்த பின்னர் வைதிக சமயங்களாகிய சைவ வைணவத்தோடு சமண பௌத்த சமயங்கள் ஒன்றோடொன்று கடும் போட்டியிட்டாலும் தொடக்க காலத்தில் செல்வாக்கோடு திகழ்ந்தன. சைவ வைணவ வளர்ச்சிக்குப் பின் வைதிக சமயங்கள் தேய்ந்து மறைந்தன. ''சமணர் பௌத்தர் இருவருக்குமே கடவுள் உண்டு என்னும் கொள்கையில் உடன்பாடில்லை. கடவுள் உண்டு என்பதை உறுதியாக நம்புதல்

பழைய மரபு. இம் முரண்பாடே சமணமும் பௌத்தமும் குன்றுவதற்குக் காரணமாக அமைந்தது”[81] என்கிறார் முத்து சந்தானம். இவருடைய கருத்து ஏற்புடையதாக உள்ளது. சமண பௌத்த வீழ்ச்சிக்குச் சைவ சமயக் குரவர்களே காரணம் என்பதை மறுக்க முடியாது.

**சிவன் வழிபாடு**

சிவன் என்னும் சொல் பழந்தமிழாகிய தொல்காப்பியத்திலும், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய சங்க இலக்கியங்களிலும் குறிக்கப்பெறவில்லை. ஆயினும் சங்கப் பாடல்கள் பலவற்றில் சிவபெருமானது இயல்புகள் விளக்கப்பட்டுள்ளன. இறைவனின் பொதுவான இயல்புகளாகக் காணப்படும் செய்திகளும் அடையாளங்களும் பிற்காலச் சைவ நூல்கள் கூறும் சிவனது வடிவத்தை ஒத்துள்ளன.

சிவவழிபாடு பற்றிப் பல்வேறு அறிஞர்களின் கருத்துகள் பின்வருமாறு:

1. “சிவன் என்னும் சொல்லிலிருந்து வந்ததே சைவம்”[82] - லட்சுமணன்.
2. “சிவம் என்ற சொல்லுக்கு நன்மை, முக்தி, செம்மை, மங்கலம் என்று பொருள்”[83] – கந்தையாபிள்ளை.
3. “சைவம் என்பது புலால் நீக்கிய உணவை உட்கொள்ளும் வாழ்க்கையைக் குறிக்கும்”[84] – மிழலைத்தொண்டன்.
4. “அன்பை உயிர்நாடியாகக் கொண்ட நெறியே சிவநெறி”[85] – மா.இராசமாணிக்கனார்.
5. “சிவகதி என்ற சொல் வீட்டின்பத்தைக் குறிக்கும்”[86] – தோலாமொழித்தேவர்.
6. “சைவமும் தமிழும் ஒன்றையொன்று பிரிக்க இயலாதவாறு பின்னிப் பிணைந்தவை”[87] - இராதாதியாகராசன்.

7. ‘‘தமிழினத்தின் சிந்தனையின் பயனாகச் சிந்தனைத் தெளிவின் பயனாக அறிவின் ஆக்கமாகத் தோன்றியதே சிவநெறி’’[88] – குன்றக்குடி அடிகளார்.

இவ்வாறு அறிஞர்கள் சிவம் என்ற சொல்லுக்கு பல்வேறு பொருள் உறைக்கின்றனர். இவ்வுலகில் ஐம்பூதங்களையும் படைத்து அவற்றை இயக்குபவன் இறைவனே என்பதை,

‘‘நீரும் நிலனும் தீயும் வளியும்
மாக விசும்போ டைந்துடன் இயற்றிய
மழுவாள் நெடியோன் தலைவனாக’’[89]

என மதுரைக்காஞ்சி வரிகள் உணர்த்துவதோடு மழுப்படையினை உடையவனாகிய சிவபெருமானே பிற கடவுளுக்குத் தலைவன் என்பதைச் சுட்டுகிறது.

‘‘முக்கட் செல்வர் நகர்வலம் செயற்கே!
இறைஞ்சுக பெரும! நின் சென்னி’’[90]

என்னும் புறநானூற்றுப்பாடல் முக்கண் படைத்த சிவன் நகர்வலம் சென்ற போது அந்தணர்கள் வணங்கினர் எனக் கூறுகிறது.

‘‘கறைமிடற்று அண்ணல் காமர் சென்னிப்
பிறை நுதல் விளங்கும் ஒருகண் போல’’[91]

என்ற பாடல் மூலம் தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்த போது வெளிவந்த ஆலகால விடத்தைச் சிவன் உண்டான். அன்று இரவு முழுவதும் தூங்காதிருந்த நாளை மக்கள் சிவன் ராத்திரி விழாவாகக் கொண்டாடுகின்றனர் என்பதை அறியமுடிகிறது.

‘‘கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
வண்ண மார்பின் தாரும் கொன்றை…’’[92]

என்னும் பாடல் சிவன் திருமுடியில் சூடும் மாலை கார்காலத்தில் மலரும் கொன்றைப் பூவால் ஆனது. வெண்ணிறக் காளையை வாகனமாகவும், ஆலகால விடத்தை உண்டதால் கழுத்து அழகு பெற்றதாகவும் புறநானூறு சுட்டுகிறது.

இமயமலையை வில்லாக வளைத்தவன். கங்கையினைத் தலையில் தாங்கியவன் உமையவளை இடது பாகத்தில் கொண்டவன் என்று சிவனின் பெருமைகளைக் கலித்தொகை எடுத்துக்கூறுகிறது.

சிவன் திராவிடர்களின் முழுமுதற் கடவுள். சங்க இலக்கியத்தில் பிற பெயர்களால் அறியப்பட்டவர். முக்கட் செல்வன், செஞ்சடைக்கடவுள், பிறவா யாக்கைப் பெரியோன், ஏறூர்தியான் போன்ற பெயர்களில் சங்ககாலத் தமிழர்கள் சிவனை வழிபட்டனர். பண்டைய காலத்தில் இறை வணக்கம் செய்வதற்காகக் கல்தறிநட்டு அதனை வணங்கி வந்தனர். அக்கல்தறி பின்னாளில் சிவலிங்க உருவமாகக் கொள்ளப்பட்டது. அதற்கு மலர் முதலியவற்றால் ஒப்பனை செய்து மெழுகிட்டு விளக்கேற்றி ஊர் மக்கள் வழிபாடு செய்தனர் என்பதை,

''அந்தி மாட்டிய நந்தா விளக்கின் ..........
வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில்''[93]

எனப் பட்டினப்பாலை பாடல் மூலம் அறியலாம். தாய் வயிற்றில் தங்கிப் பிறக்காத சிவபெருமான், ஆறுமுகத்தையுடைய முருகன், வெண் சங்கு நிறமுடைய பலதேவன், நீலமணி நிறமுடைய திருமால், நான்முகம் படைத்த பிரம்மன் ஆகியோரின் கோயிலிலும் வேள்விகளும் விழாக்களும் நடைபெற்றுள்ளது என்பதை,

''பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
ஆறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்
வால்வளை மேனி வலியோன் கோயிலும்''[94]

என்னும் சிலப்பதிகாரப் பாடல் மூலம் அறிய முடிகின்றது. பலராமன், பிரம்மா, இந்திரன் ஆகியோருக்கும் சங்க காலத்தில் வழிபாடு நடந்துள்ளதை இப்பாடல் தெரிவிக்கிறது. ஆனால் இன்றைய காலகட்டத்தில் சிவன், முருகன், திருமால் ஆகியோருக்கு வழிபாடுகள் நடத்தப் பெறுவது போல அவர்களுக்கு நடத்தப்பெறுவதில்லை.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சிவவழிபாடு சிறப்புற்றிருந்தது போல இன்றும் சிவாலயங்களில் வழிபாடுகள் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கின்றன.

**திருமால் வழிபாடு**

ஒரு நிலத்திற்கு ஒரு தெய்வம் என்னும் கருத்துத் தொல்காப்பியர் காலத்தில் தோன்றிவிட்டது போலவே ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய தொழில்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தெய்வத்தால் செய்யப்படுகின்றது என்ற கருத்தும் ஏற்பட்டிருக்க வேண்டும்.

''மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பிற்
தாவா விழுப்புகழ்ப் பூவைநிலை''[95]

எனக் கூறுவதிலிருந்து மக்களைக் காக்கும் மன்னனைக் காக்கும் கடவுளாகிய திருமாலுடன் ஒப்பிட்டனர் என்பதை அறியலாம். எனினும் சிவன், நான்முகன் பற்றியோ தொல்காப்பியர் குறிப்பிடவில்லை. கோவலர்களில் வீரனே காவலன் அவர்களின் கைக்கோல் செங்கோல் ஆனது என்ற எண்ணம் தோன்றுகின்றது. மக்களைக் காக்கும் வேந்தன் கறவைக் காவலனாகிய மாயவனோடு உவமிக்கப்படுகிறான். மன்னனை அடிப்படையாகக் கொண்ட சமூகமாதலால் சங்ககாலம் சிவனைவிடக் காக்கும் கடவுளாகிய திருமாலையே அதிகமாய்ப் பேசியிருக்கின்றன.

கிருஷ்ணன், விஷ்ணு, கோவிந்தன், தாமோதரன், கேசவன், பத்மநாபன், மணிவண்ணன், உலகளந்த கோமான், பூவண்ணன், நாராயணன், மாதவன், வைகுந்தன், மாயவன், முகில்வண்ணன், மாயோன் ஆகிய பெயர்களால் அழைக்கப்படும் திருமால் முல்லை நில மக்களான இடையர்களின் தெய்வமானான். இவன் அழகிய நீலமணி போன்ற மேனியை உடையவன், விண்ணைத் தொடும்படி உயர்ந்த கருடக் கொடியை உடையவன், வெற்றியை விரும்புபவன் என்பதை,

''மண்ணுறு திருமணி புரையும் மேனி
விண் உயர்புட் கொடி விறல் வெய்யோனும்''[96]

என்னும் புறநானூற்றுப் பாடல் கூறுகிறது. ஆயர் மகளிர் யமுனையாற்றில் நீராடும்போது அவர்கள் ஆற்றங்கரையில் வைத்திருந்த ஆடைகளைக் கண்ணன் எடுத்துக் கொண்டு அருகிலிருந்த குருந்த மரத்தின் மீதி ஏறினான். அப்போது அங்கு வந்த பலராமனைக் கண்டதும் வேறு வழியில்லாமல் குருந்த மரத்துக்கிளையினை வளைத்துக் கொடுத்தான் என்பதை,

''வண் புனல் தொழுநை வார்மணல் அகன்துறை...
மரம் செல மிதித்த மாஅல் போல''[97]

என்ற அகநானூற்றுப் பாடல் மூலம் அறியலாம். திருமால் வலம்புரிச் சங்கினையும், சுதர்சனச் சக்கரத்தையும் கைகளிலும், திருமகளை மார்பிலும் தாங்கியவர் அவருக்கு மாலைப் பொழுதில் அகவை முதிர்ந்த பெண்கள் முல்லைப் பூக்களையும் நெல்லையும் தூவி வணங்கினர் என்பதை,

"வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல் போல.......
அரும்பு அவிழ் அலரி தூஉய் கைதொழுது"[98]

என்னும் பாடல் உணர்த்துகிறது. மாவலி சக்ரவர்த்தி வேள்வி நடத்துகின்றான். எவர் வந்து தானம் கேட்டாலும் இல்லை என்று சொல்லாமல் கேட்டதை எல்லாம் கொடுத்தான். அப்போது கண்ணன் வாமன அவதாரம் எடுத்து மார்பில் பூணூல் அணிந்து குடையைப் பிடித்துக் கொண்டு மாவலிச் சக்ரவர்த்தியிடம் தன் காலால் மூன்றடி நிலம் கேட்டான். மாவலி நீயும் மூன்றடி உயரம், நீ கேட்பதும் மூன்றடி நிலம், அதை வைத்து என்னச் செய்யப் போகிறாய், வேறு ஏதாவது தானம் கேள் என்றான். அதற்கு வாமனன் மறுத்தான். மாவலி கமண்டலத்தில் இருக்கும் நீரைத் தாரை வார்த்துக் கொடுக்கும் தருணத்தில் சுக்கிராச்சாரியர் வண்டாக மாறி கமண்டலத்திலிருக்கும் துவாரத்தை அடைத்தான். கண்ணன் தர்பைப் புல்லால் துவாரத்தின் வழியாகக் குத்தினான். கண் குருடாகி வழி விட்டார் சுக்கிராச்சாரியார்.

வாமனனாக இருந்த கண்ணன் திரிவிக்கிரமனாக மாறி மண்ணுலகை முதலடியாகவும், விண்ணுலகை இரண்டாவதடியாகவும் அளந்து மூன்றாவதடிக்கு எங்குக் கால் வைப்பது எனக் கேட்டான். மாவலியன் கர்வம் அடங்கி தன் சிரசின் மீது கால் வைக்கச் சொன்னான். மாவலி வேண்டுகோளுக்கு இணங்க அவன் இறந்த நாளை சேர நாட்டினர் திருநாளாகக் கொண்டாடுகின்றனர் என்பதை,

"கணங்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்
மாயோன் மேய ஓண நன்னாட்"[99]

என்னும் பாடல் உணர்த்துகின்றது. மாவலியைத் திருமால் வதம் செய்ததால் ஆவணித்திங்களில் அவரைப் போற்றும் விதமாகவும் மாவலியின் சிறப்பை உணர்த்தவும் ஓணம் திருவிழாக் கொண்டாடப்படுகிறது.

கூட்டமாகப் போர் செய்த அவுணரை வென்ற கருநிறம் உடைய திருமால் பிறந்த நாளில் மதுரையில் ஓணம் விழா நிகழ்த்தப் பெற்றது. அவ்விழாவில் வீரர்கள் சேரிப்போர் நிகழ்த்துதல் வழக்கமாகும். யானைகளுக்குப் போர்ப்பயிற்சி அளிக்கும் முறை இருந்தது. நெருஞ்சிமுள் போல் முனைகளுடைய இரும்பால் செய்த உருண்டைகளை யானைமுன் வீசும் போது, யானை அதனைக் கண்டு அஞ்சும். குத்துக்கோல் வைத்திருப்பவர் யானைகளை அடக்கிப் பிடித்துக் கொள்வார்.

இவ்விழா தமிழ்நாட்டில் கொண்டாடவிட்டாலும் சேரநாட்டில் உள்ள மக்களால் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

சங்க காலத்தில் திருமால் வழிபாடு நடந்தது போல் இன்றைய காலத்தில் ஆடிபதினெட்டு, தீபாவளித்திருநாள், வைகுண்ட ஏகாதசி, கிருஷ்ண ஜெயந்தி, கார்த்திகைத்தீபம், பங்குனி உத்திரம், தைப்பூசம், சித்ரா பௌர்ணமி, வைகாசி விசாகம் போன்ற நாட்களிலும் புரட்டாசி, மார்கழி மாதம் முழுவதும் திருமாலுக்கு வழிபாடுகள் நடந்து கொண்டுதான் இருக்கின்றன.

**முருக வழிபாடு**

தமிழர்களின் முதற்கடவுள் முருகனே. இன்றும் பழங்குடி மக்கள் அவனையே வழிபடுகின்றனர். வேதகாலக் கடவுள்கள் முதன்மையிழந்து புராணக் கடவுள்கள் ஏற்றம் பெற்றதன் பின்னர் இயற்றப்பட்ட காரணத்தால் தான் தொல்காப்பியர் முருகப் பெருமானைச் சேயோன் எனக் குறிப்பிடுகிறார். தமிழகத்தில் வேலன் வழிபாடே இருந்தது. பரிபாடலில் செவ்வேளைப் பாடுகின்ற இச்செய்தியினைப் புலவர் குறிப்பிடுகிறார்.

குறிஞ்சிக் கடவுளாகிய முருகன் செந்நிறம் கொண்டவன். மலையின மக்கள் சிவந்த மலர்களால் வழிபட்டனர் கடம்ப மாலை அணிந்தவன். தமிழ்நாட்டில் குன்றுதோறும் குறிஞ்சி நில மக்கள் முருகனை வழிபட்டனர். சேவல், மயில்,

மணிகள், கடம்ப மலர், அணையாத் திருவிளக்கு முதலியவற்றை வழிபடு பொருளாக வைத்தனர்.

மனித நாகரிகத்தின் தொட்டிலெனத் திகழ்வது லெமூரியாக் கண்டம் என்பார் அறிஞர் ஸ்காட் எலியட். இக்கண்டத்தின் முகடுகளிலேயே முதல் மனிதன் தோன்றினான். லெமூரியாக் கண்டத்தில் இருந்ததாகக் கருதப்படும் மகேந்திர மலையில் முருகனின் ஆலயம் இருந்தது எனச் சிலர் நம்புகின்றனர்.

தமிழகத்தில் திருநெல்வேலி ஆதிச்சநல்லூர் ஆகிய இடங்களில் புதை பொருள் ஆராய்ச்சி நடந்த போது ஈழத்தாழிகள் சில கண்டெடுக்கப்பட்டன. அவற்றிலிருந்து கி.மு.2000 ஆண்டுக்குரிய பெருங்கற் பண்பாடு இங்கெல்லாம் நிலவியிருக்கலாம் என்பதை அறியமுடிந்தது. இவற்றோடு வேற்சிலை, காவடிச்செய்திகள், வேல் முதலியவை கிடைத்தன. இந்த ஆதாரங்களைக் கொண்டு முருக வழிபாடு தொன்மைக் காலத்திலேயே நிலவியிருத்தல் வேண்டும் என்று புதை பொருள் ஆய்வாளர்கள் முடிவு செய்தனர். இ∴து உண்மையாயின் முருகவழிபாடு கி.மு.2000 ஆண்டுக்கு முந்திய தொன்மையுடையது என்று கூறுவதில் தவறில்லை. தமிழர் முருகனைத் தம் தெய்வம் என்று பெருமை கொள்வது நியாயமானதே.

''விண் உயர் புட்கொடி விறல் வெய்யோனும்
மணி மயில் உயரிய மாறா வென்றி
பிணிமுக ஊர்தி ஒண் செய்யோனும்''[100]

என்ற பாடல் விண்ணைத் தொடும்படி உயர்ந்த கருடக் கொடியை உடையவன் கண்ணன். அழகிய மயிலைக் கொடியாக உயர்த்தியவன். வெற்றிதரும் பிணிமுகமாகிய யானையை ஊர்தியாகக் கொண்டவன் செய்யோன் என்னும் முருகன் என்று கூறுகிறது.

''தாமரை புரையும் காமர் சேவடி...
குன்றி ஏய்க்கும் உடுக்கை குன்றின்
நெஞ்சுபக எறிந்த அம்சுடர் நெடுவேல்
சேவல்அம் கொடியோன் காப்ப''[101]

என்னும் பாடல் தாமரை போன்ற சிவந்த அடிகளையும், பவளம் போல ஒளியும், குன்றிமணியை ஒத்த செந்நிற ஆடையையும், ஒளிவீசும் வேலினையும் சேவல் கொடியையும் உடையவன் முருகன் எனக் குறுந்தொகை வர்ணிக்கிறது.

"குன்றக் குறவன் கடவுள் பேணி
இரந்தனன் பெற்ற எல் வளைக் குறுமகள்"[102]

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் மூலம் குன்றத்தின்கண் வாழும் குறவன் தன் குலதெய்வமாகிய முருகனை வழிபட்டுக் குறையிரந்து பெற்ற ஒள்ளிய வளைகளை அணிந்த இளமகள் இத்தலைவி எனக் கூறுவதன் மூலம் இங்கு மலைவாழ் மக்கள் குல தெய்வமான முருகனிடம் வேண்டி குழந்தை வரம் பெறுதலை அறியமுடிகிறது. தலைவியின் தந்தை பன்னாள் மலையுறை கடவுட்குப் பாடு கிடந்து அக்கடவுள் அருளால் பெற்ற அரிய செல்வமாவாள் என்று கூறுவதன் மூலம் சங்க கால மக்கள் பெண் மகவு அளிக்குமாறு இறைவனை வேண்டியதை அறிய முடிகிறது.

"அருங்குறும் பெறிந்த கானவர் உவகை...
வான்தோய் மீமிசை யயருங் குரவை"[103]

என்னும் பாடல் குறிஞ்சி நில மக்கள் நீராடிய ஆடை புலராதபடி இருந்து வழிபட்டதையும் விழா எடுக்கும் போது அயலூரில் வாழும் தம் உறவினர்களையும் அழைத்து அவரோடு கள்ளுண்டு மகிழ்ந்து குரவையாடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர் என்பதையும் உணர்த்துகிறது.

"பெருமுலை அலைக்கும் காதின் பிணர்மோட்டு...
நிணம்தின் வாயள் துணங்கை தூங்க"[104]

என்ற பாடல் முருக வழிபாட்டின் ஒரு பகுதியாகப் பேய் மகளிர் துணங்கைக் கூத்தாடி மகிழ்ந்தமையை எடுத்தியம்புகிறது.

குறிஞ்சி நில மக்கள் முருகனைக் குல தெய்வமாக நினைத்து வழிபட்டுத் தேனாகிய பலியை அள்ளிச் சொரிந்தனர் என்பதை,

"மன்ற வேங்கை மலர்சில கொண்டு
மலையுறை கடவுள் குலமுதல் வழுத்தி"[105]

என்னும் பாடல் விளக்குகிறது. சங்க காலக் குறிஞ்சி நில மக்களிடத்தில் வெறியாடல் என்னும் நிகழ்வு வேலனோடு தொடர்புடையதாக இருந்தது. தலைவியின் நோயை நீக்குவதற்குப் படிமம் செய்து அதில் கழற்சிக்காய்களை வேலன் தூக்கிக்கொண்டு வெறியாடும் வழக்கம் இருந்ததைக் காண முடிகின்றது.

"பொய்ய மரபின் ஊர்முதுவேலன்...
முருகென மொழியுமாயின்
கெழுதகை கொல்இவள் அணங்கி யோற்கே"[106]

வெறியாடல் என்பது முருக வழிபாட்டின் நிகழ்வுகளில் ஒன்று. அன்னையானவள் மகள் தெய்வத்தால் நோயுற்றாள் என ஐயுற்று அவள் நோயைத் தணிப்பதற்காக வெறியாட்டு நிகழ்த்த வேலனை அழைத்து வெறியாடுங்களம் அமைத்துக் கண்ணி சூட்டி, கோயில்பாடி பலி கொடுப்பித்துச் செந்தினையைக் குருதியுடன் கலந்து தூவி முருகனை வரவழைப்பாள். அவனது களிற்றையும் கடம்பையும் பாடிக் கடம்ப மாலையினையும் பனந்தோட்டினையும் கைக்கொண்டு இரவெல்லாம் ஆடுவர்.

திருமுருகாற்றுப்படை முருகப் பெருமான் புகழ்பாடும் இலக்கியமாகத் திகழ்ந்தாலும் மற்ற இலக்கியங்களிலும் முருகன், முருகு, சேவற்கொடியோன், செவ்வேள் என்று முருகனின் பெயர்களைச் சுட்டி வழிபாடுகள் நிகழ்ந்தமையை உணர்த்துகின்றன.முருகனுக்குச் சந்தனம், குங்குமம் முதலான மணக்கலவைகள், காற்றில் அவியாத விளக்கு, நறுமணம் கமழும் மலர்கள், இனிய இசை தரும் மத்தளிகை, மணி, கயிறு, மயில், கோடாரி, பிணிமுகம் என்னும் யானை ஊர்தி ஆகியவற்றை வைத்து வழிபட்டனர் என்பதை,

"வேறுபடு சாந்தமும் வீறுபடு புகையும்
ஆறுசெல் வளியின் அவியா விளக்கமும்
நாறு கமழ் வீயும் கூறும் இசை முழவமும்"[107]

என்று பரிபாடல் உணர்த்துகிறது. குறிஞ்சி நிலப் பெண்கள் நாங்கள் கருவுற்றால் உனக்கு நேர்த்திக்கடன் செலுத்துவோம் என்று வேண்டினர் என்பதை,

"கரு வயிறு உறுக எனக் கடம்படுவோரும்

செய் பொருள் வாய்க்க எனச்செவி சார்த்துவோரும்''[108]

என்னும் பாடல் உணர்த்துகின்றது. கடம்ப மரத்தின் கொடியினை உயர்த்திக் கட்டி, மாலை சூட்டி, வெறியாடும் களத்தில் ஆட்டின் கழுத்தை அறுத்துப் பல வகை இன்னியம் ஒலிப்ப வெறியாட்டெடுப்பர். பலிகொடுத்தால் நோய் தணியும் என்ற நம்பிக்கை அக்காலத்தில் நிலவியது. பெரும்பான்மையாக ஆடவரே வெறியாட்டு நிகழ்த்தினர். சிறுபான்மை மகளிராலும் வெறியாட்டு நிகழ்த்தப் பெறுதலும் உண்டு.

குறவர்கள் முருகனைக் குலதெய்வமாக நினைத்து வேங்கை மலரைத்தூவியும் தேனைச் சொரிந்தும் வழிபட்டனர் என்பதை,

''தேம்பலிச் செய்த ஈர்நறுங் கையள்''[109]

என்னும் பாடல் உணர்த்துகிறது. திருமுருகாற்றுப்படையில் மலைக்குறவர்கள் மழை பொழிய வேண்டும் என்று முருகனை வழிபடுகின்றனர்.

முருக வழிபாட்டில் தைப்பூசமும், பங்குனி உத்தரமும், கந்த சஷ்டி விழாவும் குறிப்பிடத்தக்கது. சஷ்டி நாளில் திருமணமான பெண்கள் விரதம் இருந்தால் குழந்தை பிறக்கும் என்று நம்புகின்றனர். ''சஷ்டியில் இருந்தால் அகப்பையில் வளரும்'' என்ற பழமொழி காலப்போக்கில் ''சட்டியில் இருந்தால்தான் ஆப்பையில் வரும்'' என்று மாறிவிட்டது. சங்க கால மக்கள் நேர்த்திக்கடன் செலுத்தியது போல இன்றும் மக்கள் பாதயாத்திரை சென்றும், காவடி எடுத்தும் நேர்த்திக்கடன் செலுத்துகின்றனர்.

தமிழ்நாட்டில் மட்டுமல்ல, இலங்கை, மலேசியா போன்ற நாடுகளிலும் முருக வழிபாடு சிறப்பாக நடைபெற்று வருகின்றது.

இவ்வாறு சங்க இலக்கியப்பாடல்கள் மூலம் தமிழ்க் கடவுளான முருக வழிபாடு பற்றி அறியமுடிகின்றது.

**தாய்தெய்வ வழிபாடு**

சங்க இலக்கியங்களில் தாய்தெய்வங்களின் வழிபாடுகள் பற்றிய செய்திகள் பரவலாகக் காணப்படுகின்றன. தாய், தெய்வங்களைப் பெற்ற தெய்வமாகவும் அழியாக் கன்னியாகவும் கருதப்படும் நிலை தொன்றுதொட்டு வந்ததாகும்.

சிறுதெய்வத் தோன்றலுக்கும் வழிபாட்டிற்கும் மூலக்காரணமாய் அமையும் தெய்வத்தைத் தாய்தெய்வம் என்பர். கானமர் செல்வி என்ற சங்க காலத் தாய்தெய்வம் முருகனைப் பெற்ற தாயாகத் தக்கயாகப் பரணி கூறுகிறது. இவை வெவ்வேறு காலகட்டங்களில் மாறுபட்ட பெயர்களால் வழங்கப்பட்டது.

**கடல் கெழு செல்வி**

கங்கை, காவிரி, சரஸ்வதி, யமுனை போன்ற ஆறுகளைப் பெண் தெய்வங்களாக வழிபட்டனர். கன்னியாகுமரிதெய்வம் தாய்தெய்வமாகவும் கடலோரக் காவல் தெய்வமாகவும் கன்னி தெய்வமாகவும் வணங்கப்படுகிறது. இத்தெய்வம் சங்க இலக்கியத்தில் கடல் கெழு செல்வி எனப் புனையப்பட்டுள்ளதை ,

''கடல்கெழு செல்வி கரைநின்றாங்கு
நீயே கானல் ஒழிய யானே....
ஆற்றேன் தெய்ய அலர்கவிவ் வூரே!''[110]

என்னும் பாடல் விளக்குகிறது. மக்கள் தாங்கள் செய்த பாவங்களைத் தீர்க்க நோன்பிருந்து நீராடியும், அணிகலன்களைத் துறந்து மகளிர் வெறியாட்டம் நிகழ்த்தியதும் புலப்படுகிறது.

**வனத்துர்க்கை**

அடர்ந்த காடுகளைத் தன் நாடாகக் கொண்டு வாழும் தெய்வங்களைக் காடமர் செல்வி என்று கூறுவர்.

''வலைவலந்தன்ன மென்னிழல் மருங்கிற்
காடுறை கடவுட்கடன் கழிப்பிய பின்றை''[111]

என்ற பொருநாராற்றுப்படை வரிகள் வனத்துர்க்கையைக் காடுறை கடவுள் என்று குறிப்பிடுகின்றன.

மலைகளில் வாழக்கூடிய மக்கள் இலைகளான ஆடைகளை அணிந்து கொண்டு வனத்துர்க்கையை வழிபட்டனர் என்பதை,,

“தழையணிப்பொலிந்த கோடேந்து அல்குல்”[112]

என்னும் பாடல்வரி உணர்த்துகிறது. இத்தெய்வம் காடுகள் அடர்ந்த பகுதியிலும் மலைமேலும் இருந்ததை அறியமுடிகின்றது.

காடுகளில் இருக்கும் தெய்வத்தைச் சில மலையின மக்கள் நிர்வாண பூசை செய்து வழிபடுவதும் உண்டு. பெண்கள் ஒன்று கூடி நிர்வாண பூசை செய்யும் போது, ஆண்கள் ஊர் எல்லையில் வேறு யாரும் உள்ளே நுழையாதவாறு காவல் இருப்பர். ஆண்கள் பூசை செய்யும் போது பெண்கள் காவல் காப்பர்.

சங்ககால மக்கள் இலைகளை உடுத்தி பூசை செய்தனர். நவீன காலத்திலும் இது போன்ற வழிபாடுகள் நடந்தேறியுள்ளன.

**கொல்லிப்பாவை**

சங்க இலக்கியத்தில் கொல்லிப்பாவை பற்றிய செய்திகள் விரவிக் கிடக்கின்றன. பாவை என்ற சொல்லுக்குக் கொல்லிமலையில் வரையப்பட்ட அழகிய பெண் ஓவியம் என்றும் பூதம் புனைந்த பாவை என்றும் தெய்வமாகவும் வழிபட்டதை,

“பயங்கெழு பலவின் கொல்லிக் குடவரைப்
பூதம் புணர்த்த புதிதியல் பாவை”[113]

என நற்றிணைப் பாடல் வழி அறியமுடிகின்றது. கொல்லிப் பாவையைக் கண்டோர் மயங்கி வீழ்ந்து உயிர் விடுவர், எதிரில் வருபவர்களை நகைத்தே கொல்லும் என்பது மக்களின் நம்பிக்கையாகும்.

“பெரும்பூட் பொறையன் பேஎமுதிர் கொல்லிக்
கருங்கட் டெய்வங் குடவரை யெழுதிய
நல்லியற் பாவை யன்னவிம்”[114]

என்னும் பாடல்வழி கொல்லிப்பாவை தீயோரைக் கொல்லும் தெய்வமாகக் கருதப்பட்டதை அறியமுடிகின்றது கொல்லிமலையிலும் அதனைச் சுற்றியுள்ள பிற மலைகளிலும் இத்தெய்வமே முதலில் தோன்றியது எனலாம். புலித்தோலை

ஆடையாகக் கொண்ட இத்தெய்வம் பழங்குடி மக்களால் புள்ளிக் கருங்காளி என அழைக்கப்படுகிறது.

நாமக்கல் மாவட்டத்திலுள்ள கொல்லிமலை இலக்கியங்களில் எடுத்தாளப்பட்டுள்ளன. மலையில் இருக்கும் பாவை பார்ப்பவரை மயக்கிக் கொள்ளும் என்பதால் கொல்லிப்பாவை என்றழைக்கின்றனர். (கொல்லி – கொல்லும், பாவை – பெண்)

**கானமர் செல்வி**

''கானமர் செல்வி அருளலின் வெண்காற்
பல்படைப் புரவி எய்திய தொல்லிசை''[115]

என்னும் பாடல் மூலம் கானமர் செல்வி என்ற தாய்தெய்வம் அருளியதால் நன்னன் என்ற அரசன் வெண்கால்களைக் கொண்ட குதிரைகளைப் பெற்றான் என்பதை அறியமுடிகின்றது. இத்தெய்வத்திற்குப் பதினாறு கோயில்கள் அமைத்து மணியாணி என்ற ஒருவகை குருக்கள் மணியடித்து பூசை செய்தார்கள். இத்தெய்வமே பிற்காலத்தல் வனவாசி என்றழைக்கப்பட்டது. பண்டைக் காலத்தில் மதுரைக் கடம்பவனத்தில் இருந்த செல்வியே மதுரை மீனாட்சியாக இருக்க வேண்டும் எனச் சொல்லப்படுகிறது.

**கொற்றவை**

சேரர்களுக்குரிய குலதெய்வமாகக் கொற்றவை வணங்கப்பட்டது. கொடூரத் தோற்றம் உடைய காளியாக உருவம் தரப்பட்டது. பழங்குடி மக்கள் கலைமானை வேட்டையாடுவதில் மிகுந்த விருப்பம் உடையவர்கள். கலைமானை வெற்றிதரும் கொற்றவைக்கு வாகனமாக அமைத்தனர். கொற்றவை அயிரை மலையில் இருந்ததாகப் பதிற்றுப்பத்துக் கூறுகிறது. வீரர்களுடைய குருதியை விரும்பிய தெய்வத்தைப் பற்றி,

''நிறம்படு குருதி புறம்படி னல்லது
மடையெதிர் கொள்ளா வஞ்சுவரு மரபிற்
கடவுளயிரை நிலைஇக்''[116]

என்று பதிற்றுப்பத்துக் கூறுகிறது. பகைவரின் குருதி கலந்த சோற்றுப் பிண்டங்களால் இத்தெய்வம் வணங்கப்பட்டது. போருக்குச் செல்லும் போது கொற்றவையை வழிபடுவது அரச மரபாகப் பின்பற்றப்பட்டது.

தலைவன் விரைவாக வந்து சேர வேண்டும் என்று பிளவுகளையும் குகைகளையும் உடைய மலைப்பக்கத்திலுள்ள வெற்றியைத் தரும் சூலி என்னும் கொற்றவைக்கு நேர்த்திக்கடன் செய்வதற்காகத் தலைவி கையில் காப்புக்கட்டிக் கொண்டாள் என்பதை,

> ‘‘விடர்முகை அடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்
> கடனும் பூணாம் கைந்நூல் யாவாம்’’[117]

என்ற குறுந்தொகைப் பாடல் உணர்த்துகின்றது. அயிரை மலையிலுள்ள கொற்றவையைச் சேரர்கள் வழிபட்டனர். கொற்றவைக்குப் பகைவர்களின் குருதியைப் பலியாகக் கொடுத்தனர். உயிர்ப்பலியைத் தவிர மற்ற பலிகளை ஏற்றுக்கொள்ளாது என்பதை,

> ‘‘அணங்குடை மரபின் கட்டில்மேல் இருந்து…
> நிறம்படு குருதி புறம்படின் அல்லது’’[118]

என்னும் பதிற்றுப்பத்துப்பாடல் உணர்த்துகின்றது. அந்த வெற்றியை வேண்டியும், வெற்றியடைந்த பின்னரும் அதை வழிபடும் நிலைக்குக் கொற்றவை நிலை என்று பெயர். பகைவர் மீது போர்தொடுக்கும் முன்பு அவர்களின் ஆநிரைகளைக் கவர்வது பண்டைத் தமிழர் மரபு. பகைவர் நாட்டிற்குச் செல்லும் முன் கொற்றவையை வழிபடுவர். தொல்காப்பியர் பாலை நிலத்திற்குரிய தெய்வத்தைக் குறிப்பிடவில்லை. அதற்குப் பின்னர் தோன்றிய சங்க இலக்கியம் பாலை நிலத்துக்குரிய தெய்வம் கொற்றவை எனக் கூறுகின்றது.

அகத்திணைகளில் முதலாவதாகக் குறிக்கப்படும் குறிஞ்சித்திணைக்கு ஒத்த புறத்திணையாக வெட்சித்திணை கூறப்படுகிறது. வெட்சியில் கொற்றவை நிலை கூறப்படுவதால் குறிஞ்சிக்குச் செவ்வேள் முருகனுடன் கொற்றவையும் தெய்வம் என்று இளம்பூரணர் கூறுகிறார். மலையும் மலை சார்ந்த நிலமும் குறிஞ்சி காடும் காடு சார்ந்த நிலமும் முல்லை இவ்விரண்டும் வெம்மையால் தம் நிலை மாறித் திரிந்து நிற்பது பாலை எனப் பழந்தமிழ் நூல்கள் கூறுகின்றன.

வருடத்தில் ஆறு மாதங்கள் இந்நிலங்கள் குறிஞ்சிக்கும் முல்லைக்கும் உரியதாக இருந்து பின் ஆறு மாதங்கள் பாலையாக மாறினாலும் அந்நிலங்களில் வாழ்ந்த மக்கள் முருகனையும் மாலவனையும் வணங்கினார்கள். பின்னர் ஆறு மாதங்கள் கொற்றவையை வணங்கினார்கள் என்று கூறுவது ஏற்புடையதல்ல. எப்போதும் இந்நிலங்களில் கொற்றவையையும் வழிபட்டிருக்க வேண்டும். மாலவன் மாயோன் என்றழைப்பது போல் கொற்றவையும் மாயோள் எனப்படுகிறாள்.

வெட்சித்திணை குறித்துக் கூறுகையில் தொல்காப்பியர் கொற்றவை பற்றிக் கூறுவார்.

“மறங்கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த
கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே”[119]

வழிவழியாக வரும் மறக்குடியினரிடம் இவ்வழிபாடு நிலவியிருக்க வேண்டும். மொகஞ்சதாரோ - ஹரப்பாவில் கிடைக்கும் பெண் தெய்வங்களோடு இக்கொற்றவை வழிபாடு தொடர்புடையதாக இருக்க வேண்டும். மேலும் இக்கொற்றவையின் மகனே முருகன் எனவும் கொள்ளலாம்.

கொற்றவை வழிபாடு காலப்போக்கில் காளி வழிபாடாக மாறியுள்ளது. கார்த்திகை மாதத்தில் இக்கோயிலில் விழா நடைபெறும். காளிகோயில் ஊரை விட்டுச் சிறிது தள்ளியிருக்கும். சங்க காலத்தில் உயிர்ப்பலி கொடுத்தது போல இன்று, எருமைக் கிடாய்களை வரிசையாகக் கோயிலின் முன் நிறுத்தி வைத்து பூசை செய்து தீர்த்தம் தெளிப்பார்கள். தலையைத் துழுக்கும் கிடாயை வெட்டி குருதிப் பலி கொடுத்து வழிபாட்டை நிகழ்த்துவார்கள். சங்ககாலம் தொட்டு இன்று வரை கொற்றவை வழிபாடு நடைபெற்றுக் கொண்டுதான் வருகிறது.

**இந்திரன் வழிபாடு**

முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும் தலைவன் இந்திரன், ஐராவதம் என்னும் வெள்ளை யானை மீது வலம் வருவான். தேவர் கோமானைப் பல வகையான பூக்களால் வழிபட்ட நிகழ்வைச் சங்க இலக்கியப் பாடல்,

“அரிகால் அவித்துப் பல பூ விழவின்

தேம்பாய் மருதம் முதல் படக் கொன்று...

முழுவு இமிழ் மூதூர் விழவுக் காணூஉப் பெயரும்''[120]

என்று கூறுகிறது. இந்திரன் வேதகாலக் கடவுள்களில் சிறப்பு மிக்கவன். வாயுமண்டல நிகழ்ச்சிகளுக்கு அடிப்படைக் காரணமாகக் கருதப்படுபவன்.

இந்திர விழாவின் தொடக்கம் முடிவு ஆகிய நிகழ்ச்சிகளை முரசறைந்து தெரிவித்தனர். இந்திரன் கோயிலில் ஐராவதம் தீட்டப்பட்ட நெடுங்கொடியைத் தொடக்க விழாவுக்கு அறிகுறியாக வானுற ஏற்றியதை,

‘‘கச்சை யானைப் பிடர்த்தலை ஏற்றி...

தங்கிய கொள்கைத் தருநிலைக் கோட்டத்து''[121]

என்னும் சிலப்பதிகாரப்பாடல் சுட்டுகிறது. வேதகாலத்தில் இந்திரன் வலிமை மிகுந்த முதன்மைக் கடவுளாகக் கருதப்பட்டதனை, வேதங்களில் முதலாவதான ரிக்வேதப் பாடல்களில் புகழப்படுவது கொண்டு அறியலாம். இந்திரனுக்குச் சங்க காலத்தில் கோயிலும் அவனுக்கு வச்சிரப்படையும் இருந்ததை,

‘‘வச்சிரத் தடக்கை நெடியோள் கோயிலுள்

போர்ப்புறு முரசம் கறங்க''[122]

என்று புறநானூற்றுப் பாடல் எடுத்துரைக்கிறது. இந்திரனுக்கு ஆயிரம் கண்கள் இருந்ததை,

‘‘இரும்பிணர் எருத்தின் ஏந்து இமில் குராலும்

அணங்குடை வச்சிரத்தோன் ஆயிரம்கண் ஏய்க்கும்''[123]

என்னும் பாடல் குறிப்பிடுகிறது. பாற்கடலைக் கடைந்த போது பிறந்த அகல்யை மணப்பதற்குத் தேவர்களுக்குள் போட்டி ஏற்பட்டது. (அகல்யா என்றால் உடம்பில் அணு அளவு கூட அழகே இல்லாத பகுதி இல்லாதவள் என்று பொருள்). இரண்டு முகம் உள்ள ஒரு பசுவைச் சுற்றி வருபவர்கள் அகல்யை மணம் செய்யலாம் என்பது நிபந்தனை. ஒரு பசு கன்றை ஈனும் போது முதலில் வெளி வருவது தலை. அப்போது பசுவிற்கு இரண்டு முகம் என்ற நாரதரின் கூற்றை ஏற்றுப் பசுவைச் சுற்றி வந்து கௌதமரிஷி அகல்யை மணந்தார். இந்திரன் தோல்வியுற்றாலும் அகல்யை அடைய வேண்டும் என்று விரும்பினான்.

ஒரு நாள் இந்திரன் சேவலாக மாறி கௌதமரிஷி வீட்டில் கூவினான். ரிஷி நந்தவனத்திற்கு மலர் பறிக்கச் சென்றார். மொட்டுகள் மீது இளம்பனி படும் அதிகாலை நேரத்தில் தான் மலரும். பூக்கள் மலரவில்லை. ஏதோ விபரீதம் நடக்கிறது என்பதை உணர்ந்த ரிஷி வீட்டிற்குச் சென்றார். இந்திரன் கௌதமரிஷி போல் உருவம் மாறி அகல்யையோடு சேர்ந்தான். ரிஷி வரும் சத்தம் கேட்டுக் கறுப்புப் பூனையாக மாறி வெளியே வந்தான். ரிஷி பூனையாக வந்த இந்திரனைக் கண்டு நடந்ததை அறிந்தார்.

'நீ விரும்பியது ஆயிரம் உண்டாகக் கடவாய்' என்று சபித்தார். (உன் உடம்பில் ஆயிரம் யோனிகள் உண்டாகட்டும் என்று சாபமிட்டார்) உடலில் ஆயிரம் கண் பெற்ற இந்திரனுக்கு வழிபாடு நடைபெற்றதைப் புறநானூறு வாயிலாக அறிய முடிகிறது.

சங்க காலத்தில் சிறப்புப் பெற்றிருந்த இந்திரனுக்குத் தற்காலத்தில் அதிகமான கோயில்களும் வழிபாடுகளும் இல்லை என்றே கூறலாம்.

**மன்மதன் வழிபாடு**

வேதகாலக் கடவுளான திருமாலின் மகன் தெய்வங்களுக்கும் மனிதனுக்கும் காம உணர்வைத் தூண்டுபவன், காமவேள், மன்மதன், வேனிலான், பிரக்த்யுமன், காமன் என்னும் பெயர்களால் அழைக்கப்படுபவன். நல்ல கணவன் அமையவும், தன் கணவனைப் பிரியாது இருக்கவும் பெண்கள் காமனை வழிபட்டனர் என்பதை,

> ''நாம் இல்லாப் புலம்பாயின் நடுக்கம் செய்பொழுதாயின்
> காமவேள் விழாவாயின் கலங்குவள் பெரிது என''[124]

என்னும் கலித்தொகைப் பாடல் உணர்த்துகிறது. இளவேனிற்காலம் மன்மதனுக்குரிய காலமாகும். இக்காலத்தில் மன்மதனுக்கு விழா எடுக்கும் வழக்கம் இருந்தது. காமன் வழிபாட்டில் தலைமகன் பரத்தையோடு மகிழ்தலும் உண்டு என்பதை,

> ''உறல் யாம் ஒளி வாட உயர்ந்தவன் விழவினுள்
> விறல் இழையவரோடு விளையாடுவான் மன்னோ''[125]

என்ற பாடல் சுட்டுகிறது. காமனுக்கு விழா நடக்கும் போது தலைவன் பரத்தையரோடு நீர் நிறைந்த ஆற்றில் விளையாடினான் என்பதை,

> ''மல்கிய துருத்தியுள் மகிழ்துணைப் புணர்ந்து அவர்

வில்லவன் விழவினுள் விளையாடும் பொழுதன்றோ''[126]

என்னும் பாடல் சுட்டுகிறது.

''குழவி வேனில் விழுவு எதிர் கொள்ளும்

சீரார் செவ்வியும், வந்தன்று''[127]

என்ற பாடல் தலைவனைப் பிரியாது இருக்க வேண்டும் எனத் தலைவி மன்மதனை வழிபட்டாள் என்று கூறுகிறது.

சில ஊர்களில் மன்மதன் கோயிலில் ஏழு நாட்கள் விழா நடைபெறுகின்றது. திருமணமாகாத பெண்கள் மன்மதனை வழிபட்டால், அவனைப் போன்ற அழகான கணவன் கிடைப்பான் என்ற நம்பிக்கை நிலவுகிறது. ஆண்கள் மன்மதனைப் போன்றும், பெண்கள் ரதியைப் போலவும் அலங்கரித்துக் கொண்டு மன்மதன் கதையை நடித்துக் காட்டுகின்றனர். தாங்கள் நினைத்த செயல் நடந்து விட்டால் அடுத்த ஆண்டு திருவிழாவில் மன்மதன் போன்று வேடமிட்டு நேர்த்திக்கடன் செலுத்துகின்றனர். மன்மதன் கதையைக் கூத்தாக நடத்துவதும் உண்டு. சங்க காலத்தில் தொடங்கிய மன்மதன் வழிபாடு இன்றளவும் பின்பற்றப்படுகிறது.

இவ்வாறு சங்ககால மக்களிடம் தொடங்கிய நம்பிக்கை சார்ந்த வழிபாடுகள் இன்றளவும் தொடர்ந்து வருவதை அறியமுடிகின்றது.

## தொகுப்புரை

சமயம் மதம் என்னும் சொற்கள் சங்க இலக்கியத்தில் இடம்பெறாவிட்டாலும், இந்து சமயத்திற்குரிய கூறுகள் காணப்படுகின்றன. வேத காலத்திற்கு முன்பே சிவலிங்க வழிபாடு இருந்ததை அறியமுடிகின்றது.

சங்க இலக்கியமும் தொல்காப்பியமும் தோன்றும் முன்பே சில சமயங்கள் தோன்றிவிட்டன. இந்து சமயம் என்பது பொதுப்பெயர். இதில் அறுவகையான உட்பிரிவுகள் உள்ளன. சிவனை வழிபடுவது சைவம் திருமாலை வழிபடுவது வைணவம் சக்தியை வழிபடுவது சாக்தம் கணபதியை வழிபடுவது காணாபத்தியம் முருகனை வழிபடுவது கௌமாரம் சூரியனை வழிபடுவது சௌரம் ஆகும்.

இயற்கை வழிபாட்டு முறைகளே உருவ வழிபாட்டிற்கு வித்திட்டன. அதனால் பழங்கால மக்கள் வெப்பத்தை உமிழும் சூரியனையும், இருளை அகற்றும் பிறையையும் தொழுதனர். விதைத்த விதைகள் நன்றாக வளர வேண்டும் என்று மழையை வழிபட்டதோடு மாலை நேரத்தையும் வழிபட்டனர்.

இந்திரனுக்குச் சங்க காலத்தில் கோயிலும், வழிபாடுகளும் இருந்தமையைச் சங்க இலக்கியங்களும் சிலப்பதிகாரமும் சுட்டுகின்றன. மரங்களையும் அதற்கடியில் உறையும் தெய்வங்களையும் வழிபட்டனர்.

சிவன் என்னும் சொல் சங்க இலக்கியத்தில் இடம் பெறவில்லை. ஆனால் சிவனின் அடையாளங்களைச் சுட்டிக்காட்டுகின்றன. ஆயர் குலப்பெண்களின் திருமால் வழிபாடும், ஓணம்விழா நிகழ்வும் இடம்பெறுகின்றன.

தமிழரின் முதற்கடவுளான முருகனையே பழங்குடி மக்கள் குலதெய்வமாக வழிபட்டனர். மனித நாகரிகத்தின் தொட்டிலெனத் திகழும் லெமூரியாக் கண்டத்தில் உள்ள மகேந்திர மலையில் முருகனின் கோயில் இருந்ததாகக் கூறுகின்றனர்.

சங்க இலக்கியத்தில் கடல்கெழு செல்வி, வனத்துர்க்கை, கொல்லிப்பாவை, கானமர் செல்வி, கொற்றவை என்னும் பெயர்களில் தாய்தெய்வ வழிபாடு

நிகழ்ந்துள்ளதை அறிய முடிகின்றது. கணவன் பிரியாமல் இருக்கவேண்டும் என்பதற்காக மன்மதனை வழிபட்டனர்.

மாடுபிடி சண்டையில் உயிர் துறந்த வீரனுக்குக் கல்நட்டனர். போரில் இறந்த வீரனுக்காக ஒரு கல்லைத் தேர்வு செய்து அதை நீரில் இட்டு வைத்துச் சுத்தம் செய்து நறுமணப் பொருள்களால் நீராட்டி மாலை சூட்டி நடுவார்கள். இறந்த வீரனைத் தெய்வமாக நினைத்து நாட்பலியிட்டு வழிபடும் மரபு இன்றும் உள்ளது.

கன்னிப் பெண்கள் நல்ல கணவரைப் பெறுவதற்காகத் திருவாதிரை நாளில் வைகறைப் பொழுதில் நீராடி நோன்பு நோற்றனர். முன்னோர்களிடம் அச்சம் தரும் பேய் பற்றிய நம்பிக்கைகள் இருந்தன. தீயவற்றிலிருந்து தங்களைக் காத்துக் கொள்வதற்காகத் தெய்வத்தை வழிபட்டனர்.

சங்க காலத்தில் சமண, பௌத்த வழிபாடுகளும் நிகழ்த்தப்பட்டதை இலக்கியங்கள் வழி அறிய முடிகின்றது.

**சான்றெண்**

1. சுப்பிரமணியபிள்ளை.கா.,தமிழர்சமயம்., ப.10.

2. போவாஸ்.ஜீ.டி., கலைக்களஞ்சியம்.தொ.4.,ப.450.

3. சுவாமி விவேகானந்தர்., இந்து சமயம்., ப.1.

4. நாராயணவேலுப்பிள்ளை.எம்., பக்தி வளர்த்த சான்றோர்., ப.289.

5. பாலசுப்பிரமணியம்.சி., வாழ்வியல் நெறிகள்.,ப.133.

6. அறவாணன். க.ப., தமிழர் இந்தியா., ப.98.

7. ஞானசம்பந்தன்.அ.ச., பெரியபுராணம் ஓர் ஆய்வு., ப.53.

8. மேலது., ப.22.

9. மேலது., ப.98.

10. மேலது., ப.32.

11. இராசமாணிக்கனார்.மா., சைவ சமய வளர்ச்சி., ப.26.

12. சக்திவேல்.சு., நாட்டுப்புற இயல் ஆய்வு.,ப.222.

13. Tamil Lexicon Vol.VI p.3545.

14. முத்துசந்தானம்., தமிழர் பண்பாடு ப.50.

15. தொல்காப்பியம்., அகத்திணையியல். நூ.5.

16. மேலது., கிளவியாக்கம். நூ.58.

17. மேலது., புறத்திணையியல்.நூ.85.

18. அரிச்சந்திரபுராணம்., பா.1567.

19. பரிபாடல்., பா.19.வரி.100.

20. திருமுருகாற்றுப்படை., பா.வரி.1-2.

21. சிலப்பதிகாரம்., மங்கலவாழ்த்து.பா.வ.5.

22. குறுந்தொகை., பா.315.வரி.1-2.

23. புறம்., பா.2., வ..9.

24. அகம்., பா.263.வ..2.

25. குறுந்தொகை., பா.307 வரி.2-3.

26. புறம்., பா.1 வரி.9-10.

27. அகம்., பா.239.வ.9.

28. பெரும்பாணாற்றுப்படை.,வ.402.

29. திருக்கோவை., பா.67.

30. திருவாசகம்., பா.7.

31. மேருமந்திரபுராணம்., பா.1127.

32. குறுந்தொகை., பா.155 வரி.2-4.

33. குறுந்தொகை., பா.270 வரி.3-4.

34. புறம்., பா.143., வரி.1-3.

35. நெடுநல்வாடை., வரி.42-44.

36. சிலப்பதிகாரம்., கனாத்திறம் உரைத்தகாதை வ.2.

37. திருஞானசம்பந்தம்(உ.ஆ).,புறப்பொருள் வெண்பாமாலை., ப.17.வரி.1-2.

38. மதுரைக்காஞ்சி., வரி.453-460.

39. குறுந்தொகை., பா.15. வரி.2-3.

40. அகம்., பா.309.வரி.4-5.

41. குறுந்தொகை., பா.87. வரி.1-2.

42. கலித்தொகை., பா.101. வரி.13-14.

43. கலித்தொகை., பா.83. வரி.14-15.

44. அகம்., பா.11. வ.5.

45. மேலது., பா.141. வரி.7-9.

46. மேலது., பா.185. வரி.10-11.

47. பரிபாடல்., பா.எ.11.வரி.138-140.

48. அகம்., பா.269. வரி.14-19.

49. நற்றிணை.,பா.80. வரி.4-8.

50. கலித்தொகை., பா.59. வ.13.

51. திருப்பாவை., பா.1.

52. பரிபாடல்., பா.11-91-92.

53. ஐங்குறுநூறு., பா.84.

54. சக்திவேல்.சு., நாட்டுப்புறஇயல்ஆய்வு., ப.225.

55. மதுரைக்காஞ்சி., பா.வ.632-633.

56. பட்டினப்பாலை., வரி.259-260.

57. திருமுருகாற்றுப்படை.,வரி.47-51.

58. மதுரைக்காஞ்சி.,வ.25.

59. மணிமேகலை.,சக்கரவளக்கோட்டமுரைத்த காதை.,வரி.6-121.

60. சிலப்பதிகாரம்.,கனாத்திறம் உரைத்த காதை.,வரி.20-21.

61. சிறுபாணாற்றுப்படை.,வ.197.

62. மனோன்மணி.தி.,தொல்லியல்., ப.158.

63. பட்டினப்பாலை., பா.வரி.248-249.

64. புறம்., பா.265. வரி 1-5.

65. அகம்., பா.67. வரி.8-11.

66. ஐங்குறுநூறு., பா.352-1-2.

67. தொல்.புறத்திணையியல்., நூ.63.

68. திருஞானசம்பந்தம்.ச.,புற.பொ., பொ.10.,ப.268.

69. அகம்., பா.289. வ.3.

70. மேலது., பா.269. வரி.7-13.

71. மலைபடுகடாம்., வரி.386-390.

72. புறம்., பா.221.வரி 1–13.

73. மேலது., பா.223. வரி 1–4.

74. மேலது., பா.335. வரி 10–13.

75. மணிமேகலை., பக்.6. வரி.54-59.

76. அகம்., பா.35. வரி.7-9.

77. மதுரைக்காஞ்சி., வரி476-484.

78. தொல்காப்பியம்., புறத்திணையியல்., நூ.108.

79. மணிமேகலை., சமயக்கணக்கா் தந்திறங்கேட்ட காதை., வரி.78-88

80. மதுரைக்காஞ்சி., வரி.461-467.

81. முத்துசந்தானம்., தமிழா் பண்பாடு., ப.42.

82. லட்சுமணன்.கி., இந்திய தத்துவஞானம்., ப.83.

83. கந்தையா பிள்ளை.,ந.சி.சிவன்., ப.,2.

84. மிழலைத் தொண்டன்., நாதனைப் பாடிய நால்வா்., ப.5.

85. இராசமாணிக்கனாா்.ம., சைவ சமய வளா்ச்சி. ப.12.

86. சூளாமணி., பா.எ.2074.

87. இராதாதியாகராசன்., சைவமும் தமிழும்.,ப.25.

88. குன்றக்குடி அடிகளாா் சைவ சித்தாந்தமும் சமுதாய மேம்பாடும்., ப.44.

89. மதுரைக்காஞ்சி.,வரி.453-455.

90. புறம்., பா.6.வரி.18-19.

91. மேலது., பா.55. வரி.4-5.

92. மேலது., பா.1 வரி.1-2.

93. பட்டினப்பாலை., வரி.247-249.

94. சிலப்பதிகாரம்., இந்திரவிழவூரெடுத்த காதை., வரி.170-173.

95. தொல்.புறத்திணையியல்., நூ.5.

96. புறம்., பா.56.வரி.5-6.

97. அகம்., பா.59. வரி.4-6.

98. முல்லைப்பாட்டு.,வரி.2-10.

99. மதுரைக்காஞ்சி.,வரி.590-591.

100. புறம்.,பா-56.வரி.6-8.

101. குறுந்தொகை.,கடவுள் வாழ்த்து., வரி 1-5.

102. ஐங்குறுநூறு.,பா.257.

103. மலைபடுகடாம்., வரி.318-322.

104. திருமுருகாற்றுப்படை., பா.வரி.50-56.

105. ஐங்குறுநூறு., பா.259.

106. மேலது., பா.245.

107. பரிபாடல்., செவ்வேள்., பா.8. வரி.97-99.

108. மேலது.,பா. 8., வரி.106-107.

109. ஐங்குறுநூறு., பா.259.

110. அகம்., பா.370. வரி.12-16.

111. பொருநராற்றுப்படை., வரி.51.52.

112. அகம்., பா.201. வ.6.

113. நற்றிணை., பா.192. வரி.8-9.

114. குறுந்தொகை., பா.89. வரி.4-7.

115. அகம்., பா.எ.345. வரி 4-5.

116. பதிற்றுப்பத்து., பா.79. வரி.16-18.

117. குறுந்தொகை., பா.218. வரி.1-2.

118. பதிற்றுப்பத்து., பா.79. வரி.14-16.

119. தொல்காப்பியம்., புறத்திணையியல்., நூ.4.

120. பதிற்றுப்பத்து., பா.30.வரி.15-20.

121. சிலப்பதிகாரம்., இந்திரவிழவூரெடுத்த காதை.,140-145.

122. புறம்., பா.241.வரி.3-4.

123. கலித்தொகை பா.105.வரி.14-15.

124. கலித்தொகை., பா.27.வரி.23-24.

125. மேலது., பா.30.வரி.13-14.

126. மேலது., பா.35.வரி.13-14.

127. மேலது., பா.36.வரி.9-10.

# இயல் இரண்டு

## சங்க இலக்கியத்தில் ஆட்சியும் போர் முறைகளும்

சங்க காலச் சமுதாயத்தில் காதலும் போரும் இரு கண்களாகக் கருதப்பட்டன. சங்க இலக்கியம் அகவாழ்க்கையையும், புறவாழ்க்கையையும் எடுத்தியம்பியுள்ளது. அக்காலத்தில் அரசனை ஆண்டவனுக்கு நிகராக 'இறை' என்று அழைத்தனர். பல பகுதிகளை ஆண்ட வெவ்வேறு மன்னர்கள் நட்புக் கொண்டிருந்தனர். தொல்காப்பியர் புறத்திணையியலிலும், மரபியலிலும் அரசனைப் பற்றியும் போர்முறைகள் குறித்தும் விளக்கியுள்ளார். சங்க இலக்கியங்களில் புறநானூறும் பதிற்றுப்பத்தும் அரசியல் கோட்பாடுகள் குறித்துப் பல செய்திகளை வழங்குகின்றது. எனினும் சங்க காலத்து அரசியல் முறைகளை மட்டுமே மையப்படுத்தும் தனித்த நூல் தமிழ் இலக்கியங்களில் இல்லை. சங்க காலத்தில் மன்னர்கள் ஆட்சி செய்த முறைகளையும் போர் மரபுகளையும் இவ்வியல் ஆராய்கின்றது.

### ஆட்சி முறை

சங்க கால மன்னர்களின் வரலாற்றையும் அவர்கள் ஆட்சிசெய்த காலத்தையும் வரிசைமுறையாக அறிவதற்கு வாய்ப்பில்லாத நிலையில் புறநானூறும் பதிற்றுப்பத்தும் கூறிய செய்திகளும், மற்ற சங்க அக இலக்கியங்களில் உள்ள அகப்பாடல்களில் உவமையாகப் பெறப்படும் செய்திகளும், பத்துப்பாட்டில் காணப்படும் அரசியல் கருத்துகளும் அக்கால அரசியலைப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

சந்திரகுப்தனின் அமைச்சராக இருந்த சாணக்கியர் இயற்றிய 'அர்த்த சாஸ்திரம்' எனும் நூல் அக்கால வடஇந்திய அரசியலைக் காட்டும் கண்ணாடியாகத் திகழ்கின்றது. மகாபாரதத்தில் பீஷ்மர், தருமர், கிருஷ்ணர் போன்றோரின் அறிவுரைகள் மூலம் அரசியல் முறைகள் புலப்படுகின்றன. இதே போலச் சங்கத் தொகை நூல்களில் குறிப்பாகப் புறநானூற்றில் செவியறிவுறூஉ, பொருண்மொழிக்காஞ்சி போன்ற துறைகள் பல அரிய அரசியல் கோட்பாடுகளை விளக்கியுள்ளன. தமிழர்களின் அரசியலைப் படம் பிடித்துக் காட்டுவதில் முதன்மையானதாகவும் முக்கியமானதாகவும் விளங்கும் நூல் உலகம் போற்றும்

திருக்குறளே ஆகும். அதன் பொருட்பாலில் உள்ள குறட்பாக்கள் அரசியலை அனுபவமாகத் தந்திருக்கின்றன.

அரசனைக் கோன், வேந்தன், கொற்றவன், இறை போன்ற சிறப்புப் பெயர்களால் மக்கள் குறிப்பிட்டுள்ளனர். ஒவ்வொரு இராச வம்சமும் தனக்கெனத் தனியாகக் கொடி, சின்னம், செங்கோல், வாள், வெண்கொற்றக்குடை, முரசு போன்றவற்றைப் பெற்றிருந்தது.

தமிழ்ச் சமூகத்தை அரசர்கள் பல நூற்றாண்டுகளாக ஆட்சி செய்து மாண்டனர். பல்லவ வம்சம், சாளுக்கிய வம்சம், பல குறுநில வம்சங்கள், விஜய நகர வம்சங்கள் போன்றவை அடுத்தடுத்து ஆட்சி புரிந்தன என்பதை,

''இருங்கடல் உடுத்த இப்பெருங்கண் மாநிலம்
உடையிலை நடுவணது இடையிறர்க்கு கின்றி...
நாடு பிறர்கொளச் சென்று மாய்ந்தனரே''[1]

என்னும் புறநானூற்றுப் பாடல் மூலம் அறியமுடிகின்றது. தமிழக அரசியலில் அரசனே உயிர்நாடி. அவன் இல்லாத நாட்டைக் கற்பனை செய்து பார்க்க முடியாது. நாட்டை உடலாகவும் அரசனை உயிராகவும் மதித்துப் போற்றியுள்ளனர்.

''நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே''[2]

என்ற மோசிகீரனாரின் பாடலிலிருந்து அரசன் அறிவு, அன்பு போன்றவற்றில் மேலோங்கியவனாகவும், அன்பினால் குடிமக்களின் நலன் கருதி ஆட்சி செய்தலும், இரவலர்க்கு ஈதலும், ஆற்றலினால் பகையவர் மூலம் வரும் போரினைத் தடுத்தலும், வெற்றி பெறுதலும் அரசனுக்குரிய கடமையாகும் என்பதை அறியமுடிகிறது.

**அரச உரிமை**

அரசனுக்குப்பின் அரியணை ஏறும் தகுதியுடையவன் மூத்த மகனாவன். அவன் இறந்துவிடின் இளைய மகனும், ஆண் மக்களே இல்லாத போது மகள்வழிப் பேரன்மாருள் மூப்புடையவனும் அவனும் இல்லாத போது பிற நெருங்கிய உறவினருள் தகுதிமிக்கவன் அரசனாவான். தந்தைக்குப்பின் மூத்தமகனே அரசன் என்பதை,

''மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தென

எய்தினம் ஆயின்"[3]

என்னும் பாடல் உணர்த்துகிறது. அரசனுக்குப்பின் மூத்த மகன் அரசன் என்ற மரபில் சில நன்மைகளும், தீமைகளும் உண்டு. அரசுப் பொறுப்பை ஏற்பதற்கு முன்பே, அதாவது பிறந்தவுடனேயே அடுத்த அரசன் யார்? என்பது மக்களுக்குத் தெரிய வருகின்றது. ஆகையால் அரசப்பண்புகளும், ஒழுக்கங்களும் அவனுக்குக் கற்பிக்கப்படுகின்றன. அதே சமயத்தில் அறிவாற்றல் இல்லாதவனும், தீய சிந்தனையுடையவனும், மக்கட் பண்பில்லாதவனும் கூட அரசனாகும் கொடுமையும் நேரிடலாம்.

இளஞ்சேட்சென்னி என்னும் பெயரில் இரண்டு அரசர்கள் இருந்தமையால் கரிகாலன் தந்தையாகிய இளஞ்சேட்சென்னியைக் குறிப்பதற்கு அவரிடம் இருந்த அழகிய தேரை அடைமொழியாக்கினர். மற்றொரு அரசன் நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி ஆவான்.

தந்தை இறந்தமையால் தாயின் கருவிலிருக்கும் போதே அரசனாகும் உரிமையைப் பெற்றான் கரிகாலன் என்பதை,

"தாய் வயிற்றிருந்து தாயம் எய்தி,
எய்யாத் தெவ்வர் ஏவல் கேட்ப"[4]

என்று பொருநராற்றுப்படை கூறுகின்றது. அரசவம்சத்தில் கருவில் இருக்கும் போதே அரச உரிமையைப் பெறுகின்றனர் என்பதை அறியமுடிகின்றது.

**அரசியல் முறை**

சங்ககால மன்னர்கள் முழு அதிகாரம் உடையவர்களாக இருந்தனர். அமைச்சர்களின் அறிவுரைகளையும், புலவர்களின் பொன்னுரைகளையும் ஏற்றுக்கொண்ட அரசனின் ஆட்சித் திறமை ஒரு சகடமாக உவமிக்கப்படுகிறது. வண்டியைச் செலுத்துவோன் திறம்பெற்றவனாயின் இடையூறின்றிச் செல்லும். அதேபோல அரசியல் மற்றும் போர் முறைகளைத் திறம்பட அறிந்தவனாயின் நாடு நலம் பெறும் அவனும் சிறப்புறுவான் என்று இளந்திரையன் குறிப்பிடுகிறார். பால் தன் இனிய சுவை கெட்டுப் புளிப்பினும் கதிரவன் ஒளிகுன்றி இருள் சூழ்ந்திடினும் நால்வேதம் கூறிய ஒழுக்கம் மாறுபடினும் வேறுபாடில்லாத அறிவுடைய

அமைச்சர்களுடன் ஆட்சி அமைய வேண்டுமென முரஞ்சியூர் முடிநாகராயர் பாடியுள்ளார்.

ஒருநாட்டின் தலைவன் அரசனாவான். அவன் பல அமைச்சர் குழுவுடன் சேர்ந்தே ஆட்சி புரிந்தான் என்பதை உணரமுடிகின்றது. ஆனால் சிற்றூர்களில் மக்களால் தேர்ந்தெடுத்த நிர்வாக அலுவலர்களும் இருந்தனர் என்பதை,

‘‘கயிறு பிணிக்குழிசி ஓலை கொண்மார்
பொறிகண்டு அழிக்கும் ஆவண மாக்களின்’’[5]

என்று அகநானூறு சுட்டுகிறது. குடவோலை முறையை அன்றே கடைப்பிடித்த பெருமையை அறியமுடிகிறது. இன்று பின்பற்றப்படும் தேர்தல் முறையை அன்றே பின்பற்றியுள்ளனர். தகுதியுடையவா்களின் பெயர்களை ஓலையில் எழுதி அதைக் குடத்தில் இட்டுப் பின் துணியால் வாய்ப்பகுதியைக் கட்டி அதன் மீது இலச்சினையைப் பொறிப்பா். பின்பு அனைவரும் கூடியிருக்கும் அவையில் தலைவனைத் தேர்ந்தெடுக்க குடத்தில் உள்ள ஓலைகளை வெளியில் எடுப்பர் என்ற செய்தி வரலாற்று முக்கியத்துவம் பெற்றதாகும்.

‘‘முறைவேண்டு நர்க்கும், குறை வேண்டுநர்க்கும்
வேண்டுப வேண்டுப வேண்டினர்க்கு அருளி
இடைத்தெரிந்து உணரும் இருள்தீர் காட்சி’’[6]

என்ற பாடல் மூலம் இவ்வுலக இருளைப் போக்கும் சூரியனைப் போன்று பொருள் வேண்டி வந்தவர்க்கு அருளிச் செய்து பிறர் கூறாமலே, உள்ளத்தைக் குறிப்பால் அறிந்து உதவுகின்ற குணம் உடையவராய் மன்னன் விளங்க வேண்டும் எனப் பெரும்பாணாற்றுப்படை சுட்டுகின்றது.

**அரசர் புலவர் நட்பு**

பண்டைய தமிழா்கள் அரசனை இறைவனுக்குச் சமமாகப் போற்றினாா்கள். எனினும் நன்மை தீமைகளைச் சுட்டிக்காட்டப் புலவர்களுக்கு உரிமை இருந்ததைக் காண முடிகின்றது. மன்னருடன் நெருங்கிப்பழகிய புலவர்களும் இருந்தனா். புலவர்கள் அரசர்களைப் புகழ்ந்துபாடி பரிசு பெற்று வாழ்ந்தாலும் மன்னர்கள்

தவறான பாதையில் செல்லும்போது அறிவுரைகள் கூறி, இடித்துரைத்து நல்வழிப்படுத்தினர் என்பதும் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**சேரலாதன்**

“வாள்நகை, இலங்கு எயிற்று,
அமிழ்து பொதி துவர்வாய், அசை நடை விறலியர்
பாடல் சான்று நீடினை உறைதலின்”[7]

என்னும் பாடல், ஒளிபொருந்திய நெற்றியினையும் மடப்பம் பொருந்திய பார்வையையும் ஒளியுடைய பற்களையும் அமிழ்து போன்ற நீரை அடக்கிய விறலியர்களின் பாடல்களைக் கேட்டு அங்கே தங்கினாய். இதனால் உன்னை அறியாதோர் ஐம்புலன்களின் இன்பத்திற்கு அடிமையாகிவிட்டார் என்று உன்னைப் பற்றித் தவறாக நினைக்க மாட்டார்களா? என ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கைப் பாடினியார் அறிவுறுத்துவதாக அமைந்துள்ளது.

ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கைப்பாடினியார், நச்செள்ளையார் பாடிய பாட்டு, கல்வியின் பெருமையை அறிவுறுத்துகிறது. சேரலாதனின் சிறப்புகளைத் தொகுத்து வழங்கும் புலவர், அவனுடைய பண்புகளில் தலையாயதாகக் கல்வியைக் குறிக்கிறார். உலகத்திலுள்ள உயிர்களைக் காக்கும் கதிரவன் போன்று, இரவலர் குடும்பங்கள் செழிக்குமாறு போரினால் பெற்ற பொருள்களைப் பகுத்து வழங்கும் திறமும், நாட்டை அறவழியில் செலுத்தும் வல்லமையும் கொண்டவன். சிறந்த அரனுக்குத் தேவையான ஈகையும், கல்வியும், வீரமும் இப்பாடலில் வெளிப்படுகின்றன. மேலும் புலவர் அரசனுக்கு அறிவுரை கூறும் அளவிற்கு, மன்னர் நட்புப்பூண்டிருந்தார் என்பது தெளிவாகிறது.

**மாவளத்தான்**

“நின் யான் பிழைத்தது நோவாய் என்னினும்
நீ பிழைத்தாய் போல் நனி நாணினையே!
தம்மைப் பிழைத்தோர்ப் பொறுக்கும் செம்மல்
இக்குடிப் பிறந்தோர்க்கு எண்மை காணும்”[8]

என்னும் புறநானூற்றுப் பாடல் ஒரு முறை மன்னன் மாவளத்தானும் தாமப்பல் கண்ணனாரும் வட்டாடினர். அப்போது வட்டுக்காய்கள் காணாமல் போயின வெகுண்ட சோழன் வட்டுக்காய்களைப் புலவர்மீது வீசினான். அதனால் புலவர் 'பார்ப்பவர் மனம் வருந்தச் செய்தல் சோழர்க்கு இல்லையே, நீ என்னை வருத்தினாய் நீ சோழன் வழிவந்தவன் அல்லன்' எனக் கூறியதும் மன்னன் தன் குடிப்பெருமை கருதி நாணியிருந்தான். பின் புலவர் மாவளத்தானின் பெரும் மாண்பு கருதி, நீ என்னை விடத் தவறு செய்தவன் போல வருந்தினாய் இது நின் குடியின் சிறப்பு' என்றார். இவ்வாறு புலவரின் இழிவுரையைக் கேட்டுச் சினந்தெழாமல் தன் தவறுக்கு நாணியிருந்ததைப் பதிவு செய்துள்ளது.

**நலங்கிள்ளி**

> "இன்னாது அம்ம, ஈங்கு இனிது இருத்தல் ...
> மறவை ஆயின், போரொடு திறத்தல்"[9]

என நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் நடந்த போரில் நலங்கிள்ளியின் படைக்குப் பயந்து நெடுங்கிள்ளி கோட்டையை அடைத்து உள்ளே இருக்கிறான். மக்கள் எதிரிப்படைகளால் அவதியுறுகின்றனர். ஆனால், நீங்கள் கோட்டையைத் திறவாமல் உள்ளே மறைந்துள்ளது வெட்கப்படவேண்டிய செயலாகும். நலங்கிள்ளியிடம் சரணடைந்து மக்களின் துயரை நீக்குக. இல்லையேல் அவனை எதிர்த்துப் போரிட, கோட்டையைத் திறப்பாய் என மன்னனை எதிர்த்துக் கோவூர்கிழார் கேள்வி கேட்கும் துணிவும் உரிமையும் இருந்ததைப் புறநானூற்றில் காண முடிகின்றது.

**இரும்பொறை**

அரிசில்கிழார், பெருஞ்சேரல் இரும்பொறையைச் சிறப்பித்துப்பாடும் வரிகள் அவன் புகழையும் பெருமையையும் நிலைநிறுத்துவன. அறிவுடையோர் எண்ணினாலும், அறிவில்லாதோர் எண்ணினாலும் அவன் பிறர்க்கு உவமையாக மட்டுமே அமைவான். பிறருக்கு அவனை உவமையாகக் கூறுவதற்கு இயலாத ஒப்பற்ற திறனுடையவன்.

இரும்பொறையின் செல்வமும், வீரமும், கொடையும் அளவு கடந்தவை என்று பகைவரிடத்தில் அப்புலவர் உரைத்தார், அப்பகைவர் அதனை உய்த்துணரவில்லை. சான்றோர் பலர் கூடி இரும்பொறையின் திண்மையைப் பகைவருக்கு எடுத்துக்காட்டிய போது அப்பகைவர்களின் அறிவு மயங்கியது. இதனை அறிந்த புலவர், அப்பகைவர் மீது அருள்கொண்டு பிழைக்கச் செய்ய வேண்டும் என இரும்பொறையை வேண்டிக் கேட்கிறார்.

**இளவெளிமான்**

"இரவலர் உண்மையும் காண், இனி இரவலர்க்கு
ஈவோர் உண்மையும் காண்,"[10]

என்னும் புறநானூற்றுப் பாடல் இளவெளிமானிடம் பரிசில் கேட்ட பெருஞ்சித்தரனாருக்குக் குறைந்த பரிசுப் பொருளைக் கொடுக்கிறான். அதனால் சினமுற்ற புலவர் குமண வள்ளலைப் போற்றிப் பரிசாகப்பெற்ற யானையை இளவெளிமானின் காவல் மரத்தில் கட்டி மன்னை இழிவுபடுத்தினார். நாடளும் அரசர்களையும் புலவர்கள் இழிவுபடுத்தியபோது அதனை ஏற்றுக்கொண்ட மாண்பு பெருமை கொள்ளத் தக்கதாகும்.

**அறிவுடைநம்பி**

அரசன் நெறிபிறழாத அரசியலை நடத்துவதற்குப் பலர் துணை நின்றவர்களை 'உரும்பில் சுற்றம்' என அழைத்தனர். வேந்தர் செங்கோல் நெறிபிறழாமல் இருப்பதற்குப் புலவர்களும் பெருந்தொண்டாற்றியுள்ளனர் என்பதை,

"உரும்புஇல் சுற்றமோடு இருந்தோற் குறுகி"[11]

என்னும் பாடல்வரி மூலம் அறியலாம். தகுதியற்ற அதிகாரிகளைக் கொண்டு மக்களை வருத்திய போது மன்னரை இடித்துரைத்த வரலாறும் உள்ளது.

"காய் நெல் அறுத்துக் கவளம் கொளினே...
அறிவுடை வேந்தன் நெறி அறிந்து கொளினே"[12]

'ஒரு மாவிற்குக் குறைந்த நிலமாயினும் அதன்கண் விளைந்த காய்ந்த நெல்லை அறுத்துக் கவளமாகக் கொடுப்பின் யானைக்குப் பல நாட்களுக்கு

உணவாகப் பயன்படும். நூறு வயல்களாயினும் யானை தனித்துச் சென்று புகுந்து உண்ணுமாயின் அதன்வாயில் புகுந்த நெல்லினும், காலடியில் பட்டு அழிவது மிகுதியாகும். அதுபோல அரசன் குடிமக்களிடம் நெறி அறிந்து சிறிது சிறிதாக வரி வசூல் செய்தால் மக்களுக்குத் துன்பம் நேராது அரசனும் அவ்வரியைக் கொண்டு படிப்படியாகப் பல நன்மைகளைச் செய்ய முடியும் எனப் பாண்டியன் அறிவுடை நம்பிக்கு வரிவாங்கும் முறை பற்றிப் பிசிராந்தையார் அறிவுரை கூறியதாகப் புறநானூற்றுப் பாடல் அமைந்துள்ளது.

**கிள்ளிவளவன்**

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் ஆட்சிக்காலத்தில் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டு விளை நிலங்கள் மூழ்கிப் பெரும் இழப்பு ஏற்பட்டது. பயிர்கள் சேதமடைந்தன. மக்கள் உணவிற்கே வழியில்லாமல் தவித்தனர். தண்டல்காரர்கள் மக்களிடம் வரிவசூலிப்பதில் கடுமையாக நடந்து கொண்டனர். இதைக் கண்ட புலவர் வெள்ளைக்குடி நாகனார் மக்கள் குறைகளை மன்னனிடம் நேரில் தெரிவிப்பது தான் முறையானது எனக்கருதி அரசனின் அரண்மனைக்குச் சென்றார்.

அரசன் புலவரை வரவேற்றான். அரசனிடம் போர்முனையிலே உன்னுடைய படைவீரர்கள் மாற்றாரின் யானைப் படையை வென்று அவர்களைத் தோல்வியுறச் செய்து உனக்குத் தேடித் தந்த பெரும் வெற்றி எல்லாம் நின்னுடைய நாற்பெரும் படையால் அன்று, கலப்பை உழுத படைச்சாரலில் விளைந்த நெல்லினது பயனாகும். அதாவது உன் வெற்றி உழுப்படையால் விளைந்த வெற்றியே என்பதை அறிவாயாக. மழை பெய்யா விட்டால் உலகத்தார், குடிமக்களைக் காக்க வேண்டிய காவலனைப் பழித்துரைப்பார்கள். உழுதொழில் செய்பவரை முதலில் காத்து அதனால் ஏனைய குடியினரையும் காப்பாயாயின் பகைவரும் நின் அடி போற்றுவர் என எடுத்துரைத்தார். இதனை,

> ‘‘மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
> இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்’’[13]

என்னும் புறநானூற்றுப் பாடல் எடுத்துரைக்கின்றது. புலவரின் அறிவுரையைக் கேட்ட கிள்ளிவளவன் உள்ளம் வருந்தினான். மக்களிடம் வரி வசூலிக்கத் தடை விதித்தான். வெள்ளத்தால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவி செய்தான்.

சங்ககாலத்தில் புலவர்கள் மக்களின் பிரச்சனைகளை மன்னர்களிடத்தில் எடுத்துரைத்தனர் என்பதை உணரமுடிகின்றது.

‘‘முறை செய்து காப்பாற்றும் மன்னன் மக்களுக்கு
இறை என்று வைக்கப்படும்’’[14]

மக்கள் நன்முறையில் வாழ நீதி செலுத்தி, பகைவரால் வருத்தம் நேராமல் பாதுகாத்து வரும் மன்னனைக் கடவுளாக மதித்தனர். இத்தகைய மன்னன் புலவரின் போற்றுதலுக்கும், அறிவுரை வழங்குதலுக்கும் உடன்பட்டான் என்பதை இத்திருக்குறள் வழி அறிய முடிகிறது.

**பேகன்**

கார்காலத்தில் பேகனைப் பிரிந்த கண்ணகி துன்பப்பட்டாள். கணவனும் மனைவியும் பிரிந்திருப்பின் இருவரையும் ஒன்றுபடுத்துவது புலவர்களின் இயல்பு. பரணர், கபிலர், அரிசில்கிழார், பெருங்குன்றூர்கிழார் போன்ற புலவர்கள் அரசனை நல்வழிப்படுத்தினர். அகவாழ்விலும் புறவாழ்விலும் அரசன் தவறு செய்யும் போது அவனுக்கு அறிவுரைகூறி நல்வழிப்படுத்தினார்கள். புலவர்கள் பரிசு பெறுவதை மட்டும் குறிக்கோளாகக் கொள்ளாமல் நாட்டு நலனிலும் அக்கறை உடையவர்களாகத் திகழ்ந்தனர். உன் மனைவியின் பிரிவுத்துன்பத்தைத் தீர்த்து வைப்பதே எனக்குக் கொடுக்கும் பரிசு என்று பெருங்குன்றூர்கிழார் பாடினார் என்பதை,

‘‘மண்ணுறு மணியின் மாசு அற மண்ணி,
புதுமலர் கஞல இன்று பெயரின்
அதுமன், எம் பரிசில்’’[15]

என்னும் புறநானூற்றுப்பாடல் மூலம் புலவர்கள் அரச வாழ்வில் மட்டுமின்றி இல்லற வாழ்விலும் துணைநின்றனர் என்பதை அறியமுடிகிறது.

**இளங்கோட்சென்னி**

‘‘வழிபடு வோரை வல்லறி தீயே
பிறர்பழி கூறுவோர் மொழிதே றலையே’’[16]

வழிபடுவோா் உன்னை எதற்காக வழிபடுகின்றனா் என்பதைத் தெரிந்துகொள். பிறா்மீது பழி கூறுபவா்களின் சொல்லை நம்பாதே. நீ ஒருவனிடம் உண்மையாகவே தீமையைக் கண்டால் ஆராய்ந்து அறிந்து தக்க தண்டனை கொடு. அவா் தவறை உணா்ந்து வணங்கி நின்றால் தண்டனையைக் குறைத்துக்கொள் என்று என்றெல்லாம் அறிவுரைகூறும் அளவிற்கு ஊன் பொதி பசுங்குடையாா் என்னும் புலவா் இளஞ்சேட் சென்னியிடம் புகழ் பெற்றுத் திகழ்ந்தாா்.

**நன்மாறன்**

''நமர்' எனக் கோல் கோடாது,
'பிறர்' எனக் குணம் செல்லாது,''[17]

என்ற புறநானூற்றுப் பாடலில் ஒருவன் தீமை செய்தால் அவர் நமக்குத் தெரிந்தவர் என்று பொறுத்துச் செங்கோலுக்கு இழுக்கு நேருமாறு நடத்தல் கூடாது. அதே சமயத்தில் ஒருவர் அயலார் என்று அவருடைய நற்குணங்களைப் போற்றாமலிருக்கவும் கூடாது. சூரியனைப் போல வெம்மையான ஆற்றலுடைய வீரமும், திங்களைப் போலக் குளிர்ந்த மென்மையும், வான்மழையைப் போலக் கொடைச் சிறப்பும் உடையவனாக விளங்க வேண்டும் என நன்மாறனை மருதநிலநாகனார் பாடியுள்ளார்.

அரசன் செங்கோலனாக இருந்தாலே நாட்டில் மழை, விளைவு ஆகிய இயற்கை, நிகழ்வுகள் ஒழுங்காக நடைபெறும் என்ற நம்பிக்கை இருப்பதைப் புலவர்கள் பாடியுள்ளனர்.

''கோல்நிலை திரிந்திடின் கோள்நிலை திரியும்,
கோள்நிலை திரிந்திடின் மாரிவறங் கூறும்,..''[18]

என்று மணிமேகலா தெய்வம் கூறியதாக மணிமேகலை தன் தாயிடம் கூறுவது ஒப்பு நோக்கத் தக்கதாகும். இதற்கேற்ப அக்கால மன்னர்கள் பலர் அறநெறி தவறாமல் செங்கோல் ஆட்சி புரிந்தனர். எனினும் அனைத்து அரசா்களும் அவ்வாறு இருந்தனர் என்று கூறுவதற்கில்லை.

''கொடுங்கோல் வேந்தன் குடிகள் போலப்
படுங்கதி ரமையம் பார்த்திருந் தோர்க்கு''[19]

என்னும் சிலப்பதிகாரப் பாடல் வரிகள் மூலம், வெயில் சுட்டெரிப்பது போன்று கொடுமையான ஆட்சியில் மக்களும் அவதிப்படுவர் என்று இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார். தீய வழியில் மக்களைக் கொடுமைப்படுத்துகின்ற ஆட்சியும் நடந்துள்ளதைக் காணமுடிகிறது.

''பலநாள் நிற்பினும் பெறுகுவிர் நில்லாது
செல்வேம் தில்ல எம் தொல்பதிப் பெயர்ந்தென்ன....
சீர்கெழு சிறப்பின் விளங்கிழை அணிய''[20]

என்னும் பாடல் வளம்குறையாமல் நீண்டநாள் மகிழ்வோடு இருப்பதற்கு மூங்கில் எப்படித் தழைத்து வருமோ அதைப்போன்று கொடை வழங்குபவன் நவிர மலைத் தலைவன் என்று கூறுகிறது.

**நன்னன்**

பெருங்கௌசிகனார், நன்னன் என்னும் அரசனைப் புகழ்ந்து கூறும் கருத்துகள், அழுத்தமாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. கெடாத சிறந்த புகழ், உலகம் உள்ளவரை நிலைபெற்று இருக்குமாறு, பகைவர்கள் பலரையும் புறமுதுகிட்டு ஓடச்செய்தவன் நன்னன். அவர்கள் திறையாகத் தந்த பெறுதற்கரிய அணிகலன்களை அறிவுடையோர்க்கு மழைபோல் பரிசுப் பொருள்களை வழங்கக்கூடியவன். அவ்வகையில் கல்வித்திறம் மிக்கவர்களை, நாடாளும் தலைவனும் தாள் பணிந்து வணங்குவான் என்னும் பெருமையை,

''வீற்று வளம் சுரக்கும் அவன் நாடு பல்வல்சியும்...
தொலையா நல்இசை உலகமொடு நிற்ப,
புலவோர்க்குச் சுரக்கும் அவன் ஈகை மாரியும்,
அரசு முழுது கொடுப்பினும், அமரா நோக்கமொடு''[21]

இப்பாடல் உணர்த்துகிறது. நேரடியாக உரைக்கப்படும் அறிவுரைகள் மட்டுமே இலக்கியத்திற்கான தகுதியை அடைவதில்லை. அனுபவங்களின் தொகுப்பாக அமைந்து கற்போரை அதில் ஈடுபடச் செய்து நுட்பமான மதிப்பீடுகளைப் பெறத் துணையாவது இலக்கியம் ஆகும்.

நன்னன் தன்னுடைய மக்களைக் காக்கும் பொருட்டு இரவலர்க்குப் பரிசளிப்பதை முதன்மையான அறமெனக் கொண்டான். இரவலரின் பசியைப் போக்கினால், அவர்களின் வாழ்த்துக்களே மக்களை வாழ்விக்கும் எனக் கருதினான். போரில் பகைவரைப் புறமுதுகிடுமாறு விரட்டி, கிடைத்த பொருள்களை இல்லாதோர்க்கு வழங்கும் ஈகைத் திறத்தையும் பெற்றிருந்தான்.

நன்னன் அவைக்களத்தில் நன்கு கற்ற அறிவினையுடையோர் பலர் திரண்டிருப்பர். அவர்கள் உயிரினும் மேலான ஒழுக்கம் காரணமாக அரசனிடம் தொடர்பு பெற்றிருந்தனர். இவ்வாறு கற்றோருக்குச் சங்க காலத்தில் அரசர்கள் வழங்கிய மதிப்பைக் காணமுடிகிறது. நன்னனின் அரசவையில் பகைவரின் வீரத்தை முறியடிக்கும் திட்டம், தேடிவரும் எளியோருக்கு அருளும் எண்ணம் போன்றவை பிறந்தன. வறுமையை உணர்ந்தவனாகத் திகழ்ந்தமையைப் புலவர் பெருங்கௌசிகனார்,

> ''இகழுநர்ப் பிணிக்கும் ஆற்றலும், புகழுநர்க்கு
> அரசு முழுது கொடுப்பினும், அமரா நோக்கமொடு''[22]

என்று பெருமிதத்துடன் பதிவு செய்துள்ளார். இரவலராக வந்தோர்க்கு ஈந்து புகழ்பெற்று வாழவேண்டும் என்பதைச் சங்க அரசப் பெருமக்கள் குறிக்கோளாகக் கைக்கொண்டனர். தம் சுற்றத்தார்க்கும், தம்மைச் சூழ்ந்தோர்க்கும் வள்ளல் தன்மையுடன் வாரி வழங்க வேண்டும் என்னும் பெருவிருப்பையும் கொண்டிருந்தனர்.

**குமணன்**

பெருஞ்சித்தரனார், குமணனிடம் சென்று தன் வறுமை நிலையை எடுத்துக் கூறி பரிசில் வேண்டுகிறார். ஈன்ற தாய் முதுமை எய்தி, மயிர் நரைத்துக் கண் பார்வை மங்கி கோலைக் காலாகக் கொண்டு முன்றிலில் உயிர்போகாமல் தவித்துக் கொண்டிருக்கிறாள். இருப்பதை வைத்துக் கொண்டு மனைவி வாழ்வு நடத்துகிறாள். குப்பையில் விளைந்த கீரைகளைத் தின்று உயிர் வாழ்கிறாள். அழுக்கேறிய உடையினை உடையவள் என்பதை,

“கோல் காலாகக் குறும் பல ஒதுங்கி..
பிசைந்து தின வாடிய முலையள் பெரிது அழிந்து
குப்பைக் கீரை கொய்கண் அகைத்த”[23]

என்னும் பாடல் பெருஞ்சித்தரனாரின் வறுமை நிலையை எடுத்தியம்புகிறது. குமணனிடம் உணவையும் அணிகலன்களையும் பெற்றதால், வறண்ட காடு மழைபெற்றுப் பொழிவடைந்தது போலத் துன்பம் நீங்கியது என்றார்.

தம்பியாகிய இளங்குமணன் நாட்டைக் கவர்ந்து கொண்டு குமணனைக் கொல்ல நினைக்கின்றான். அதனை அறிந்த குமணன் நாட்டை விட்டு நீங்கிக் காட்டில் சென்று வாழ்கிறான். குமணனிடம் பரிசு பெற முதிரை நாட்டிற்கு வந்த பெருந்தலைச் சாத்தனார். உடன்பிறந்தார் இருவருக்கும் இடையே ஏற்பட்ட பகைமையை நீக்கி ஒற்றுமையை ஏற்படுத்த நினைக்கின்றார்.

காட்டில் மறைந்து இருக்கும் குமணனிடம் தன் வறுமை நிலையை எடுத்துரைக்கின்றார். குமணன் பரிசு கொடுப்பதற்குத் தன்னிடம் பொருள் இல்லை. ஆனால், தன் தலையை வெட்டிச் சென்று இளங்குமணனிடம் காட்டி வேண்டுகின்ற பொருளைப் பெற்று வறுமையைப் போக்கிக் கொள்க என்று வாளை எடுத்து பெருந்தலைச் சாத்தனார் கையில் கொடுத்தான். வாளைப் பெற்றுக் கொண்ட புலவர். குமணன் தலையைப் போன்று களிமண்ணால் வனைந்து துணியால் மறைத்துச் சென்று, நீர் கூறியது போல் தலையை வெட்டிக் கொணர்ந்துள்ளேன் பரிசில் கொடுப்பாயாக என்று கூறினான்.

அதை அறிந்த இளங்குமணன், தன்னிடம் பொருள் இல்லாத போது தன் தலையைக் கொடுத்த குமணனின் கொடை குணத்தைக் கண்டு வருந்தினான். அப்போது புலவர் நடந்தவற்றைக் கூறி இருவரையும் சேர்த்து வைக்கின்றார். புலவர்கள் பரிசில் பெறுவது மட்டுமே நோக்கமாகக் கொள்ளாமல் அரசன் தவறு செய்யும் போது அவனை நல்வழிப்படுத்தும் செயலையும் செய்தனர் என்பதை அறியமுடிகின்றது.

**கொடை**

சங்க காலத்தில் பல அரசர்கள் புலவர்களுக்கும், பாணர், விறலியர், கூத்தர், இரவலர் ஆகியோருக்கும் கொடை வழங்கியுள்ளதை இலக்கியங்களில் வழி அறியமுடிகிறது.

**கரிகாற்சோழன்**

கரிகாற்சோழன் தன்னைத்தேடி வந்த பொருநருக்கு அவர்களின் கிழிந்த அழுக்காடையைக் களைந்து கெட்டிக்கரை அமைந்த உயர்ந்த பட்டாடையைக் கொடுத்தான் என்பதை முடத்தாமக்கண்ணியார்,

"ஈரும் பேனும் இருந்து இறைகூடி
வேரொடு நனைந்து வேற்று இழைநுழைந்த
துன்னர் சிதாஅர் துவர நீக்கி
நோக்கு நுழைகல்லா நுண்மைய பூங்கனிந்து"[24]

என்று சிறப்புறப் பாடுகிறார். மேலும் பொருநர் அணிந்திருந்த ஆடை ஈரும், பேனும் நிறைந்தது. வேர்வையால் நனைந்து கிழிந்த ஆடையை அகற்றிவிட்டுப் பட்டுநூலால் மெல்லிய பூக்களுடன் கூடிய அழகிய வேலைப்பாடு அமைந்த ஆடையை இரவலர்க்கும் பொருநருக்கும் மகிழ்வோடு வழங்கியிருப்பது தெளிவாகிறது. நீர்ப்பாசியின் வேர்போலக் கிழிந்திருக்கும் ஆடையை அகற்றிய கரிகாலன், இரவலனும் தன்னைப் போன்றே இருக்க வேண்டும் என்றெண்ணி பட்டாடை வழங்கியுள்ள செய்தி தெளிவாகிறது.

கரிகாலன் பாடினிக்குப் பொன்தாமரைப் பூவைத் தலையில் சூடிக்கொள்ள கொடுத்தான். நூலைக் கொண்டு கோர்க்காத பொன்னால் செய்த இழையால் முத்துக்களைச் சேர்த்துக் கட்டிய பொன்மாலையை அணியத்தருவான். அந்த ஆபரணம் சூரியனைப் போல ஒளிவீசும் என்பதை,

"எரி அகைந்தன்ன ஏடுஇல் தாமரை
குரிஇரும் பித்தை பொலியச் சூட்டி
நூலின் வலவா நுணங்கு அரில் மாலை
வால்ஒளி முத்தமொடு பாடினி அணியக்"[25]

என்ற இப்பாடல் மூலம் அறியமுடிகிறது. பாட்டுப் பாடிய பாணர்களுக்கு மட்டுமின்றி பாடினிகளுக்கும் கரிகாலன் பரிசு கொடுத்ததை அறியமுடிகிறது.

உணவு, உடை, ஆபரணம் ஆகியவற்றைப் பெற்றதோடு, உணவு உண்டபின் களைப்புத் தெரியாமல் இருப்பதற்காகப் பொன்னால் செய்த கிண்ணத்தில் மதுவை ஊற்றித் தருவான் கரிகாலன் என்பதை,

“போக்கு இல்பொலம் கலம்நிறையப் பல்கால்
வாக்குபு தரத்தர வருத்தம் வீட
ஆர உண்டு போருர் போக்கி”[26]

என்னும் பாடல் தெரிவிக்கிறது. கலப்படம் இல்லாத தெளிவான, குங்குமப்பூ வாசம் வீசும் கள்ளைத் தினமும் போதும் என்று சொன்னாலும் விடாமல் தினமும் தந்துகொண்டே இருப்பான் என்று முடத்தாமக்கண்ணியார் தம் பாடலில் குறிப்பிடுகிறார்.

“பெறல் அருங்கலத்தில் பெட்டாங்கு உண்க எனப்
பூக்கமழ் தேறல் வாக்குபு தரத்தர
வைகல்,வைகல் கைகவி பருக”[27]

இப்பாடல் மூலம் பெண்களும் மதுவை விரும்பி உண்டனர் என்பது தெளிவாகிறது. கரிகாற் சோழனிடம் உணவு, இறைச்சி, ஆடை, ஆபரணம் பலவகைப் பொருள்களைப் பெற்றுக் கொண்டு ஊருக்குச் செல்லும் பொருநரிடம் உடுக்கை போன்ற அடிக் கால்களும் அசைந்தாடும் அழகு நடை உடைய இளம் ஆண் பெண் யானைகளையும் பரிசுப்பொருள்களாகத் தருவதோடு அழியாத் தேர்களும், கொடுத்து வழி அனுப்புவான் என்பதை,

“துடி அடி அன்ன தூங்கு நடைக்குழவியொடு
பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்க எனத்…
இன்மை தீர வந்தனென்”[28]

என்ற பாடல் மூலம் அறியமுடிகின்றது. பொருநர் அவனால் இயன்ற அளவு பரிசுப்பொருள்களையும் பாலின் வெண்மை போன்ற வெள்ளை நிறக்குதிரைகள் பூட்டிய தேரையும் பெற்றுச் செல்வர். இப்பரிசுப் பொருள்கள் அனைத்தும் தாய் மகளுக்குக் கொடுப்பது போல அன்போடு கொடுப்பான் என்பதை,

“கொடுஞ்சி நெடுந்தேர்
ஊட்டு உளை துயல்வர ஓரி நுடங்க
பால் புரை புரவி நால்கு உடன் பூட்டி”[29]

என்னும் பாடல் வழி ஆசிரியர் விளக்குகிறார். நீர்வளம் அதிகமாக இருக்கும் மருதநிலம், வீடுகள், பல ஊர்கள் நிறைந்த நாடுகளையும் தருவதோடு சத்தம் கேட்டாலே கோபம் வரும் யானைகளையும் உயர்ந்த பல வகைப் பொருட்களையும் தருவான். இப்பொருள்களைத் தருவதின் மூலம் கரிகாலன் பொன்னும் பொருளும் உலகில் நிலை அல்ல, உண்மையான அன்பும், புகழும் மட்டுமே நிலையானது என்பதை அறிந்து இருந்தான். மருதநிலம் கடல் அலை போன்ற நீர்நிலைகளை மிகுதியாகப் பெற்று இருக்கும். வயல்களில் நெற்கதிர்கள் குவிந்து இருக்கும். சோலைகள் தென்னை மரங்கள் போன்றன பசுமையாக இருக்கும். உணவுகள் மிகுதியாக இருக்கும். அவ்வுணவை மனிதன் மட்டுமின்றி காக்கைகளும் உண்டு மகிழும் சிறப்பான நிலத்தைக் கரிகாலன் பரிசாகக் கொடுத்தான் என்பதை,

“நன் பல் ஊர நாட்டொடு நன்பல்
வெரூஉப் பறை நுவலும் பரூஉப்பெருந் தடக்கை
வெருவரு செலவின் வெகுளி வேழம்
தரவிடைத் தங்கல் ஓவிலனே”[30]

என்று இப்பாடல்வரிகள் நன்கு உணர்த்துகிறன. இதன் மூலம் நிலையாமையை உணர்ந்த கரிகாற்சோழன் மற்றவர்களுக்குக் கொடுத்து உதவி செய்தான் என்பதை அறியமுடிகிறது.

**நல்லியக்கோடன்**

நல்லியக்கோடன் என்னும் வள்ளல் பரிசிலருக்குத் தன்னுடைய மதம் பொழியும் கன்னங்களும் வலிமையும் உடைய, இருபக்கமும் மணிகள் அசைந்தாடும் யானைகளோடு பெரிய தேரினையும் கொடுத்தான். கூரிய உளியால் செதுக்கிய ஆறுகால்களை உடைய உதிரும் அரும்புகளும் முருங்கமரத்தின் உயர்ந்தகொம்பிலே இருக்கும் மலர்களைப் போன்று செதுக்கும் கை வண்ணம் உடைய தச்சர்களால் ஆன தேரையும் விரைந்து செல்லும் குதிரைகளையும் பாகனையும் பரிசாகக் கொடுத்தான் என்பதனை,

‘‘கூர் உளி பொருத வடு ஆழ் நோன் குறட்டு
ஆரம் சூழ்ந்த அயில் வாய் நேமியொடு…….
அன்றே விடுக்கும் அவன் பரிசில்’’[31]

என்னும் பாடல் விளக்குகின்றது. இப்பொருள்களை எல்லாம் அன்றே தந்து வழி அனுப்புவான்.

சிறுபாணாற்றுப்படையில் ஓய்மா நாட்டு நல்லியக்கோடனின் கொடைப் பண்பினைப் பற்றிப்பாடிய ஆசிரியர் நல்லூர் நத்தத்தனார் பேகன், பாரி உட்பட பிற வள்ளல்களின் கொடையைவிட இவனது கொடை, சிறப்புடையது என்று கூறுகிறார். மலையில் திரியும் மயில் மழையில் நனைந்து குளிரால் நடுங்கியதைப் பார்த்து மனம் தாங்காமல் தான் அணிந்திருந்த போர்வையை மயிலுக்குக் கொடுத்துள்ளான் இதனை,

‘‘கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய
அருந்திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்
பெருங்கல் நாடன் பேகன்’’[32]

என்று இப்பாடல்வரிகள் சுட்டுகின்றன. இவ்வாறு அ∴றிணைப் பொருளுக்கு உதவும் மனப்பான்மையை அருட்கொடை என்று கூறலாம்.

கலைஞர்களின் மானத்தை மதித்துப் போற்றும் பண்பாடு வள்ளல்களிடம் இருந்ததைச் சிறுபாணாற்றுப்படையில் காணமுடிகின்றது. பரிசுபெற வரும் இரவலர்களின் கந்தலாடையை அகற்றிவிட்டு உயர்ந்த பட்டாடைகளை வழங்கியுள்ளதையும் தன்னைத்தேடி வரும் இரவலர்களின் வறுமையை அகற்ற உணவு தருவதோடு மூங்கில் நாரைப்போல, தூய மெல்லிய அழகான ஆடையை உடுத்திக்கொள்ளச் செய்வான். இவ்வாறு கலையைப் போற்றிய கலைஞர்களுக்கு ஆடை வழங்கியதால் இக்கொடையைக் கலைக்கொடை என்று கூறுவர்.

‘‘நீ சில மொழியா அளவை மாசில்
காம்பு சொலித்தன்ன அறுவை உடீஇ,
பாம்பு வெகுண்டன்ன தேறில் நல்கி’’[33]

என்ற பாடலில் நல்லியக்கோடன் தரும் ஆடையானது பாம்புச் சட்டையைப்போல வெண்மையாக இருக்கும் என்று ஆசிரியர் கூறுகிறார். பெரும்பாணாற்றுப்படையில் படைவீரர்கள் வழிப்பறிக் கொள்ளையர்கள் விடுக்கும் அம்புகளைத் தடுக்கும் ஆற்றல் உடைய அழகிய, ஆடைகளை அணிந்திருந்தனா். பண்டைய தமிழர்கள் கண்களுக்குத் தெரியாத பாலாடையைப் போன்ற நுண்ணிய இழைகளால் நெய்யப்பட்ட வெண்மையான ஆடையை அணிந்திருந்தனர் என்பதை,

''சுரிகை நுழைந்த சுற்றுவீங்கு செறிவு உடைக்
கருவில் ஓச்சிய கண் அகன் எறுழ்த்தோள்''[34]

என்ற இப்பாடல் விளக்குகிறது. அறிவியல் வளர்ச்சியில்லாத காலத்திலும் மக்கள் நுண்ணிய இலைகளாலான ஆடைகளை அணிந்துள்ளனர் என்பதை அறியமுடிகின்றது. நல்ல ஆடைகளை அணிய முடியாத இரவலா்களுக்கு நல்லியக்கோடன் கொடுத்து உதவியதை அறியமுடிகிறது.

நல்லியக்கோடனை விரும்பி, எக்காலமும் அவனுடன் நெருங்கி விளங்குகின்ற சான்றோா், அவனுடைய செய்ந்நன்றி உடைமை, சிற்றினம் சேராப்பண்பு, இன்முகத் தோற்றம், அஞ்சிவிழுந்த பகைவா்க்கு அருள் செய்யும் பெருமை, வெஞ்சினம் இல்லாத்தன்மை, பகைவரைக் குலைக்கும் ஆண்மை, போா் வீரா்களுக்கு வழங்கும் ஊக்கம் போன்றவற்றைப் புகழ்கின்றனா். மேற்காணும் இயல்புகள் யாவும் மக்களுக்கும் அரசருக்கும் ஒருசேரத் தேவைப்படும் பாங்கை,

''பெருநா்க்கு ஆயினும், புலவா்க்கு ஆயினும்,
அருமறை நாவின் அந்தணா்க்கு ஆயினும்,
கடவுள் மால்வரை கண்விடுத் தன்ன,
அடையா வாயில் அவன்அருங் கடைகுறுகி''[35]

என்னும் பாடல்மூலம் அறியலாம். சங்ககால வேந்தா்கள் போருக்குச் செல்லும்முன் வஞ்சினம் உரைப்பா். காலந்தாழ்ந்தால் சினம் குறையக்கூடும் என்பதால் அச்சினத்தை நிலையாக வைத்திருக்க வேண்டிய தேவை எழுந்தது. சீற்றம் குறையாமைக்கும், உறுதி குலையாமைக்கும் வஞ்சினம் அடித்தளம் இடுகிறது. இத்தகைய போா்க்கல்வியையே புலவா் பெருமக்கள் அரசனை வாழ்த்தும்போது தம் பாடல்களில் வலியுறுத்துகின்றனா்.

**அதியமான்**

நீண்ட காலம் வாழச் செய்யும் ஆற்றலுடைய நெல்லிக்கனியைத் தான் உண்ணாது ஔவைக்குக் கொடுத்து அவர் நெடிது நாள் வாழும்படி செய்தான் நெடுமான் அஞ்சி

"வலம்படு வாய்வா ளேத்தி யொன்னார்...

சாதனீங்க வெமக்கீத் தனையே"[36]

ஒருமுறை அதியமான் தன் நாட்டில் நின்ற மலைக்குச் சென்றான் அம்மலையிடத்தே பிளவு ஒன்றுண்டு, அதன்கண் அருநெல்லி மரமொன்று இனிய கனிதாங்கி நின்றது. அதனை உண்டவர்கள் நீண்டகாலம் வாழ்வர் என்பதை அறிந்து, வேட்டைக்குச் சென்ற அஞ்சி அருநெல்லி மரத்தை அடைந்து அதன் தீங்கனியைப் பறித்துக் கொண்டு வந்தான். அதனைத் தானே உண்ணாது, அப்போது தன்பால் வந்திருந்த ஔவைக்குக் கொடுத்து உண்ணச் செய்தான். பிறகு அதனை உண்டவர் நெடிது வாழ்வர் என்றறிந்த ஔவையார் பெருவியப்புற்றுத் 'தான் நெடிது வாழ நினையாது, எனக்குத் தந்து என்னை நெடிது வாழப் பண்ணிய இந்நெடுந்தகையின் பெருந்தகைமையை என் என்பேன் என நினைந்து அவனை வாழ்த்தலுற்று, இந்நெல்லிக்கனியின் அருமை கருதாது எனக்குத் தந்து சாதலை நீக்கிய நீ நீலமணி மிடற்றுக் கடவுள் போல மின்னுவாயாக' எனப்பாடி வாழ்த்தினார் ஔவையார்.

**ஆய் அண்டிரன்**

நிலத்தை உழுது வாழ்கின்ற வேளாளர் மரபைச் சார்ந்த ஆய்அண்டிரன் என்னும் வள்ளல் நீலநாகம் தந்த நீலநிற ஆடையை ஆலமரத்தின் கீழமர்ந்த சிவபெருமானுக்கு அளித்ததை,

"நீலநாகம் நல்கிய கலிங்கம்

ஆலமர் செல்வற்கு அமர்ந்தனன் கொடுத்த"[37]

என்னும் பாடல் சுட்டுகிறது. இவ்வாறு இறைவன்மேல் கொண்ட பக்தியால் ஆடையைக் கொடுத்ததைப் பற்றற்றக்கொடை என்று குறிக்கப்பெறுகின்றது.

ஆய் ஆண்டிரன் என்னும் வள்ளல் ஆடுகின்ற குதிரைகள், யானைகள், தேர்கள், செழிப்பான ஊர்கள் நாடுகள் போன்றவற்றை இசைபாடும் கலைஞர்களுக்குப் பரிசாகக் கொடுத்து மகிழ்வான் என்பதை,

‘‘ஆடுநடைப் புரவியும், களிறும், தேரும்
வாடா யாணர் நாடும், ஊரும்
பாடுநர்க்கு அருகா ஆஅய் அண்டிரன்’’[38]

என்று பாடல் சுட்டுகிறது. இசைக்கலைஞர்கள் அக்காலத்தில் செல்வாக்கோடு இருந்தமையை அறியமுடிகின்றது.

**நள்ளி**

சிறுபாணாற்றுப்படையில் நள்ளி என்னும் வள்ளல் தன்னைத் தேடி வரும் பாணர்க்குப் பரிசுப் பொருள்களைத் தந்து உதவி செய்தான் என்பதை,

‘‘அரவக்கடல் தானை அதிகனும் கரவாது
நாட்டோர் உவப்ப நடைப் பரிகாரம்…
நளி மலைநாடன் நள்ளி’’[39]

என்ற பாடல் விளக்குகின்றது. நள்ளியைத் தவிர மற்ற வள்ளல்களும் நறுமண மலர்களையும் சுரபுன்னையையும் மலைகளையும் உடைய நாட்டைக் கூத்தர்க்கு அளித்தவன் காரி என்னும் காரிக் குதிரையை உடைய மன்னன் என்பதை,

‘‘நறும்போது கஞலியநாகு முதிர் நாகத்து
குறும்பொறை நல்நாடு கோடியர்க்கு ஈந்த
காரிக்குதிரை ஓரியும்’’[40]

என்ற பாடல் வரி தெளிவாக்குகிறது. இதே செய்தியைப் புறநானூறும் கூறுகிறது. கூத்தர்களுக்குத் தன் நாட்டையே கொடுத்துப் பெருங்கொடை வள்ளல் ஆனான் ஓரி.

**பாரி**

பாரியும் தன்னைத்தேடி வந்த இரவலர்க்குப் பறம்பு மலையில் இருந்த முந்நூறு ஊர்களைக் கொடுத்துள்ளான். இதனைப் பெருங்கொடை என்றே கூறலாம். காட்டில் வண்டுகள் வந்து மொய்க்கத் தேன் சிந்தும் வாசமலர்கள் பூக்கும்,

சுரபுன்னை மரம் உடைய அடர்ந்த காட்டுப்பகுதியில் முல்லைக் கொடியானது கொம்பின்றித் தவித்தபோது தனது பெரிய தேரையே கொடிபடரக் கொடுத்தவன் பாரி என்னும் வள்ளல். பறம்புமலையின் அரசன், இவ்வாறு அஃறிணைப் பொருளுக்குத் தேர் வழங்கியதால் இக்கொடை அருட்கொடை என்று கூறலாம். ஆய்வேள் என்ற வள்ளலும் தன்னைத்தேடி வரும் இரவலர்க்கு நாட்டினையும் யானையையும் மிகுதியாகக் கொடுத்துள்ளான். பலரும் தன்னைத்தேடி வரும்பொழுது சலிக்காமல் அசைந்து நடைபோடும் அழகிய குதிரைகளையும், அதிகமாகக் களிறும், அழகானத் தேர்களையும் அழியாமல் இருக்கும் வருவாய் தரும் நாட்டையும் கொடுத்தான்.

காடுகளின் பயன் அறிந்தும் அதனை அழிக்கின்ற மனித சமுதாயத்தில், முல்லைக் கொடிக்காகத் தேரைக் கொடுத்திருக்கும் செயல் இயற்கையை நேசிக்கும் மனோபாவத்தை வெளிக்கொணர்கிறது.

**தொண்டைமான்**

தொண்டைமான் இளந்திரையன் வறண்டு காய்ந்த காட்டில் மழை பொழிந்து செழிப்போடு இருப்பதைப் போலவே பாணர்களுக்கு மிகப்பெரிய அளவில் பொன்னும், பொருளும், வெள்ளைப் பிடரி மயிர் உடைய குதிரைகளும் வலிமை மிகுந்த யானைகளையும் பரிசுப்பொருளாகக் கொடுத்து வழியனுப்புவான் இதனை,

“வழங்கத் தவா அப்பெருவளன் எய்தி
வால் உளைப் புரவியொடு வயக்களிறு முகந்து கொண்டு
யாம் அவணின்றும் வருதும் நீயரும்
இருநிலம் கடந்த திரு மறு மார்பின்”[41]

என்னும் இப்பாடல் அறிவிக்கின்றது. இவ்வாறு பரிசுப்பெற்ற பாணன் மற்றவர்களிடம் நீயும் என்னைப்போல் மன்னனிடம் பரிசுப்பொருள்கள் பெற்று வாழ்வாய் எனக் கூறுவதை ஆசிரியர் சுட்டிக்காட்டுகிறார்.

இவ்வுலகில் புகழ் மட்டுமே நிலைத்திருக்கும் என்பதை அறிந்து தன்னைத் தேடி வரும் இரவலர்க்குத் தொண்டைமான் இளந்திரையன் பரிசுப்பொருள்களை வழங்கியுள்ளான். அரசன் கூத்தர்களின், அழுக்கு ஆடைகளை அகற்றிவிட்டு

நூலால் நெய்த ஆடை என்று தெரியாத அளவிற்கு இழையைப் போன்றுள்ள நுண்ணிய வெண்மை நிற உயர்ந்த ஆடையை அணியத்தருவான் என்பதை,

> ‘‘இழைமருங் கறியா நுழைநூற் கலிங்கம்
> எள்ளறு சிறப்பின் வெள் அரைக் கொளீஇ’’[42]

என்று இப்பாடல் வரி விளக்குகிறது.

சான்றோர்களும் பாராட்டும்படியான கருங்கடலில் வெண்மையான சங்கு தோன்றுவதைப் போன்ற வெள்ளிய கழுத்தில் மயிருடைய ஒரே மாதிரியாக இருக்கும் நான்கு குதிரைகள் பூட்டிய தேரைத் தருவான். அது மகிழ்ச்சி அளிக்காமல் இருந்தால் இளந்திரையன் போரிட்டு வென்ற களங்களில் புறமுதுகு காட்டி தோற்று ஓடிய பகைவர்கள் விட்டுச்சென்ற மேடுபள்ளம் எனத் தடுமாறாத நிலங்களைக் கொடுத்து வழி அனுப்புவான் என்பதைக் கீழ்வரும் பாடல்வரிகள் விளக்குகின்றன.

> ‘‘பகல்பெயல் துளியின் மின்னு நிமிர்ந்தாங்குப்
> புனை இரும் கதுப்பகம் பொலியப் பொன்னின்…..
> அன்றே விடுவிக்கும் அவன் பரிசில் இன்சீர்க்’’[43]

என்னும் பாடல்மூலம் தொண்டைமான் இளந்திரையனின் கொடைச்சிறப்பை அறியமுடிகிறது.

**இமயவரம்பன்**

பதிற்றுப்பத்தில் பகைவர்களைப் போரில் தோற்கடித்த இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்ற மன்னன் போரில் வெற்றிபெற்றுத் தன்னைப் பாடிய புலவருக்குப் பரிசுப்பொருளாக ஐந்நூறு ஊர்களும் தென்னாட்டில் வரும் வருவாய்களில் ஒருபாகத்தை முப்பத்தெட்டு ஆண்டுகள் பெற்றுக் கொள்க என்று வழங்கினான் என ஆசிரியர் கூறுகிறார். இமயவரம்பன் ஐம்பத்தெட்டு ஆண்டுகள் அரசு புரிந்தான். சேரமன்னன் தன்னைத்தேடி வரும் இரவலர்க்கு முற்பகலில் மிகுதியான யானைகளும் பிற்பகலில் குதிரைகளும் தருவான் என்னும், கொடைச்சிறப்பை அறிய முடிகிறது.

**நன்னன்**

நன்னனின் கொடைச்சிறப்பு மேலானது. ஏனெனில் கூத்தர்கள் உணவு, உடை என்று வறுமை நீங்கிய பின், ஊருக்குச் செல்கிறோம் என்று கூறினால் மழை ஓயாமல் பொழிவதைப் போல, தடை இல்லாமல் ஓடும் தேரையும் மலை போன்ற வலிமை உடைய யானைகளையும் முத்துமணி ஆடுவதைப் போல அழகிய கழுத்து மயிருடைய குதிரைகளையும் மற்றும் மண்ணில் விளைந்த பல வளங்களையும் தருவான். அவர்கள் அப்பரிசுப்பொருள்களைப் பெற்றுப் பிரிய மனமின்றிச் செல்வார்கள். இதனை,

''நீர் இயக்கன்ன நிலைசெலல் நெடுந்தேர்
வாரிக் கொள்ளா வரைமருள் வேழம்
கறங்கமணி துவைக்கும் ஏறுடைப் பெருநிரை...
வென்றெழ கொடியின் தோன்றும்
குன்றுசூழ் இருக்கை நாடு கிழவோனே''[44]

என்று இப்பாடல்வரிகள் விளக்குகிறன. தடாரிப்பறையை வாசித்த பாணனுக்கு இளங்கன்றையும் பிடியையும் பரிசாகக் கொடுத்தான் பாண்டியமன்னன். மங்கலம் பாடும் பாணர்க்குத் தேரும் குதிரைகளும் பரிசாகக் கொடுத்துள்ளான். இதனை,

''நாள் ஈண்டிய நல் அகவர்க்குத்
தேரோடு மா சிதறிச்''[45]

இப்பாடல்வரிகள் தெளிவுபடுத்துகின்றன. களர்நிலம், உவர்நிலம் என்று பாகுபாடு இன்றி மழை பொழிவதைப்போல வள்ளல்களின் செல்வம் ஊரின் நடுவே உள்ள பயன்மரம் போல அனைவருக்கும் பயன்பட்டது.

**இமயவரம்பன்**

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதான் கல்வியறிவு மிக்க பெரியோரை மதித்து அவர்களுக்கு நாடுகள் பலவற்றைப் பரிசளித்தான். முன்னோரைப் பின்பற்றிக் கொற்றவை வழிபாடு செய்து புகழ்பெற்றான். கல்வி பெற்ற மறையோர்க்குத் தன் கொடைச் சிறப்பால் மகிழ்வித்தான். மறைநூல்களைக் கற்றுணர்ந்தவர்கள், அதனைப் பலருக்கும் கற்பித்துப் பெருமை அடைந்தனர். சங்க கால மன்னர்கள் பல்வேறு வேள்விகள் நிகழ்த்தியமையால் சமயக்கல்வி செழித்தோங்கியது.

முன்னோரை மதித்தல், சான்றோரைத் தொழுதல் போன்ற இத்தகைய வாழ்க்கைக் கல்வியைப் பின்வரும் பாடல் தெளிவுபடுத்துகிறது.

''இமையவரம்பன் தம்பி அமைவர
உம்பற்காட்டைத்தன் கோல்நிறீஇ,...
கருங் களிற்று யானைப் புணர் நிரை நீட்டி,
இரு கடல் நீரும்ஒரு பகல் ஆடி,
பல்யானைச் செல்கெழு குட்டுவனைப்
பாலைக் கௌதமனார் பாடினார் பத்துப்பாட்டு''[46]

கல்வி கற்றவர்களுக்குப் பரிசு அளித்து ஊக்கப்படுத்திய இமயவரம்பன் காலத்தில் சமயக்கல்வியும் செழித்தோங்கியதை அறியமுடிகிறது.

**நீதி**

கிள்ளிவளவனுடைய ஆட்சித்திறனை மாறோக்கத்து நப்பசலையார் என்னும் பெண் புலவர் புகழ்ந்து பாடுகின்ற பொழுது அரசர்களுக்கு வேண்டிய ஈகை, நீதி செலுத்தும் திறன் உன் பரம்பரைக்கே உரியது, நீயாக ஈட்டியது ஒன்றும் இல்லை என்று கூறுகிறார்.

''எள்ளாறு சிறப்பின் இமையவர் வியப்பப்
புள்ளுறு புன்கண் தீர்த்தோன் அன்றியும்''[47]

என்று சிலப்பதிகாரமும்,

''புறவின் அல்லல் சொல்லிய, கறை அடி
ஈதல் நின்பு கழும் அன்றே''[48]

என்று புறநானூறும், புறாவிற்காகச் சிபிச்சக்கரவர்த்தித் தன் தசையை அறுத்துக் கொடுத்தான். கடைசியில் தானே தராசுத்தட்டில் ஏறினான். உடலைக் காட்டிலும் கொடுப்பதற்குச் சிறந்த பொருள் வேறு என்ன இருக்கிறது. கிள்ளி வளவனே! உன் புகழை எவ்வாறு நான் வகையறுத்துத் தனியே கூற முடியும். அது வழிவழி வந்த வழக்கம் என்று நப்பசலையார் புகழ்கிறார். இதன் மூலம் வீரமும், ஈகையும், நீதி வழங்குதலும் அரசனுக்குரிய சிறப்புகளுள் தலையானவை என்பதை உணர முடிகின்றது.

ஆராய்ச்சி மணியின் நாவினை அசைத்த பசுவின் துன்பத்தைப் போக்க தன் மகனையே தேர்க்காலில் இட்டு நீதி வழங்கியவன் மனுநீதிச் சோழன். என்பதை,

''வாயிற் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சுடத் தான்தன்
அரும்பெறல் புதல்வனை ஆழியின் மடித்தோன்''[49]

என்னும் சிலப்பதிகாரப் பாடல் மூலம் அறியலாம். அஃறிணை உயிர் என்று கருதாமல் தன் மகனைக் கொன்று நீதி வழங்கியதன் மூலம் சங்க கால அரசர்களின் நேர்மையான ஆட்சிமுறையைக் காணமுடிகின்றது.

பாண்டிய நெடுஞ்செழியன் கோவலனுக்குத் தவறான தீர்ப்பு வழங்கியமைக்காகத் தன் உயிரை நீத்தான் என்பதைச் சிலம்பின் மூலம் உணரமுடிகின்றது.

நாட்டின் அமைதிக்கும், குற்றங்களைக் களையவும் அக்காலத்தில் தனிக்குழு இருந்ததாகவும், மன்னரே விசாரித்து நீதி வழங்கினார் என்றும் பல சங்கப்பாடல்கள் விளக்குகின்றன.

''அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கிச்
சிறந்த கொள்கை அறங்கூறவையமும்''[50]

என்னும் மதுரைக்காஞ்சி வரிகளில் நீதியை நிலைநாட்ட அச்சம், அவலம், ஆர்வம் போன்றவற்றைக் களைந்து நட்பு, பகை பாராமல் நடுநிலைமையுடன் விளங்குபவர்களே சிறந்த நீதிமான்களாக நியமிக்கப்பட்டுப் போற்றப்பட்டனர் என்கிறது.

''முறையுடை அரசன் செங்கோல் அவையத்து
யான்தற் கடவின் யாங்கு ஆகுவதுகொல்?''[51]

என்னும் குறுந்தொகைப்பாடல், அரசனது நீதி தவறாமல் நடந்து கொள்ளும் அவையின் முன் தலைவியைப் பெறுவதற்கு மடலேறுவாய் எனத் தோழி தலைவனுக்குக் கூறியதாக உணர்த்துகிறது.

''அறன் நிலை திரியா அன்பின் அவையத்து

திறன் இல் ஒருவனை நாட்டி முறை திரிந்து
மெலிகோல் செய்தேன் ஆகுக''[52]

என்னும் புறநானூற்றுப்பாடல் தகுதி உடைய சான்றோரைப் பணிக்கு அமர்த்தியதால் வெற்றி கிடைக்கிறது. நீதியை நிலைநாட்டவில்லையெனில் தோல்வியடைய நேரிடும் என மன்னன் அஞ்சியதாகக் கூறுகிறது.

சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் தங்கள் செயல்களுக்கு அறங்களை மேற்கோள் காட்டுவதும் உண்டு என்பதை,

''மைஇப் மதியின் விளங்கும் முகத்தாரை
வௌவிக் கொளலும் அறன்''[53]

இக்கலித்தொகைப் பாடல் வரிகள் சுட்டுகின்றன. அறங்கூறும் அவையத்தில் தங்களுக்கு நீதி கிடைக்கும் என்ற அக்காலச் சமுதாயம் நம்பியது.

'பிராமணனுக்குத் தலையை முண்டனம் செய்தல் தண்டனையாகும் ஏனையோர்க்கு உயிர்த்தண்டனையே உண்டு எந்தப்பாவம் செய்த போதிலும் பிராமணனைக் கொல்லாமல் காயமின்றி அவன் பொருளுடன் ஊரை விட்டுத் துரத்துக.' என்று மனுதர்ம சாஸ்திரம் நீதி வழங்குவதில் வருணப்பாகுபாட்டைப் புகுத்துகிறது. சங்க நூல்களில் இந்தச் சாதிப் பாகுபாடுகளைக் காணமுடிவதில்லை. அறம் என்பது அனைத்து மக்களுக்கும் அரசன் உட்பட அனைவருக்கும் பொதுவானதாகப் பின்பற்றப்பட்டதை அறியமுடிகிறது. அரசர்க்கு அவ்வப்போது புலவர்கள் நீதிக் கருத்துகளையும் அறநெறிகளையும் எடுத்துரைத்தனர் எனச் சங்க நூல்கள் குறிப்பிடுகின்றன.

பல்வேறு துறைகளின் நீதிகளைக் கூறும் ''புறநானூற்றுப் பாடல்களை ஒருங்கு திரட்டிப் பார்ப்போமானால் அவற்றுள் முப்பத்தொன்பது பாடல்கள் நேரடியாக நீதிநெறிக் கருத்துக்களை மட்டும் எடுத்தியம்புவது புலனாகும். இவை அல்லாமல் அறத்தின் ஆற்றலையும் சிறப்பையும் அறிவிக்கும் பாடல்கள் முப்பத்து மூன்றும், நிலையாமை இயல்பை உணர்த்தும் கையறு நிலைப் பாடல்கள் நாற்பதும் அதில் இடம் பெற்றுள்ளதை நாம் காணலாம். இவ்வகையில் நோக்குகின்ற பொழுது புறநானூற்றில் அறத்தைப் பற்றி அறிவிக்கும் பாடல்கள் சற்றேரக்குறையை நூற்றிருபது உள்ளமைப் புலனாகிறது'' என்று க.த. திருநாவுக்கரசு

குறிப்பிட்டுள்ளார். இத்தகைய அறக்கருத்துக்களைப் புறநானூறு மட்டுமின்றிப் பிற அறநூல்களும் அகநூல்களும் பதிவு செய்துள்ளன.

''திறவோர் செய்வினை அறவதாகும்''[54]

''மரம்சா மருந்தும் கொள்ளார் மாந்தர்
உரம் சாச் செய்யார் உயர்தவம் வளம் கெடப்
பொன்னும் கொள்ளார், மன்னர்''[55]

என்னும் பாடல் மனிதர்கள் மருத்துவக் குணம் நிரம்பிய மரத்திலிருந்து மருந்து எடுக்கும்போது அது பட்டுப் போகும்படி முழுவதும் எடுக்கமாட்டார்கள். தவம் செய்யும் முனிவர்கள் தம் வலிமை முழுவதும் கெடுமளவு தவம் செய்யமாட்டார்கள். அதே போல மன்னரும் தன்கீழ் வாழும் குடிமக்களின் வளமைகளெல்லாம் கெட்டுப் போகுமளவு வரியை அதிகமாகப் பெறமாட்டார் எனக் கணியன் பூங்குன்றனார் நற்றிணைப் பாடலில் விளக்கியுள்ளார்.

''விழையா உள்ளம் விளையும் ஆயினும்
அறனும் பொருளும் வழாமை நாடி,''[56]

என்னும் அகநானூற்றுப்பாடல் கூறும் அறிவுரையும் ஒப்பு நோக்கத் தக்கதாகும். ஆகவே சங்கப் புறப்பாடல்கள் மட்டுமல்லாது அகப் பாடல்களும் பல அறக் கருத்துக்களை எடுத்தியம்புகின்றன.

**போருக்கான காரணங்கள்**

அரசாட்சித் தோன்றுவதற்கு முன்னர் இனக்குழு மக்களிடையே செல்வமாக விளங்கிய ஆநிரைகளைக் கவரும் மாடுபிடிச் சண்டைகளே பிற்காலத்தில் அரசன் என்ற அதிகாரத்தின் கீழ் எல்லையை விரிவுபடுத்துவதற்காகவும் பிற நாடுகளைத் தனது கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருவதற்காகவும் போர் நடந்தது.

பல தருணங்களும் செயல்களும் போருக்கான காரணங்களாகத் திகழ்ந்தாலும் முரண்பாடுகளே முக்கியத்துவம் பெறுகிறது எனப் பல அறிஞர்கள் குறிப்பிட்டுள்ளனர். ''இயல்பான மறப்பண்பு, மண்ணாசை, இடஞ்சிறிதென்னும் ஊக்க

மேலீடு, அரசர்களாகத் திகழும் உட்கோள். அரசுரிமை யார்க்கெனும் சிக்கல், மானக் குறைவு உண்டாக மற்றையோர் நடத்தல், மகள் மறுத்தல் ஆகிய காரணங்களால் போர் தோன்றக் கூடும்''[57] என்று வித்தியானத்தன் குறிப்பிட்டுள்ளார். ஊர்களும் நாடுகளும் உருவாவதற்கு முன்னர் காடுகளிலும் குகைகளிலும் மனிதன் விலங்கு வாழ்வை மேற்கொண்டு வந்தான். இவர்கள் தற்காப்பிற்காக வேட்டையாடவும் உணவிற்காக முனையும் போதும் அதிக வலிமை கொண்டவன் தலைவனாகத் தேவைப்பட்டான்.

குடிப்பிறப்பாலும் பெரும்பான்மையரின் விருப்பத்தாலும் தலைமையேற்கும் நாகரிகம் தோன்றுவதற்குப் பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே உடல் வலிமையும் வீரமும் பொருந்தியவன் தலைவனாக இருந்தான். என்பதை,

``எண்டேர் செய்யுந் தச்சன்
திங்கள் வலித்த காலன் னோனே''[58]

என்ற பாடல் விளக்குகிறது. வலிமை மிக்க வேந்தன் தலைவனான பிறகு அவனது மரபு தொடர்ந்து தலைமைக்குரியதாகிறது. இதன் மூலம் உடல் வலிமையும் பேராற்றலும், வீர உணர்வுமே தலைமைக்கும் போற்றுதலுக்கும் உரியனவாகக் கருதப்பட்டன. இத்தகைய சமூக அமைப்பில் வீர உணர்வே எல்லாவற்றிற்கும் உரிய தகுதியாகக் கருதப்பட்டிருக்கிறது.

``யானை தாக்கினும் அரவுமேல் செலினும்
நீனிற விசும்பின் வல்லேறு சிலைப்பினும்
சூல் மகள் மாறா மறம் பூண் வாழ்க்கை''[59]

என்ற பாடல் மறவர் குலப்பெண்களின் வீரம் பற்றிக் குறிப்பிடுகிறது. வீர நிலைக் காலத்திலிருந்த போர் விருப்பச் சமூகம் சங்க காலத்திலும் இருந்திருக்கிறது. இச்சமூகத்தின் தலைவர்களான மன்னர்கள் இயல்பாகவே வீரா் குடியில் பிறந்தவர்களாக இருந்திருக்கின்றனர்.

``நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்
பாசறை யல்லது நீயொல் யாயே''[60]

என்னும் பாடல் மன்னன் அரண்மனையில் இருப்பதைவிடப் போர்ப் பாசறையில் இருப்பதையே விரும்புவதாகப் பாடப்பட்டுள்ளது. தலையேற்கும்

மன்னரும், போர்த் தொழில் செய்யும் மறவரும், பெண்களும் தலைசிறந்த பண்புகளைப் பெற்றிருந்தனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

பகைவர் நாட்டின் 'அழிவிற்கிரங்குதல்' என்னும் பொருண்மையுடைய கொற்றவள்ளைத் துறைகூட மாற்றார் அழிவிற்கிரங்குவதாக அமையாது வென்றவனின் அழிவுத்திறம் பேசுவதாகவே அமைகிறது. நச்சினார்க்கினியர் இதனைப் புறத்திரட்டில் கூறும்போது கீழ்க்காணும் முத்தொள்ளாயிரப் பாடல் ஒன்றை உதாரணம் காட்டியுள்ளார்.

"வேரறுகை பம்பிச் சுரைபடர்ந்து வேலைபூத்
தூரறிய லாகா கிடந்தனவே- போரின்
முகையவிழ்தார்க் கோதை முசிறியார் கோமான்
நகையிலைவேல் காய்த்தினார் நாடு"[61]

இப்பாடலிலிருந்து அருள், இரக்கம் ஆகிய பண்புகளுக்கு இடமில்லாத வகையில் வீரநெறி அமைந்த தன்மையை இவ்விலக்கியங்களின் மூலம் உணரலாம். குருதியும் கொலையும் கொண்ட போர்க்களக் காட்சிகளைத் தம் பாடல்களில் புலவர்கள் அணிநலன்களுடன் தொகுத்துள்ளனர். மன்னர்களுக்கு இடையிலான போரைப் புலவர்களால் போற்றிப்பாட வேண்டும் என்பதற்காகப் போரை வீரமாகவும், வாழ்நாள் கடனாகவும் அரசர்கள் கருதினார்கள்.

"மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வெளவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்
புலியொடுவில் நீக்கிபுகழ் பொறித்த கிளர் கொண்டை
வலியினான் வணக்கிய வாடாச் சீர்த் தென்னவன்"[62]

என்னும் பாடல் என்று அரசன் போர் செய்வது புகழ்பெறுவதற்கு என்பதைக் குறிப்பிடுகிறது. அதே போலப் புகழுக்கு மாறாக இகழ் வரும் போதும் போர் தொடுத்திருக்கின்றனர் என்பதைத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் தன்னைப் பகைவேந்தர் 'இளையன்' என்று கூறிப் பழித்தமைக்காகப் போரில் இரங்கினான் எனச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

"புகழெனின் உயிருங் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர்"[63]

என்னும் பறுநானூற்று வரிகள் அரசுரிமை காரணமாக ஒருகுடியிற் பிறந்த சோழ வேந்தர் போர்க்கெழுந்த செயலையும், அரசுரிமை வேண்டி தந்தைக்கெதிராகப் போர் செய்ய முனைந்த கோப்பெருஞ்சோழனின் மகன்கள் செயலையும் பார்க்கும் போது பிறர் மீது மேலாதிக்கம் செய்யும் வீர உணர்வே போருக்கான அடிப்படைக் காரணமாகிறது என்பதை உணரலாம்.

“விருந்தெதிர் பெறுகதில் யானே யென்னையும்
நாடு தரு விழுப்பகை யெய்துக வெனவே”[64]

என்னும் பாடல் சமுதாயத்தில் போர் இன்றியமையாத தேவையாகக் கருதப்பட்டது. ஆகவே உணர்வு மிக்க ஒரு சமூகத்தின் மனவெழுச்சியான வீரமும், புகழுணர்வும் கூடப் பண்டைத் தமிழர்களின் போருக்குக் காரணமாக இருந்திருக்கலாம் என்பதை அறியமுடிகின்றது.

சங்ககாலப் போருக்கான காரணங்கள் பற்றிச் சுப்ரமணியன் கூறும் கருத்துகள் பின்வருமாறு:

1. “போர் மனிதனுடைய இயற்கைச் செயல் என்னும் கருத்து
2. அரச குலப் பகைமைகள்
3. வெற்றியையும் நாடு பிடித்தலையும் பெரிதும் வேண்டல்
4. பொச்சாத்தல் பிறரிடத்து அதிகாரம், பெருமை, செல்வம், புகழ், செல்வாக்கு என்பவையிருத்தலைப் பொறாமை.
5. மறக்குலத்தால் உந்தப் பெற்ற மற உணர்ச்சி
6. போர்க்களத்தில் இறந்துப்பட்டோர் துறக்கம் அடைவோம் என்னும் நம்பிக்கை.
7. மகட்கொடை மறுத்தலால் ஏற்படும் மனத்தாங்கல்கள்
8. படையும் போர் மரபுகளும் மன்னனுடைய புகழை மிகுவித்தன என்னும் எண்ணம்.
9. நடுகல் என்னும் நிலையம்

10. கடிமரம் புனிதமானது என்பது

11. எல்லைகள் நிர்ணயிக்கப்படாத பல சிறு நாடுகள்; தமிழகத்து முடிமன்னர்களுக்குக் கீழ்ப்படிந்த சிற்றரசர்கள், இக்கீழ்ப்படிதல் இத்தன்மைத்து என்று நிர்ணயிக்கப்படாமை, தவிர இம்முடி மன்னர்கள் தமக்குள்ளேயும் ஆதிக்கம் கருதி இடையறாது போரிடுதல்.

12. போர் போரை விளைவிக்கும் என்பது''[65]

போன்ற காரணங்களால் போர் நடந்திருக்கும் என்பதை உணரமுடிகின்றது.

**போர் மரபு**

சங்ககாலப் போர் மரபுகள் பல நமக்கு வியக்கத்தக்கவையாகவே உள்ளன. படைவீரர்கள் அவர்களின் நாட்டிற்கேற்ப அடையாளப் பூச்சூடினர். இவ்வழக்கம் வேறெந்த மொழி இலக்கியங்களிலும் இல்லையெனலாம். வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை. வாகை, காஞ்சி என்னும் அறுவகை மலர்கள் புறத்திணையில் வகுக்கப்பட்டுள்ளன. மேலும் போருக்குப் புறப்படுவோர் ஊர்க் கிணற்றில் நீராடி வெள்ளையாடை உடுத்தினர் என்பதை,

''முதூர் வாயிற் பனிக்கய மண்ணி
மன்ற வேம்பி னொண்குழை மலைந்து''[66]

''வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித் துடீஇ''[67]

என்று புறநானூறு கூறுகிறது. போருக்குப் புறப்படும் முன் சகுனம் பார்த்தல் குறிகேட்டல் போன்ற வழக்கங்களும் இருந்துள்ளன என்பதை,

''காலனும் காலம் பார்க்கும் பாராது
வேலீண்டு தானை விழுமியோர் தொலைய''[68]

''புதுப்புள் வரினும் பழம்புட் போகினும்
விதுப்புற வறியா ரமக் காப்பினை''[69]

என்னும் புறநானூற்றுப் பாடல்கள் மூலம் உன்னி மரத்தைச் சகுனம் கேட்டுப் போருக்குச் செல்லும் வழக்கத்தினைக் காட்டுவதாக அமைந்துள்ளன.

களரும் மணலும் பரந்த பெருவெளிப் பகுதிகளில் போர்க் களங்களை அமைத்துக் கொண்டனர். அவைப் ‘பறந்தலை’ என அழைக்கப்பட்டன. வாகைப் பறந்தலை, வெண்ணிப் பறந்தலை தலையாலங்கானம் போன்ற களப்பெயர்கள் மூலம் அறியலாம். போர்கள் அனைத்தும் பகற்பொழுதிலேயே நடைபெற்றிருக்கின்றன. இரவுப் பொழுதில் போரைத்தவிர்த்துப் பாசறைக் குடில்களில் தங்கி ஓய்வெடுக்கும்போது, போரில் காயம் பட்டவர்களுக்கு மன்னர் அறிவுரை கூறுவது வழக்கமெனச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன.

**போர் முறைகள்**

போர்க்களத்திலும் மன்னர்கள் ஒரு சில தர்மங்களைப் பின்பற்றியுள்ளனர். போர்க்குறிப்பு இல்லாதவரும் தன் கருத்தை வெளிப்படுத்தாமல் காலந்தாழ்த்துவதும் நாணத்தக்கச் செயல்களாகக் கருதப்பட்டன.

பசுவும் அதனியல்பை ஒத்த பார்ப்பனரும். பெண்களும், நோயுற்றவரும், இறந்து தென்திசையில் வாழும் முன்னோர்களுக்கு அரிய சடங்குகளைச் செய்யும், புதல்வர்களைப் பெறாதாரும், போரின் போது பாதுகாப்பான இடத்திற்குச் செல்லுங்கள் எனப் பல்யாகசாலை பெருவழுதி குறிப்பிடுவதாக நெட்டிமையார் என்ற புலவர் கீழ்வரும் புறநானூற்றுப்பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

‘‘ஆவும், ஆன், இயற் பார்ப்பன் மாக்களும்,
பெண்டிரும், பிணியுடையீரும் , பேணித்
தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போல் புதல்வர்ப் பெறா அதீரும்’’[70]

இதற்கு முரணாக அகநானூற்றுப் பாடலொன்று கொடுத்த பசுவை வெட்டி உண்ணும் வழக்கத்தினரும் இருந்தனர் என்பதை,

‘‘தெய்வம் சேர்ந்த பராரை வேம்பிற்
கொழுப்புஆ எறிந்து குருதி தூஉய்
புலவுப் புழுங் குண்ட வான்கண் அகலறை’’[71]

என்று கூறுகின்றது. போரில் புறங்கொடுத்தல் என்பது மிகவும் இழிந்த செயலாகக் கருதப்பட்டது. அவ்வாறு புறமுதுகிட்டு ஓடுபவனிடம் போர் செய்வதும்

அறமன்று அவனைப் பெண்டிர் நகைப்பர். போரில் புறமுதுகிட்டு ஓடினால் பெண்களும் விரும்பமாட்டார்கள் என்பதை உணரமுடிகின்றது.

**போர்முறைகள்**

போர்முறைகளும் விதிகளும் காலத்துக்குக் காலம் மாறிக்கொண்டே வருகின்றன. வாளையும் ஈட்டியையும் கொண்டு போரிட்ட காலத்துப் போர்முறைகள் ஒருவிதம். துப்பாக்கியையும் பீரங்கியையும் கொண்டு போரிடுவது இன்னொரு விதம். போர் உன்னதமானது, புனிதமானது போன்ற கற்பனையை ஆளும் வர்க்கம் திட்டமிட்டு உருவாக்கியிருக்கிறது. சான்றோர் என்றைக்கும் போர் கூடாது என்றே கூறிவருகிறார்கள். இன்றைய போர் நடைமுறைகளையும் வரலாற்றையும் பார்க்கும் போது சங்ககாலச் சமுதாயத்தில் போர் நடந்திருக்கும் விதங்கள் மிகவும் போற்றத்தக்கவையாகவே காட்சியளிக்கும்.

சங்க இலக்கியமும் தொல்காப்பியமும் ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் இயற்றப்பட்டவை. அக்காலத்தில் நிகழ்ந்த பல போர் நிகழ்வுகளைப் புறநானூறும் பதிற்றுப்பத்தும் தொல்காப்பியப் புறத்திணையியலும் எடுத்துரைக்கிறன.

**போரின் ஐந்து நிலைகள்**

தொல்காப்பியர் புறத்திணைகளில் போரின் ஐந்து நிலைகளைக் குறிப்பிடுகிறார். அந்த ஐந்து நிலைகளிளும் ஐவகைப்பூக்களை வீரர்கள் அணிந்தனர். பழங்காலத்தில் வீரர்கள் வட்டுடை என்ற தனியான உடையை அணிந்தனர் என்று தெரிந்தாலும், அவர்களுக்கெனத் தனித்தனிச் சீருடைகள் இருந்ததாகத் தெரியவில்லை. அதனால் வீரர்கள் பூக்களைச் சூடினார்கள் என்று கருதலாம். தொல்காப்பியர் ஆநிரை கவர்தல் போரின் தொடக்கமாய் அமைந்தது என்கிறார். ஆநிரை கவர்வோர் வெட்சிப் பூ அணிந்து கொள்வர். அவர்கள் நற்குறிகண்டே தங்கள் பணியினைத் தொடங்கினர். வீரர்கள் நற்சொல் அல்லது விரிச்சி கேட்க ஊருக்குள் சென்று நோக்குவர். பின் உளவு பார்ப்பர். ஆநிரைகளைக் கவர்வதைத் தடுப்பவர்களுடன் போர் தொடுப்பர். பின் வெற்றிக்குரிய தெய்வமான கொற்றவையை வணங்கி, கள் குடித்துக் கொண்டாடுவர்.

ஆநிரைகள் அக்காலச் செல்வ இருப்பு. அதனால்தான் மாடு என்ற சொல்லுக்குச் செல்வம் என்ற பொருள் எழுந்தது. பெற்றம் என்ற சொல் செல்வத்தைப் பெறுதல் என்ற சொல்லின் அடிப்படையாக அமைந்தது. எனவே ஆநிரைகவர்தல் என்பது இன்னொருவனுடைய செல்வத்தைத் திருடும் செயலே ஆகும். பசுக்களைக் காப்பாற்றவேண்டும் என்ற நோக்கைவிட, எதிரியின் பசுக்கூட்டமாகிய செல்வத்தைக் கொள்ளையடித்தலே ஆநிரை கவர்தலின் நோக்கமாக இருந்தது. இது பகை அரசன் மீது படையெடுப்பதை மறைமுகமாக உணர்த்துவதாக இருக்கலாம்.

பகைவர் நாட்டைக் கவர விரும்பும் மன்னன் வஞ்சிப்பூ அணிந்து செல்வது வழக்கம். போரின் இறுதியில் பகைவர் நாடு எரிக்கப்படும். தமக்கு அடங்கித் திறை செலுத்தாத நாட்டின்மீது மீண்டும் போர்தொடுக்கப்படும். இப்போரில் உதவுவோர்க்கு மாராயன் என்று பட்டமளிப்பது பிற்காலத்து வழக்கு. போர்க்காலத்தில் வீரர்களுக்குப் பெருஞ்சோற்று உருண்டைகள் அளிப்பது வழக்கம்.

அரணைக்கைப்பற்ற போரில் ஈடுபடுவோர் உழிஞைப்பூச் சூடிக்கொள்வர். முற்றுகைப் போர் உழிஞைப்போர் எனப்படும். முற்றுகையை முறியடிக்கும் போர் நடவடிக்கைகள் நொச்சி எனப்படும். கோட்டைக்குள் இருப்பவர் வெற்றியடைவதும் உண்டு. வெளியிலிருந்து தாக்குவோர் வெற்றியடைதலும் உண்டு. தாக்கச் செல்வோர் வெற்றி பெற்றால் அதன் அடையாளமாக மண்ணுமங்கலம் நடைபெறும்.

கோட்டைக்கு அப்பால் வெட்ட வெளியில் இருபெருவேந்தரும் போர்புரிவது தும்பைப்போர் ஆகும். போரிடுவோர் தும்பைப் பூச் சூடிக்கொள்வர். இப்போரில் நால்வகைப் படைகளும் பயன்படுத்தப்படும்.

போரில் வெற்றி பெற்றோர் வாகைப்பூச் சூடுவர். யானை மீதிருந்த வேந்தனைக் கொன்ற மற்றொரு வேந்தன் தன் வாள்வீரர் சூழ ஆரவாரம் செய்தல் ஒள்வாள் அமலை எனப்பட்டது. இவை யாவும் தொல்காப்பியத்தினால் தெரியவரும் செய்திகள். சேவியர் தனிநாயகம் அடிகள், இவை யாவும் பழங்காலச் சமூகத்தின் எச்சங்களாகவும் நினைவுகளாகவும் இருந்தது. எழுதப்பட்டவையே அன்றி, உண்மையில் சங்க காலத்தில் நிகழ்ந்தவை அல்ல என்கிறார். அகத்திணையைப்

படைக்க கவிதை மரபுகள் வகுக்கப்பட்டது போல, புறத்திணையைப் படைக்க தொல்காப்பியர் வகுத்த கவிதை மரபுகள் இவை என்று நாம் முடிவு செய்யலாம்.

சங்ககாலத்தில் போருக்கெனச் சில ஒழுங்குமுறைகள் இருந்தன. பழங்காலத்தில் நேருக்கு நேர் வாள், வில், ஈட்டி முதலியன கொண்டு போரிடும் முறையே இருந்தது. எந்தச் சமூகத்திலும் - மிகப் பழமையான குடிகள் உட்பட சண்டைக்கெனச் சில விதிகள் இருக்கவே செய்யும். சான்றாக நேருக்குநேர் ஆட்கள் போரிடும் பழங்கால முறையில் எந்த நாட்டிலும் முதுகில் தாக்குவது ஏற்றுக்கொள்ளப்பட்டதில்லை.

இராவணன் போர்க்களத்தில் ஆயுதங்களை இழந்து நிராயுதபாணியாக நின்றபோது இராமன் நினைத்திருந்தால் அவனைக் கொன்று அன்றே வெற்றி வாகை சூடியிருக்க முடியும். ஆனால் சத்திரியர்களுக்குரிய போர் மரபைப் பின்பற்றி ‘இன்று போய் நாளை வா’ என்று அனுப்புகிறான். இங்கு நீதியை நிலைநாட்டிய இராமன் வாலியை மறைந்து நின்று கொல்லுகிறான்.

மகாபாரதத்தில் சில இடங்களில் போர் மரபுகள் மீறப்பட்டுள்ளன. பத்தாம் நாள் போர்க்களத்தில் பீஷ்மரைக் கொல்ல, அர்ச்சுனன் சிகண்டியை ரதத்தின் முன் நிறுத்தும் போது, பீஷ்மர் நிராயுதபாணியாக நின்கின்றார். இதுதான் அவரை வீழ்த்துவதற்குச் சரியான தருணம் என்று கிருஷ்ணர் கூறுகிறார். அர்ச்சுனன் முதலில் தயங்கினாலும் போர் மரபை மீறி அம்புகளால் பீஷ்மர் உடலைச் சல்லடையாக்குகின்றான். போர் நெறிகளை வகுத்த பீஷ்மருக்கே அது பயன்படவில்லை.

பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் குருவாக இருந்த துரோணச்சாரியாரிடம் போர்ப்பயிற்சி பெற்றவன் துஷ்ட்டத்துய்மன். நீதி தவறாத தருமன் போர்க்களத்தில் அசுவத்தாமன் என்று கூறியதும் கிருஷ்ணர் சங்கை எடுத்து ஊதுகின்றார். துரோணர் தன் மகன் அசுவத்தாமன் இறந்து விட்டான் என்று கருதி ஆயுதத்தைக் கீழே வைத்துவிட்டு நிராயுதபாணியாக நின்றபோது போர் நெறியை மீறிய துஷ்ட்டத்துய்மன் துரோணரின் சிரத்தை அறுக்கிறான்.

பதின்மூன்றாம் நாள் போரில் அர்ச்சுனன் மகன் அபிமன்யுவைக் கௌரவர்கள் சுற்றி வளைத்து ஆயுதம் இல்லாத நிராயுதபாணியைக் கொன்றனர்.

பதினேழாம் நாள் போரில் தேரை இழந்து நின்ற கர்ணன் மீது அர்ச்சுனன் அம்பு தொடுக்கின்றான்.

பதினெட்டாம் நாள் போரில் துரியோதனனைத் தொடையில் அடித்துக்கொல்கின்றான் வீமன். போர் மரபுப்படி இடுப்பிற்குக் கீழ் அடிக்கக்கூடாது.

நீதியை நிலைநாட்ட சில சமயங்களில் போர் மரபுகளும் மீறப்பட்டதை மகாபாரதம் எடுத்துரைக்கின்றது.

புறமுதுகிட்டு ஓடும் எதிரியையும் ஆடைகழன்ற நிலையில் நின்றோரையும் மேய்ச்சல் நிலத்தில் வீழ்ந்தோரையும் நீரில் பாய்ந்தோரையும் படைக்கலமின்றி நிராயுதபாணியாய் நிற்போரையும் தாக்குதல் கூடாது என்பவை அக்காலத்தில் பொதுவான விதிகள் என்று கூறலாம்.

''ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்
புதுவது அன்று; இவ்வுலகத்து இயற்கை''[72]

என்று கொள்கையே வகுக்கிறார் இடைக்குன்றூர் கிழார். உலகில் இயற்கையாகவே ஒருவனோடு ஒருவன் போரிடுவதும் ஒருவனை ஒருவன் கொல்லுதலும் நடைபெற்று வருகிறது என்பது பொருள். போரில் பிறரை அழிப்பவர்களுக்கு மிகப் பொருத்தமான பாட்டு இது. பாதிக்கப்பட்ட தலைவன் ஒருவனின் சார்பாகப் பாடியிருந்தால், 'கொல்லாமையே இவ்வுலகத்து இயற்கை' என்று பாடியிருந்தாலும் இருப்பார். ஆனால் பாதிக்கப்பட்டவர்களுக்கும் தோல்வியுற்றவர்களுக்கும் யாரும் ஆதரவு இல்லை என்பது உண்மை.

சங்க கால அரசர்கள் போரினால் பெற்ற வெற்றிகளைத் தங்கள் பெயருடன் இணைத்துத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்பது போலப் பெருமைப்பட்டுக் கொண்டனர். போரில் இறந்தாலும் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் என்று பெயரிட்டு அழைக்கப்பட்டதனால் அவர்களது வெற்றியின் பெருமிதம் புலனாகிறது.

போர்க்களத்தில் மன்னர்கள் வஞ்சினம் உரைப்பது வழக்கம். பூதப்பாண்டியன், நெடுஞ்செழியன், நலங்கிள்ளி ஆகிய மூவரும் வஞ்சினம் உரைப்பதாகப் புறநானூறு கூறுகிறது. நெடுஞ்செழியன் நான் பகையரசர்களை வென்று, அவர்களின் முரசத்தைக் கைப்பற்றவில்லை என்றால், என் குடிமக்கள் என்னைக் கொடியவன் என்று தூற்றுவார்களாக, மாங்குடி மருதன் முதலிய புலவர்கள் என்னைப் பாடாமல் விடுவார்களாக, நான் இரப்போர்க்கு இல்லை என்று கூறுவேன் ஆகுக என்று கூறியிருப்பது குறிப்பிடத்தக்கவையகும்.

**படைப்பிரிவுகள்**

யானைப்படை மிக இன்றியமையாத ஒன்று. ஆனால் முன்னணிப்படையில் பயன்படுவதில்லை. பின்னால் சென்று எதிரிகளைப் பெரிய எண்ணிக்கையில் அழிக்கவும் அரண்களை உடைக்கவும் யானைகளே உதவும். அரசனும் முதன்மையான படைத்தலைவர்களும் யானை மீது சென்றனர். எண்பேராயத்தின் உறுப்பினர்களில் ஒருவர் யானை வீரர். இவரை யானைப்படைத் தலைவர் எனக் கருதமுடியும். யானைகளுக்கு மதுவூட்டி வெறியேற்றி அழைத்துச் சென்றனர். வலிமை மிக்க கோட்டை வாயில்களைத் தாக்கி உடைப்பதற்கு யானைகளைப் பயன்படுத்தினர் என்று பூரணச்சந்திரன் கூறுகிறார்.

குதிரைப்படை விரைந்து தாக்குவதற்குரியது எனவே முன்னணிப்போரில் அதன் பயன் மிகப் பெரிது. எண்பேராயத்தின் உறுப்பினர்களில் இன்னொருவர் இவுளிமறவர். இவரைக் குதிரைப்படைத் தலைவர் எனக் கருதலாம். போருக்கான குதிரைகள் எப்போதுமே அரபு நாட்டிலிருந்துதான் நம் நாட்டிற்கு இறக்குமதி ஆயின. பாண்டிய அரசன் 4000 குதிரை வீரர்களை வைத்திருந்ததாக மெகஸ்தனிஸ் கூறுகின்றார். ஆனால் அக்காலத்தில் குதிரைகளுக்கு இலாடம் அடித்துப் பயன்படுத்தாமையால் ஏராளமான குதிரைகள் விரைவில் இறந்துவிட்டன. தமிழர்களுக்குக் குதிரைகளைச் சரிவரப் பயன்படுத்தத் தெரியவில்லை என்றும் ‘வாசப்’ கூறுகிறார்.

தேர்ப்படையும் பழங்கால மன்னர்களுக்கு உண்டு. இளஞ்சேட் சென்னி என்ற சோழன் பல அழகிய தேர்களை உடையவன் என்று தெரிகிறது. அக்காலத்தில் தேர் செய்யும் தச்சர்கள் மன்னனால் பணியமர்த்தப்பட்டிருந்தனர். தேர்கள்

குதிரைகளால் இழுக்கப்பட்டன. காலாட்படையில் மறவர், எயினர், வேடர், மழவர், பரதவர், மலையர், ஒளியர், கோசர் போன்ற பல இன வீரர்கள் இருந்தனர். யவனர்களும் படைவீரர்களாகப் பணியாற்றினர். மழவர்கள் அடிக்கின்ற கோலுக்கு அஞ்சாது மேன்மேலும் சீறி வருகின்ற நாகம் போல, அங்சா நெஞ்சம் கொண்டவர்கள் என்று இலக்கியங்கள் சிறப்பிக்கின்றன. முன்னணிப்படைப் பிரிவு தூசிப்படை, இறுதியாக வருவது கூழைப்படை எனப்பட்டது.

கடல் வாணிகத்திற்குப் பாதுகாப்பளிக்கவும் கடற்கொள்ளைக்காரர்களை அழிக்கவும் கப்பற்படை பயன்பட்டது. கரிகாலன் இலங்கைமீது படையெடுத்துச் சென்று கைதிகளைப் பிடித்து வந்ததற்குக் காரணம் அவனிடம் வலிமைமிக்க கப்பற்படை இருந்தமையே ஆகும். கடலில் அரண் அமைத்துக் கடற்கொள்ளையில் ஈடுபட்ட கடம்பர்களை ஒழித்துக் 'கடல்பிறக்கோட்டிய' என்னும் சிறப்புப்பெற்றான் சேர அரசன் செங்குட்டுவன்.

போரைத் தொடங்குவதெனத் தீர்மானித்தவுடன் படைக்கான போர்வீரர்களைத் திரட்டுவதற்குத் தூதுவர்களை அனுப்புவது வழக்கம். சிலப்பதிகாரம் முதலிய பிற்கால இலக்கியங்கள் இதனைக் குறிப்பிடுகின்றன. மறவர், எயினர், மழவர் போன்றவர்கள் போரில் சேர்ந்தனர். படை புறப்படுவதற்கு முன் நன்னிமித்தங்கள் பார்த்த நல்ல நாளில் வாளைப் புனித நீராட்டி, குடை, முரசு ஆகியவற்றுடன் அணிவகுப்பு நடத்தினர். இதனை நாட்கோள் என அழைத்தனர். மன்னர்கள் தங்கள் மரபிற்குரிய மாலைகளைச் சூடினர். வெண்கொற்றக் குடையும், கொடியும், முரசும் முன் கொண்டு செல்லப்பட்டன. கொற்றவை போன்ற போர்க்கடவுளரின் அருளை வேண்டினர்.

**பகைவீரர்களைக் கைப்பற்றல்**

பகைவீரர்களைக் கைப்பற்றிப் போர்க்கைதிகளாகப் பழங்காலத்தில் வைத்திருந்ததாகத் தெரியவில்லை. மாறாக அவர்களைத் தம் நாட்டுக்கு அழைத்துவந்து பலவித வேலைகளுக்காகக் குடியமர்த்தியிருக்கிறார்கள். ''அசோகன்

கலிங்கத்துப்போரில் ஒன்றரை லட்சம் போர் வீரர்களை அடிமையாக்கிக் கொணர்ந்தான் என்று அவனுடைய சாசனங்கள் குறிப்பிடுகின்றன. தரிசு நிலங்களில் விவசாயத்திற்கென அவர்கள் குடியேற்றப்பட்டனர் என்று நாம் யூகிக்கலாம்''[73] என்று ரொமிலா தாப்பர் குறிப்பிடுகின்றார். இதேபோல் கரிகால் சோழனும் இலங்கைமீது படையெடுத்துப் பல்லாயிரக்கணக்கான வீரர்களைக் கொண்டு வந்து காவிரிக்குக் கரைகட்டினான் என்று சங்க இலக்கியத்தின் வாயிலாக அறியமுடிகிறது என்று பூரணச்சந்திரன் கூறுகிறார்.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் தோற்றுப்போன யவனவீரர்களைப் பின்கட்டாகக் கட்டி தலையில் எண்ணெய் ஊற்றி அழைத்து வந்தான் என்ற குறிப்பு வருகிறது. இவ்வாறே பகைமன்னர்களின் அந்தப்புரப்பெண்களைக் கைப்பற்றி ஏவல் மகளிராக வைத்துக்கொள்வதும் வழக்கம். இவர்கள் கொண்டிமகளிர் எனப்பட்டனர்.

"எல்லையும் இரவும் எண்ணாய், பகைவர்
ஊர்சுடு விளக்கத்து அழிவிளிக் கம்பலைக்
கொள்ளை மேவலை ஆகலின்"[74]

என்று கரிகாற்சோழனைக் கருங்குழலாதனார் பாடுகின்றார். அதாவது போருக்கு இரவோ பகலோ, அதைப்பற்றிக் கவலையில்லை என்பது இரவிலும் போர் நடைபெற்றதை,

"எல்லுப்படவிட்ட சுடுதீ விளக்கம்
செல்சுடர் ஞாயிற்றுக் செக்கரின் தோன்றப்
புலம்கெட இறுக்கும் வரம்பில் தானை"[75]

என்னும் பாடலின் வாயிலாக அறிய முடிகிறது. பாண்டரங்கண்ணார் பாட்டிலும் இரவிலும் அக்காலப் போர்கள் நடந்தன என்பதை அறியமுடிகிறது. சில அறிஞர்கள் ஆநிரைப்போர் மட்டுமே இரவில் நடைபெறும். பிற போர்நிகழ்வுகள் யாவும் பகலிலேயே நடைபெறும் என்று கூறியுள்ளனர். மேற்கண்ட புறநானூற்று அடிகள் அக்கருத்தை மறுக்கின்றன.

**சிறுவர்கள்**

உலகமுழுவதும் இன்று சிறுவர்கள் ஆயுதப் போராட்டத்தினால் பாதிக்கப்பட்டவர்களாக உள்ளனர். பலசமயங்களில் அவர்கள் கடத்தப்பட்டுக் கட்டாயமாகப் படைகளில் சேர்க்கப்படுகின்றனர். பழங்காலத்தில் சிறார்கள் இப்படி கடத்தப்பட்டுப் படைகளில் சேர்க்கப்பட்டதற்கான குறிப்புகள் இல்லை என்றாலும் சிறுவர்களும் போரில் ஊக்கத்துடன் அக்காலச் சமூகத்தினால் ஈடுபடுத்தப்பட்டதை இலக்கியக் குறிப்புகள் காட்டுகின்றன. “போரில் என்மகனுக்கு முதுகில் காயம் பட்டிருந்தால் அவனுக்குப் பாலூட்டிய என் மார்பை அறுத்தெறிவேன்” என்று சூளுரைத்தாள் ஒரு பெண். தன் மகன் மார்பில் காயம் பட்டு மாண்டு கிடப்பதைக் கண்டு அவனைப் பெற்ற நாளில் உற்ற மகிழ்ச்சியை விட அதிகமான உவகை கொண்டாள் என்று சங்க இலக்கியம் சொல்கிறது.

சிறுவர்கள் கட்டாயமாகப் போர்புரிய அனுப்பப்பட்டிருந்தால் போரைவிட்டு ஓடிவந்துவிடுவதும் நிகழ்ந்திருக்கக்கூடும்.

“ஆய்பெரும் சிறப்பின் சிறுவன் பெயரத்
தாய்தப வரூஉம் தலைப்பெயல் நிலையும்”[76]

என்ற தொல்காப்பியத் தொடருக்குப் ‘போர்க்களத்தில் சிறுவன் புறமுதுகிட்டான் எனக் கேட்டுத் தாய் வருந்துவது தலைப்பெயல்நிலைக் காஞ்சி’ என்று உரையாசிரியர்கள் பொருள் தருவதாகப் பூரணச்சந்திரன் கூறுகிறார்.

மன்னர்களே சிறுவயது முதலாகப் போரில் ஈடுபட்டனர் என்று சங்கப் பாக்கள் குறிப்பிடுகின்றன. சான்றாகத் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் சிறுபிள்ளையாக இருந்தபோதே போர் செய்தவன் என்று புறநானூறு குறிப்பிடுகிறது. ‘இவ்வளவு இளஞ்சிறுவனாக இருக்கும்போதே மிகுந்த வீரத்தோடு போர் செய்கின்றானே யார் இவன்? என்று கேட்டதாகப் புலவர் இடைக்குன்றூர் கிழார் பாடுகிறார்.

“தார்பூண்டு, தாலி களைந்தன்றும் இலனே, பால்விட்டு
அயினியும் இன்று அயின்றனனே”[77]

என்ற கூற்று மிகை என்று வைத்துக் கொண்டாலும், பாண்டியன் சிறுவனாகவே இருந்ததை இப்பாட்டு அழுத்தமாகக் குறிப்பிடுகிறது என்று கருதலாம்.

**எரிபரந்து அழித்தல்**

தோற்ற நாட்டில் ஏர்பூட்டி உழுது அதில் எருக்கு, கொள் போன்றவற்றை விதைத்துத்தன் வெற்றியைப் பறைசாற்றுவது அக்கால அரசர் வழக்கம். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைப் பாராட்டும் குமட்டூர்க் கண்ணனார்.

“கூற்றடூஉ நின்ற யாக்கைப்போல
பூத்தன்று பெரும நீ காத்த நாடே”[78]

என்ற பாடலில் அதாவது, ‘உன் பகைவர்களின் நாடுகள் எமன் உயிரைக் கவர்ந்த மக்களின் உடல்கள் போலக் காண்பவர் நினைத்தாலும் கண்ணீர் விடக்கூடிய காடுகள் ஆயின. ஆனால் நீ காக்கும் நாடு மட்டும் பூத்து வளத்தோடு இருக்கிறது’ என்று கூறுகிறார்.

எரியூட்டி எதிரி நகரங்களை அழிப்பதும் வழக்கமாக இருந்தது.

“வாடுக இறைவ நின் கண்ணி, ஒன்னார்
நாடுசுடு கமழ்புகை எறித்தலானே”[79]

என்று பாண்டியன் முதுகுடுமிப் பெருவழுதியினைப் பாடுகிறார் காரிகிழார். ‘பிறருடைய நாட்டைச் சுடுகின்ற புகையினால் உன் மாலை வாடட்டும்’ என்று பாடுவது பிறர் நாட்டை அழிப்பதைக் கவிஞர் ஏற்றுக்கொள்வதைக் காட்டுகிறது.

“நீயே, பிறர்நாடு கொள்ளும் காலை அவர்நாட்டு
இறங்குகதிர்க் கழனிநின் இறையரும் கவர்க.
நனந்தலைப் போர் ஊர் எரியும் நைக்க…
ஒன்னார் செகுப்பினும் செகுக்க”[80]

என்று பாண்டியன் நன்மாறனைக் காரிக்கண்ணனார் பாடுகிறார். ‘நீ பிறர் நாட்டைக் கைப்பற்றும்போது, உன் இளைஞர்கள் அவர் நாட்டுக் கழனிகளைக் கொள்ளையடிக்கட்டும். பெரிய ஊர்களைக் கொளுத்தினாலும் கொளுத்தட்டும். என் வேலும் பகைவரைக் கொன்றாலும் கொல்லட்டும்’ என்று சொல்லுவது போர்க்குற்றங்கள் இயற்றுவதைப் பாராட்டும் செயலே ஆகும்.

“தாய் இல் தூவாக் குழவிப்போல

ஓவாது கூஉம் நின் உடற்றியோர் நாடே"[81]

என்று பரணர் இளஞ்சேட்சென்னியைப் பற்றிக் கூறுகிறார். ஒரு புன்முறுவலோடு இக்கொடுமைகளைப் புலவர்கள் ஏற்றுக்கொண்ட நிலையை நெட்டிமையார் பாட்டில் காணமுடிகிறது.

"பாணர் தாமரை மலையவும் புலவர்
பூநுதல் யானையொடு புனைத்தேர் பண்ணவும்
அயனோ மற்றிது விறல்மாண் குடுமி!
இன்னா ஆகப் பிறர் மண் கொண்டு
இனிய செய்தி நின் ஆர்வலர் முகத்தே"[82]

என்று பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடும்போது, 'பிறரைக் கொடுமைப்படுத்தி, உனக்கு வேண்டிய புலவர், பாணர் போன்றோருக்கு நன்மை செய்கின்றாய்' என்று கூறுகிறார்.

**அரசரும் போரும்**

சங்க கால அரசர்கள் போர் புரிவதை மகிழ்வுடன் ஏற்றுக்கொண்டனர். புறமுதுகிட்டு ஓடி உயிர் பிழைப்பதை விட விழுப்புண் பட்டு உயிர்துறத்தலே சிறந்தது என்று கருதினார்கள்.

**அதியமான்**

அதியர் குடியில் பிறந்தமையால் அதியமான். இயற்பெயர் நெடுமான் அஞ்சி. இரண்டையும் சேர்த்து அதியமான் நெடுமான் அஞ்சி என்றழைத்தனர். இவன் முல்லை நிலத்தைச் சார்ந்த இனக்குழுத்தலைவன். தகடூர் என்னும் தருமபுரியைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சி செய்தான். அப்போது அதியமானுக்கும், தொண்டைமானுக்கும், நெடுஞ்சேரல் இரும்பொறை, திருமுடிக்காரி செழியன் ஆகியோருக்கும் பகைமைத் தோன்றியுள்ளது.

தொண்டைமானோடு நடக்கவிருக்கும் போரைத்தடுப்பதற்காகப் பெண்டிரும் தூது சென்று வெற்றி பெற முடியும் என்பதை ஔவையார் மூலம் அறியமுடிகின்றது.

"இவ்வே பீலி அணிந்து மாலை சூட்டி

கண்திரள் நோன் காழ் திருத்தி நெய் அணிந்து
பகைவர்க் குத்தி கோடு நுதி சிதைந்து
அண்ணல் எம் கோமான் வைந் நுதி வேலே''[83]

என்னும் பாடல் மூலம் தொண்டைமானின் படைக்கலங்கள் அழகுற விளங்கின என்னும் புகழ்ச்சி அவன் போர்க்களம் கண்டு போரிடாத தன்மையால் பொலிவு குறையாமல் இருந்தன எனக் கூறுவதன் மூலம் அவன் போரில் ஈடுபடாதவன் என்பதை உணர்த்துகிறார்.

அதியமானின் வாள் வடிவிழந்தன, வேல்கள் மழுங்கின, யானைகளின் பூண் நீங்கின, குதிரையின் குளம்புகளில் குருதிக்கறைப் படிந்தது. இத்தகைய வீரம் செறிந்த படையை உடையவனுடன் போரிட்டு உயிர்வாழ்தல் அரிது, அவனது வீரத்தை எடுத்துக்கூறி போர் மூள்வதைத் தடுத்து நிறுத்தினார்.

போர்க்களம் சென்ற அதியமான் பகைவரை வென்று வீரப்புண்ணுடன் மகன் பிறந்தமை அறிந்து காண்பதற்கு வந்தான். தன் மகனைக் கண்டும் செம்மை படர்ந்த கண்களுடனும் வியர்த்த மேனியுடனும் மாறாது நின்றான் என்பதை,

''வரியம் பொருத வயக்களிறு போல
சிறுவனை நோக்கியும் சிவப்பு ஆனாவே''[84]

என்னும் புறநானூற்று வரிகள் வழியாக அதியமானின் போர்த்திறமையை அறியமுடிகின்றது.

அதியமான் தன் முன்னோர்கள் ஆட்சி செய்த நாட்டை வழுவின்றி ஆட்சிபுரிந்தவன். போரில் வென்று முழங்கும் முரசு கொண்ட ஏழு அரசர்களுடன் பகைத்துக் கொண்டு அவர்களைப் போரில் வென்றவன். அவன் தன் ஆற்றலைக் காட்டிப் போர் செய்து மலையமானுடன் பகைமை மிகுந்து அவனுடைய பொருள்களைக் கவர்ந்து வந்து நாட்டு மக்களுக்கும் புலவர்களுக்கும் கொடையாக வழங்குவது அறமாகக் கருதப்பட்டது.

போரில் தோல்வியடைந்த அதியமான் வெற்றி பெற்ற நெடுஞ்செழியனுக்கு அடிபணிந்து நடந்தான் என்பதை,

''கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்

பசும்பூண் பாண்டியன் வினைவல் அதிகன்
களிறோடு பட்ட ஞான்றை''[85]

என்னும் பாடல் தெரிவிக்கின்றது. தன் நாட்டு மக்களைக் காக்கும் பொருட்டும் அதியமான் பணிந்திருக்கலாம்.

**சேரன் - சோழன்**

குடக்கோ நெடுஞ்சேரலாதனும் பெரு விறற்கிள்ளியும் பெரும் போர் செய்தனர். இருதிறத்துப் படைகளும் அழிந்தன. பின்னரும் மனம் தளராது போரிட்டு இருவரும் இறந்தனர். களத்தில் வெற்றியைக் கொண்டாடுவதற்கு ஒருவரும் உயிருடன் இல்லை என்பதை,

''அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்
தாம் மாய்ந்தனரே குடை துளங்கினவே''[86]

என்று கழாத்தலையார் பாடியுள்ளார். சேர சோழ பகைமைக்கு இப்போர் தொடக்கம் எனக் கூறலாம்.

**ஞிமிலி – ஆய் எயினன்**

ஞிமிலிக்கும் ஆய் எயினன் என்பவனுக்கும் போர் மூண்டது. அப்போர் ஏற்படுவதற்குக் காரணம் கொங்காணத்து அரசன் நன்னன். அவனுக்கு உதவியாக மிஞிலி சென்றான். பாழி என்னும் இடத்தில் ஆய் பல போர்ப்பரிகளையும் ஞிமிலி பல தேர்களையும் போரில் பயன்படுத்தினர். அக்கடும் போரில் வீரர்களில் பெரும்பாலனோர் மடிந்த பின் ஆயும் இறந்தான். அவன் விரும்பி வளர்த்த பறவைகள் உயிர் துறந்த உடலின் மீது சிறகுகளை விரித்து வெயில் படாமல் காத்து நின்றதை,

''ஒள்வாள் மயங்கு அமர் வீழ்ந்தென புள் ஒருங்கு….
நிழல் செய்து உழறல் காணேன் யான் என''[87]

என்னும் பரணர் பாடல் மூலம் அறியமுடிகின்றது. பெண் கொலை புரிந்த நன்னனின் குற்றத்தைக் கடிந்துரைக்காமல் உதவி செய்து ஞிமிலி உயிர் துறந்தான் என்பதை உணரமுடிகின்றது.

**நெடுஞ்செழியன்**

தலையாலங்கானத்துப் போரில் பகைக் கூட்டத்தை வென்றவன் இளையவனான நெடுஞ்செழியன். சிறுவயதில் அரியனை ஏறும் போது அயல் நாட்டு மன்னர்களும், நண்பர்களும் பாண்டிய நாட்டை வெல்வதற்குத் தக்க தருணம் என்று கருதி அவன் நாட்டின் மீது படையெடுத்தனர். போருக்குப் புறப்படும் முன் கடுமையாகச் சூளுரைத்தான். பகைவர்களைப் பாண்டிய நாட்டை விட்டு விரட்டினான். திதியன், எழினி, எருமையூரன், இருங்கோ வேண்மான், பொருநன் ஆகியோர் போரில் தோல்வி அடைந்தனர். இவ்வெற்றி நெடுஞ்செழியனுக்குத் தமிழகத்தின் மீது பேராதிக்கத்தை அளித்தது. இதனை,

''ஆலங்கானத்து அகன் தலை சிவப்ப
சேரல் செம்பியன் சினம் கெழு திதியன்
போர் வல்யானைப் பொலம் பூண் எழினி
நார் அரி நறவின் எருமையூரன்''[88]

என்னும் அகநானூற்றுப் பாடல் மூலம் அறியமுடிகின்றது. நெடுஞ்செழியன் தலையாலங்கானம் என்னும் இடத்தில் நடந்த போரில் வெற்றி பெற்றதால் அதையே அடைமொழியாக்கி தலையாலங்கானத்துப் பாண்டிய நெடுஞ்செழியன் என்று பெயர் பெற்றான்.

**சேரன் கணைக்கால் இரும்பொறை**

சேரமான் கணைக்கால் இரும்பொறை சோழன் செங்கணானோடு போர் புரிந்து தோல்வி அடைந்தான். அதனால் குடவாயில் கோட்டத்துச் சிறையில் அடைக்கப்பட்டான். பிள்ளை இறந்து பிறந்தாலும் தசைப் பிண்டமாக வந்து பிறந்தாலும் அவற்றை வாளால் வடு உண்டாக்கி அடக்கம் செய்வர். பகைவர் வாளினால் வடுபட்டு அழியாது உயிர் பிழைத்தால், சங்கிலியால் பிணிக்கப்பட்ட நாய் போல விலங்கு பூட்டித் துன்புறுத்துவர் பகைவர்.

கணைக்கால் இரும்பொறை நீர் வேட்கையால் சிறைக் காவலரை வேண்டினான். காலம் தாழ்த்திக் கொடுத்த நீரைப் பெறாது உயிர் நீத்தான். உயிரை விட மானமே பெரிது எனக் கருதினான்.

**நன்னன்**

குறுநில மன்னர்களில் பெண்கொலை புரிந்த ஞிமிலி நன்னன் புலவர்களால் தூற்றப்படுகின்றான். நன்னனின் படைத்தலைவன் ஞிமிலி ஆய் எயினனைக் களத்தில் கொன்றபோது உடம்பைச் சூரியனின் கதிர்கள் வருந்தாத வண்ணம் பறவைகள் மகிழச் செய்தன, அப்பாடல் காட்சியைக் காணாமல் கூகை போல நன்னன் இருந்தான் என்பதை,

''நெடுந்தேர் ஞிமிலியொடு பொருது களம் பட்டென,
காணிய செல்லாக் கூகை நாணி,
கடும்பகல் வழங்கா தா அங்கு,''[89]

என்று பரணர் கூறுகிறார். பகைவருடைய உரிமை மகளிரின் கூந்தலை அறுத்துக் கயிறாகத் திரித்துப் பகைவர்களின் யானைகளைக் கட்டி இழுத்து வந்தான் என்பதை,

''விரிஉளைப் பொலிந்த பரியுடை நன் மான்
வேந்தர் ஓட்டிய ஏந்து வேல் நன்னன்
கூந்தல் முரற்சியின் கொடிதே''[90]

என்ற நற்றிணைப் பாடல் வரிகள் தெரிவிக்கின்றன. அடிமையான பெண்களை அவமானப்படுத்தும் விதமாக அழகு சேர்க்கும் கூந்தலை அறுத்தனர் என்பது தெரிகிறது.

''ஒன்பதிற்று- ஒன்பது களிற்றொடு அவள்நிறை
பொன்செய் பாவை கொடுப்பவும் கொள்ளான்,
பெண் கொலை புரிந்த நன்னன் போல''[91]

நன்னன் என்ற குறுநில மன்னன், தன் நாட்டில் உண்டார்க்கு நீண்ட ஆயுளைத் தரும் காவல் மாமரத்தை வளர்த்து வந்தான். காற்று வீசி, அம்மரத்திலிருந்து கனி ஒன்று அருகில் ஓடிய ஆற்றில் வீழ்ந்தது. புனலாடுவதற்குச் சென்ற கோசர் குலப்பெண் ஒருத்தி, அறியாமல் நீரில் அடித்து வரப்பட்ட அக்கனியை உண்டாள். அப்பெண் செய்த தவறுக்காக நன்னன், ஒன்பதிற்று ஒன்பது களிறுகளோடு அவளின் எடைக்கு நிகரான பொன்னால் செய்யப்பட்ட

பாவையைக் கோசர் கொடுத்தும் பெறாமல் அவளைக் கொன்றான். இக்கொடுமையைப் பொறாத கோசர் தம் மகளின் இறப்பிற்குக் காரணமாகிய மாமரத்தை அழித்து நன்னனையும் பழிவாங்கினான்.

அகவல் மகளிரைப் பரிசு பெறக் கோசா்கள் அனுப்பினா். நன்னன் யானைகளைப் பரிசாகக் கொடுத்தான். அதனை நன்னன் ஊரில் இல்லாத நாளில் காவல் மரத்தில் கட்டினா். யானைகள் மரத்தை வேருடன் சாய்த்தது கோசா்களின் சூழ்ச்சி அறிந்த நன்னன் அவா்களின் மீது போா் தொடுத்தான். கோசா்கள் நன்னனைக் கொன்றனா்.

கோசா் குலப் பெண் நீராடுவதற்குச் சென்றாள். அவள் மரத்தில் ஏறிக் கனியைப் பறிக்கவில்லை. ஆற்றில் மிதந்து வந்த கனியைத்தான் உண்டாள். நீரால் வளா்க்கப்பட்ட மரம் ஆதலின் அதன் பிஞ்சினைத் தருவதற்கு அதற்கு உரிமையுண்டு. பசுங்காய் தின்ற பாவத்திற்காக அப்பெண் உயிா்துறக்கும் போது புலவா் பாடாது ஒழிக எனக் கூறினாள்.

இவ்வாறு பண்டைய கால மன்னர்களின் செங்கோலாட்சி மற்றும் கொடுங்கோலாட்சி பற்றிச் சங்கப் புறப்பாடல்கள் மட்டுமல்லாது அகப்பாடல்களும் பல சான்றுகளைப் பதிவு செய்துள்ளன என்பதை நாம் அறிய முடிகின்றது.

**முதுகோசா்**

முதுகோசர் என்பவருடைய பயற்றங் கொல்லையில் பசு மேய்ந்தது. அன்னி ஞிமிலியின் தந்தை ‘அப்பசு என்பசு’ என்று உண்மையை உரைத்தான். அவ்வாறிருந்தும் முதுகோசர் அவனுடைய கண்களைப் பிடுங்கித் துன்புறுத்தினர். அது கண்ட அன்னி ஞிமிலி சினம் கொண்டு ‘கலத்தில் உண்ணேன்’ தூய ஆடையை உடுத்தேன்’ என வஞ்சினம் கூறிக் குறும்பியன், திதியன் என்பாரிடம் முறையிட்டாள். அவரும் அம்முதுகோசரைக் கொன்று அவர்தம் இன்னுயிரைப் போக்கினர் அதுகண்ட அன்னி ஞிமிலி தன் சினம் நீங்கி உவகை எய்தினாள் என்பதை,

“பாசிலை அமன்ற பயறுஆ புக்கென

வாய்மொழித் தந்தையைக் கண்களைத்து, அருளாது
ஊர்முது கோசர் நவைத்த சிறுமையின்
கலத்தும் உண்ணான் வாலிதும் உடாஅள்
சினத்தின் கொண்ட படிவம் மாறாள்,
மறம்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்,"[92]

என்னும் பாடல் மூலம் அறியமுடிகின்றது. நீதிநெறி பிழைத்த போது அதை மன்னர்களிடம் முறையிட்டும், உண்ணா நோன்பு இருந்தும் மன்னனின் கவனத்தை ஈர்த்தும் நீதி பெற்ற முறைமையை அறியமுடிகின்றது. இது போன்ற பல்வேறு பாடல்கள் காட்டும் செய்திகளிலிருந்து அறமும் அரசநீதியும் வழுவாமல் ஒருங்கிணைந்து இயங்கிய தன்மையை அறிய முடிகின்றது. ஆகவே மன்னர்கள் தம்மைவிட மிக்க அதிகாரம் படைத்தவர்கள் எவருமில்லை என்று கருதினாலும் புலவர்களின் அறிவுரைகளுக்குக் கட்டுப்பட்டனர். அவற்றைப் பின்பற்றியே நீதி வழங்கினர் என்பதைக் காட்டும் காலக் கண்ணாடியாகச் சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

**கரிகால்பெருவளத்தான்**

போரிற் பின்னிடலும், புறமுதுகிடலும், முதுகிற் புண்படலும் நாணத்தக்கச் செயல்களாகக் கருதப்படுகின்றன என்பதை வேறு எந்த மொழி இலக்கியங்களும் சுட்டவில்லை. மார்பில் புண்படுதல் வீரருக்குப் பெரும் புகழைத் தரும் செயல் எனக் கருதப்பட்டன. இதனையே,

"நீயே, அமர்காணின் அமர்கடந் தவர்
படை விலக்கி யெதிர் நிற்றலின்
ஊறறியா மெய்யாக்கையொடு
கண்ணுக் கினியர் செவிக்கின் னாரே"[93]

என்னும் பாடல் விளக்குகிறது. போரில் விழுப்புண் பெற்றவர் சிறப்பும், பெறாதவர் இழிவும் பதிவு செய்யப்பட்டுள்ளன. சோழன் கரிகால்வளவனுக்கும் பெருஞ்சேரலாதனுக்கும் போர் மூண்டது. வெண்ணிப் போர்க்களத்தில் சோழன் எறிந்த வேல் சேரனின் மார்பில் பட்டு முதுகு வழியாக ஊடுருவிப் புண் ஏற்பட்டது. இது புறமுதுகிடுவதற்கு நிகரானது எனக் கருதி போர்க்களத்தில் வாளொடு

வடக்கிருந்து உயிர் துறந்தான். இச்செய்தியை அறிந்த சான்றோர் பலரும் உயிர் நீத்தனர் என்பதை,

''கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப்
பொருது புண் நாணிய சேரலாதன்''[94]

என்று அகநானூறும்,

''தன்போல் வேந்தன் முன்பு குறித்து எறிந்த
புறப் புண் நாணி மறத் தகை மன்னன்
வாள் வடக்கிருந்தனன்''[95]

என்று புறநானூறும் சுட்டுகின்றன. சங்ககாலச் சமூகம் ஒரு போர் விருப்பச் சமுகமாக இருந்திருக்கிறது. ஆண்கள் பெண்கள் அனைவர்க்கும் வீரஉணர்வு இயல்பாக இருந்ததைப் புலவர்கள் எடுத்துரைக்கின்றனர்.

மகனைப் பெறுவது மட்டும் தாயின் கடமையன்று, அவனைச் சமூகச் சிக்கல்களை எதிர்கொள்ளும் வகையில் வார்த்தெடுத்தல் வேண்டும். வீரயுகத்தில் தந்தை தன்னுடைய மகனை வீரம், கல்வி, கேள்வி, அறிவு, ஒழுக்கம் ஆகியவற்றால் நிரம்பப்பெற்றவனாக உருவாக்க வேண்டும். ஒரு குடிமகன் அரசினால் ஏற்றுக்கொள்ளப்படாவிட்டால் அவன் கற்ற கல்வி பயனற்றதாகிவிடும். அவனுடைய தகுதியறிந்து பாராட்டிப் பொருள் கொடுத்து உதவ வேண்டும்.

போர்க்களத்தில் பகைவர்களின் யானைப்படைகளை அழித்து வெற்றியுடன் வீறு நடையிட்டு வரும்போது தாய்க்கு மகிழ்ச்சியும், தந்தைக்குப் பெருமையும், சமுதாயத்திற்குப் பொருளும், அரசுக்குப் பாதுகாப்பும் கிட்டுவதோடு தானும் புகழ் உடையவனாய்த் திகழ்வான் என்பதை,

''ஈன்று புறந்தருதல் என் தலைக் கடனே;
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே;
வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே;
தண்ணடை நல்கல் வேந்தர்க்குக் கடனே;''[96]

என்னும் புறநானூற்றுப் பாடல் எடுத்துரைக்கின்றது. வீரன் வெற்றி பெற்றுப் புகழ் பெறுவதன் மூலம் அனைவரும் மகிழ்ச்சியடைகின்றனர்.

“படுமகன் கிடக்கை காணூஉ,

ஈன்ற ஞான்றிலும் பெரிது உவர்ந்தனளே!”[97]

புறப்புண்பட்டுப் போர்க்களத்தில் நின்மகன் வீழ்ந்தான் என்ற சொல் கேட்டு வஞ்சினம் கூறி வாளொடு சென்ற ஒரு தாய் உண்மை உணர்ந்து உவகை கொண்ட காட்சியை,

“மேல் நாள் உற்ற செருவிற்கு இவள் தன்னை…

வேல் கைக் கொடுத்து, வெளிது விரிந்து உடீஇ,

பாறு மயிர்க்குடுமி எண்ணெய் நீவி,

ஒருமகன் அல்லது இல்லோள்,

செருமுகம் நோக்கிச் செல்க என விடுமே!”[98]

இப்பாடல் வழியாகக் காக்கைப்பாடினியார் குறிப்பிட்டுள்ளார்.

முதல் நாள் நடந்த போரில் இவருடைய தந்தை யானையைக் கொன்று தானும் இறந்தான். நேற்று நடந்த போரில் இவள் கணவன் பசுக் கூட்டங்களைப் பகைவர் கவரா வண்ணம் தடுத்து நிறுத்தி இறந்தான். இன்றும் போர்ப்பறை கேட்டு விருப்பம் கொண்டு அறிவு மயங்கினாள். தன் குடிக்கு ஒரு மகன் அல்லது வேறு எவரும் இல்லாதிருந்தும் தன் மகளை அழைத்து வேலைக் கையில் கொடுத்தாள். வெண்மையான ஆடை உடுத்தி, குடுமித்தலைக்கு எண்ணெய் தடவி போர்க்களம் சென்று வா எனக் கூறும் தாயின் வீர உணர்வை ஒக்கூர் மாசாத்தியார் பாடியுள்ளார்.

தன் கணவன் போருக்குச் செல்ல வேண்டும் என நினைக்கும் தலைவியின் எண்ணம் மறக்குடியின் வழி வந்த இயல்பாகும். மகன் போர்க்களம் செல்ல வேண்டுமெனவும், களத்தில் விழுப்புண் பெற்று இறக்க வேண்டுமெனவும் தாய் விரும்புகிறாள் என்னும் நிலையில் அத்தலைவனின் மனைவியும் இத்தகுப் பெருமித நோக்கம் பெற்றவளாகவே இருக்க வேண்டும் என எண்ணலாம். விருந்து புறந்தருதலையும், போர்புரிதலையும் அக்காலச் சமூகம் தலையாய கடமைகளாகப் போற்றியது. இவ்விரண்டாலும் பெறும் புகழ், சிறப்பு, இம்மைக்கு மட்டுமின்றி மறுமைக்கும் துணை செய்யும் என்ற நம்பிக்கை நிலவியது.

வீரரின் உயர்நிலை உலக அவாவைக் காட்டும், வாழும் போது மகிழுற வேண்டும் இனி வருங்காலங்களிலும் அதைப் பெறுதல் வேண்டும் என்று அக்காலச் சமூகம் நினைத்திருக்கிறது. கடமை பூண்ட ஆடவர் நாட்டில் போர்ச்சூழல் உண்டாகும் போது அதைக் கேட்டு விருப்புற்று அத்தொழில் மேற்கொள்வான் என்பதை,

''நுந்தை தந்தைக் கிவன்றந்தை தந்தை
எடுத்தெறி நாட்பினிமையான்''[99]

என்ற பாடல் விளக்குகிறது. வழிவழியாக வேந்தனுக்காய்ப் போர்செய்யும் குடிமரபு இருந்ததைக் காணமுடிகிறது. இத்தகு வீரர்கள் 'பொருநர்' எனப்பட்டனர். மன்னரின் நால்வகைப் படைகளும் நல்ல முறையில் இயங்க இப்பொருநர் முக்கியமானவர்களாவர். இவர்களன்றிப் போர் மறவர், சிற்றூர்த் தலைவர் போன்றோரும் போருக்குத் துணை நின்றனர்.

''வேந்துடைத் தானை முனைகெட நெரிதர
பாடிச் சென்றோர்க் கன்றியும் வாரிப்
புரவற் காற்றாச் சீறூர்த்
தொன்மை சுட்டியவ ண்மை யோனே''[100]

என்ற பாடலில் சிற்றூர்க் குடித்தலைவன் பெரு வேந்தனுக்குத் துணை நின்ற செய்தியும், தன்னளவில் பெரும் வள்ளலாக விளங்கியமையும் காணலாம். அதேபோலப் பெரும் வேந்தர்கள் சிற்றூர்த் தலைவர்கள், குறுநில மன்னர்களின் படையுதவி வேண்டுதலையும் இலக்கியங்கள் சுட்டுகின்றன.

''மூவரு ளொருவன் துப்பாகியரென
ஏத்தினர் தரூஉங் கூழே''[101]

என்று மூவேந்தருள் ஒருவருக்குக் காரி துணை செய்த செய்தியைக் கபிலர் பதிவு செய்துள்ளார். அன்றைய தமிழகம் பொதுமை சுட்டிய மூவருலகம் என்று மூவேந்தர்களுக்குரியதாகக் கூறப்பட்டிருந்தாலும் சில நிலப்பகுதிகளை ஆண்ட குறுநில மன்னர்களும் வலியபடையையும் நெடிய புகழையும் கொண்டிருந்தனர் என்பதும் மறுக்க முடியாத உண்மையாகும்.

**நலங்கிள்ளி**

"இரும் பனை வெண் தோடு மலைந்தோன் அல்லன்
கருஞ் சினை வேம்பின் தெரியலோன் அல்லன்...
மெய்ம் மலி உவகை செய்யும் இவ் இகலே"[102]

என்னும் பாடல் நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் நடக்கயிருந்த போரைத் தனது நாவன்மையாலும் அறிவுக்கூர்மையாலும் தடுத்து நிறுத்திய பெருமை கோவூர் கிழாரையே சாரும் என்று கூறுகிறது. நீங்கள் இருவரும் அதியமானுடைய ஒருகுடியைச் சார்ந்தவர்கள் உங்களுக்குள் போர் வேண்டாம். இது மற்ற மன்னர்களுக்கு மகிழ்ச்சியைத் தரும் ஆகையால் ஒருகுல மக்களுக்குள் பகைவேண்டாம் எனக் கூறிப் போரைத் தடுத்து நிறுத்தினார்.

"ஓடுங்கு ஈரோதி யொண்ணுதல் கருவில்
எண்ணியல் முற்றி யீரறிவு புரிந்து
சால்பும் செம்மையு முளப்படப் பிறவும்...."[103]

அரசியின் கருவில் பத்துமாதம் சுமந்து பேரறிவு, அன்பு, வாய்மை, நடுநிலைமை போன்ற குணங்களையும் மக்களை நல்லமுறையில் காப்பாற்றும் பேறு பெற்ற புதல்வனைப் பெற்றெடுத்தாய் எனப் புகழ்ந்து பாடுவதிலிருந்து குழந்தை பிறக்கும் போதே மன்னராவதற்கான அனைத்து நடவடிக்கைகளையும் மேற்கொள்கின்றனர் என்பதை அறிய முடிகிறது.

**போர் விளைவுகள்**

போரில் வெற்றி தோல்வி விளைந்தாலும் இரு மருங்கிலும் உயிரிழப்பும் ஏற்படும். போரின் பின்விளைவுகள் சான்றோர் உள்ளத்தில் துயரையும் நிலையாமை எண்ணத்தையும் அழுத்தமாக ஊன்றச் செய்திருக்கும் என்பதை மறுப்பதற்கில்லை. இதனைக் காஞ்சித் திணையென வகுத்த பழந்தமிழ்ப் புலவர்கள் அதன் துறைகளின் வழியே அரிய நீயதிகளை உணர்த்தியுள்ளனர்.

அந்தணர் முத்தீப்போல மூவேந்தரும் பகையொழிந்து உடனிருந்த காட்சியை,

"முரசு முழங்கு தானை மூவருங்கூடி
அரசவை யிருந்த தோற்றம் போல"[104]

என்று மூவேந்தரும் போரும் பகையுமின்றி ஒற்றுமையுடன் வாழவேண்டுமென முடத்தாமக் கண்ணியார் பாடலில் குறிப்பிட்டுள்ளார். எனினும் முடியாட்சி உலகில் போர் தவிர்க்க முடியாததாயிற்று. அரசகுடியில் பிறந்தவர் போர்க்கள மரணம் பெறுதல் வேண்டுமென்றும் இயல்பாக இறந்து படுதலைவிட வீரமரணம் பெருமை எனக் கருதினர். போர்க்கள வீரனுக்கே இனிய மறுமையுலகு கிடைக்குமெனக் கூறப்படுகிறது. ஆகவே கொடுஞ்செயல் நிறைந்த போர்க்களம் அரசாராலும் மறவராலும் விரும்பப்பட்டதாக உணரப்படுகின்றது.

பகைநாட்டின்மீது படையெடுத்துச் சென்று அதனைப் பலவகையாலும் பாழாக்குதல் வீரப்பண்பாகவும், புகழுக்குரியதாகவும் கருதப்பட்டது.

“நாடு எனும் பேர் காடுஆக
ஆ சேர்ந்த வழி மா சேப்ப
ஊர் இருந்த வழி பாழ்ஆக”[105]

இவ்வாறு பகைவர் நாடு அழிந்ததாகக் காட்டப்படுகிறது. மதிலை அழிப்பர்; அகழி திறப்பர்; வளமலைகளை இழப்பர்; தேரோடு தெருக்களில் வெள்வாய்க் கழுதைகளைப் பூட்டி வெள்வரகு விதைப்பர்; மாற்று வீரனின் காவல் மரத்தை வெட்டி வீழ்த்துவர்; விளைவயல்களை எரியூட்டுவர் போன்ற செயல்களைப் புலவர்கள் புகழ்ந்து பாடியுள்ளனர்.

“பல் இருங் கூந்தல் முரற்சியால்
குஞ்சர ஒழுகை பூட்டி”[106]

எனப் பதிற்றுப்பத்துச் சேரனின் வெற்றியைப் பெருமிதத்தோடு பாடுகிறது.

**போர்க்குற்றங்கள்**

போர்க்கைதிகளான எதிரிமன்னர்களைத் தங்கள் முன் காலில் விழவைத்துப் பெருமிதம் அடைதலும் போர் ஏற்படக் காரணமாக இருந்தது. போரில் தோற்ற பகை மன்னர்களைக் கைப்பற்றி அழைத்துவருவது வழக்கம். இவர்கள் கொண்டி மன்னர் எனப் பட்டனர்.

போர் எதிரிகளைக் குறிக்கும் சொல்லாகச் சங்க காலத்தில் பயன்படும் வட்கார் என்ற சொல், வணங்காதவர்கள் அல்லது தனக்கு அடங்காதவர்கள் என்பதைக் குறிக்கும். வட்காரை ( வணங்காதவர்களை) வணங்கவைப்பது சங்க

காலப் போர்களின் முக்கிய நோக்கங்களில் ஒன்று. இன்றைய மதிப்புகளின் அடிப்டையில் இதுவும் தவறான செயலே. இன்னொரு நாட்டின் அரசன் மானத்தோடு தலை நிமிர்ந்து வாழ்வது குற்றமா ஆனால், தமிழ் அரசர்களின் ஒரு நல்ல பண்பு, எக்காலத்திலும் போரில் வென்ற நாட்டைத் தங்களே வைத்துக் கொண்டதாகத் தெரியவில்லை. பகை அரசனைத் தோற்கடித்து அவமானப்படுத்தினாலே போதும் என்று கருதினார்கள்,

"வந்துஅடி பொருந்தி முந்தை நிற்பின்
தண்டமும் தணிதி"[107]

என்று இளஞ்சேட்சென்னியை ஊன்பொதி பசுங்குடையார் புறநானூறு பாடியுள்ளார். அதனால் காலில் விழுந்து இறைஞ்சினால் வேறு தண்டனை எதுவுமின்றிப் பிற அரசர்களை விட்டு விடுவகை வழக்கமாகக் கொண்டிருந்தனர் என்று கருதலாம்.

குறமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன். மலையமான் திருமுடிக்காரியை வென்றதுடன் நிற்காமல் அவனுடைய மக்களை யானைக்காலில் இட்டு இடற நினைத்தான். இதுவும் போர்க்குற்றமே. அச்சமயத்தில் கோவூர்கிழார் என்னும் புலவர் மலையமானின் பெருமையை எடுத்துக்கூறி அந்த இளஞ்சிறுவர்களைக் காப்பாற்றிய செய்தியை,

''களிறு கண்டு அழூஉம் அழாஅல் மறந்த
புன் தலைச் சிறாவ்ர்; மன்று மருண்டு நோக்கி,''[108]

என்ற புறநானூற்றுப்பாடல் தெரிவிக்கிறது. எதிரிநாட்டு ஒற்றர்களுக்கு மரணதண்டனை வழங்குவது அக்காலத்திய செயல். அதனால் நலங்கிள்ளியிடமிருந்து வந்த இளந்தத்தன் என்ற புலவனை ஒற்றன் எனக் கருதி நெடுங்கிள்ளி கொல்லப்புகுந்ததில் தவறில்லை என்றாலும், அவன் கோவூர்கிழாரின் அறிவுரையை ஏற்று அப்புலவனைக் கொல்லாமல் விட்டான் என்ற செய்தி கிடைக்கிறது.

பெரிய நிலைப்படை இருந்தால்தான் இன்னொரு நாட்டைக் கைப்பற்றித் தாங்களே வைத்துக்கொள்வது சாத்தியம். அதனால் தான் சங்ககால அரசர்கள் கொள்ளையோடு நிறுத்திக்கொண்டார்கள் என்று தோன்றுகிறது. ஆனால் இதனை முடிந்த முடிபு எனக் கொள்வதற்கில்லை என்று பூரணச்சந்திரன் கூறுகிறார்.

ஏனெனில் நிலைப்படை வைத்திருந்த பிற்கால மன்னர்களும் காலனியாதிக்கத்தில் ஈடுபட்டதாகத் தெரியவில்லை. வஞ்சினத்திற்கெனச் சாளுக்கிய அரசன் புலகேசியை வென்ற மாமல்ல பல்லவனும் சாளுக்கிய நாட்டைத் தன் காலனி ஆக்கிக்கொள்ளவில்லை. வணிக நோக்கில் ஸ்ரீவிஜய அரசைக் கைப்பற்றிய இராசேந்திர சோழனும், அதனைத் தனது காலனியாக ஆக்கிக்கொள்ளவில்லை. என்பது குறிப்பிடத்தக்கது. பிறர் நாட்டைக் கைப்பற்றி ஆள்வது ஒருகாலத்திலும் தமிழர்களின் இலட்சியமாக இருந்ததில்லை பூரணச்சந்திரன் கூறியிருப்பது தமிழர்களின் பண்டைய அரசியலை எடுத்துக்காட்டுகிறது.

நாட்டைக் காப்பாற்றுவது அரசர்களின் பணி என்பதை அரசர்களும் யாவரும் ஏற்றுக்கொண்ட போதிலும், தங்கள் எல்லைக்குட்பட்ட பாலைநிலங்களில் வாழ்ந்த, எயினர், வேடுவர், மறவர் போன்றவர்கள் கொள்ளையடித்து வாழ்ந்தனர். அவர்களை அரசர்கள் கண்டித்துத் திருத்தியதாகவோ தண்டித்ததாகவோ தெரியவில்லை. மாறாக அவர்களைத் தக்க நேரத்தில் படைகளில் சேர்த்துக் கொண்டதற்கான சான்றுகளே உள்ளன.

"செந்தொடை பிழையா வன்கண் ஆடவர்
அம்புவிட வீழ்ந்தோர் வம்பப் பதுக்கைத்...
உன்னமாத்துன் அருங்கவலை
நின் நசை வேட்கையின்
இரவலர் வருவர்,... அது...
இன்மை தீர்த்தல் வண்மையானே"[109]

என்று இரும்பிடத்தலையார் கூறும்போது அவர் இரவலர்கள் ஆடவர்களுடைய அம்பினால் வீழ்ந்ததைப் பற்றிக் கவலைப்படுவதாகத் தோன்றவில்லை. அவர்களைத் தண்டிக்கவேண்டும் என்று அரசனிடம் வேண்டவுமில்லை. ஆனால் எப்படியேனும் அவர்களிடம் தப்பிப்பிழைத்துவந்த இரவலர்களுடைய வறுமையைத் தீர்க்க வேண்டும் என்று மட்டும் வேண்டுகின்றார் என்பது விசித்திரமாகத் தெரிகிறது என்று பூரணச்சந்திரன் கூறுகிறார்.

பொதுவாக, நீர்நிலைகளைப் பெருக்கவேண்டும் என்றும், விவசாய மக்களைப் பாதுகாக்க வேண்டும் என்றும் புலவர்கள் வேண்டியுள்ளனர். விவசாயம்

இல்லாவிட்டால் போர் நடைபெற இயலாது என்பதையும் புலவர்கள் மன்னர்களுக்கும் எடுத்துரைத்துள்ளனர்.

“பொருபடைதரூஉம் கொற்றமும் உழுபடை
ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே..
பகடுபுறந்தருநர் பாரம் ஓம்பிக்
குடிபுறந்தருகுவை ஆயின் நின்
அடிபுறந்தருகுவர் அடங்காதோரே”[110]

என்று வெள்ளைக்குடி நாகனார் கிள்ளிவளவனுக்குக் கூறும் தெளிவான அறிவுரையினால் இதனை அறியலாம்.

இவ்வாறு சங்க காலத்தில் அரசர்களுக்குப் புலவர்களுக்கு கூறிய அறிவுரையையும் மண்ணுக்காகவும் பெண்ணுக்காகவும் போர் நடந்ததையும், நன்னன் முதுகோசர் போன்றோரின் கொடுங்கோலாட்சி பற்றியும் அறியமுடிகின்றது.

## தொகுப்புரை

சங்க இலக்கியங்கள் காதலையும் வீரத்தையும் பாடுபொருளாகக் கொண்டது. இவை முறையே அக, புற இலக்கியங்கள் எனலாம். சங்க காலச் சமூதாயம் போர் விருப்பச் சமூகமாக இருந்துள்ளது எனச் சங்க புற இலக்கியங்கள் தெரிவிக்கின்றன.

அரசனுக்குப் பிறகு மூத்தமகன், அவன் இறந்துவிடின் இளைய மகனும், ஆண் மக்களே இல்லாதபோது மகள் வழிப் பேரனுள் ஒருவனும், அவனும் இல்லாத போது நெருங்கிய உறவினருள் ஒருவனும் தகுதிமிக்கவன் அரசனாவான் என அறியமுடிகின்றது.

மன்னர்கள் தவறான பாதையில் செல்லும்போது அறிவுரைகள் கூறி இடித்துரைத்து நல்வழிப்படுத்தினர். மக்களைக் காப்பாற்ற பகைவரை எதிர்த்துப் போரிடுக எனக் கூறும் துணிவும் உரிமையும், அரசர் புலவர் நட்பைப்பற்றியும், அரசன் செங்கோலாக இருந்தாலே நாட்டில் மழை விளைவு ஆகிய இயற்கை நிகழ்வுகள் ஒழுங்காக நடைபெறும் என்ற நம்பிக்கையும் இருந்ததைப் புலவர்கள் பாடியுள்ளனர்.

குமணன் தன்னிடம் இரவல் கேட்டு வந்த பெருஞ்சித்தரனாருக்குத் தன் தலையையே கொடையாகக் கொடுக்கத் துணிந்தான் என்ற குமணனின் குணத்தை இலக்கியங்கள் பேசுகின்றன.

இறைவன்மேல் கொண்ட பக்தியால் ஆடையைக் கொடுத்ததைப் பற்றற்றக் கொடை என்றும் இரவலர்க்குப் பரம்பு மலையில் இருக்க முந்நூறு ஊர்களைக் கொடுத்துள்ளான் என்பதை பெருங்கொடை என்றும் முல்லைக் கொடி கொம்பின்றி தவித்தபோது பாரி தன் தேரைக் கொடுத்ததை அருட்கொடை என்றும் சங்க இலக்கியம் உணர்த்துகின்றது.

ஆநிரை கவர்தல் அதிகார எல்லையை விரிவுபடுத்தவும் பிற நாடுகளைத் தனது கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருவதற்காகவும் போர் நடந்தது. மேலும் வீரமும் புகழுணர்வும் கூட பண்டைத் தமிழர்களின் போருக்குக் காரணங்களாக இருந்திருக்கின்றன.

படைவீரர்கள் நாட்டிற்கேற்ப அடையாளப்பூச் சூடினர். மேலும் போருக்குப் புறப்படுவோர் ஊர்க்கிணற்றில் நீராடி வெள்ளையாடை உடுத்தினர். சகுனம் பார்த்தல், குறிகேட்டல் போன்ற வழக்கங்கள் இருந்துள்ளன என்பதைக் காணமுடிகின்றது.

தோற்றுப்போன வீரர்களை அடிமைகளாக்கியதும், பகை மன்னர்களின் அந்தப்புறப் பெண்களை ஏவல் மகளிராக ஆக்கிக் கொள்வதும் வழக்கமாக இருந்தது.

தோல்வியுற்ற நாட்டில் ஏர்பூட்டி உழுது, விதைத்து வெற்றியைக் கொண்டாடினர். பகை மன்னர்களின் நாடுகளில் பொருள்களைக் கவர்ந்து வந்து மக்களுக்கும் புலவர்களுக்கும் கொடையாக வழங்குவது அறமாகக் கருதப்பட்டது.

கொலைபுரிந்த நன்னன் பற்றிய செய்திகளும், போரிற் பின்னியலும், புறமுதுகிடலும், முதுகிற் புண்படலும் நாணத்தக்கச் செயல்களாகக் கருதப்பட்டன. பகைநாட்டு ஒற்றர்களுக்கு மரணதண்டனை வழங்குவதும் தோற்ற மன்னனுடைய மக்களை யானைக்காலில் இடறச் செய்ததும் போர்க்குற்றங்களாகக் கருதப்பட்டதை சங்க இலக்கியத்தின வாயிலாக அறியமுடிகிறது.

## சான்றெண்

1. புறம்.,பா.363.வரி.1-6.
2. மேலது.,186.
3. மேலது.,பா.75.வரி.1-3.
4. பொருநராற்றுப்படை.,வரி.132-133.
5. அகம்.,பா.77.வரி.7-9.
6. பெரும்பாணாற்றுப்படை.,வரி.443-445.
7. பதிற்றுப்பத்து., பா.51.வரி.20-22.
8. புறம்., பா.43.வரி.16-19.
9. மேலது.,பா.44.வரி.9-12.
10. மேலது.,பா.62.வரி.4-5.
11. பெரும்பாணாற்றுப்படை.,வ.447.
12. புறம்.,பா.184.வரி.1-5.
13. மேலது.,பா.35.வரி.27-28.
14. திருக்குறள் எண்.386.
15. புறம்.,பா.147.வரி.7-9.
16. மேலது.,பா.10.வரி.1-2.
17. மேலது.,பா.55.வரி.11-12.
18. மணிமேகலை.,துயிலெழும்பிய காதை.,வரி.7-8.
19. சிலம்பு.புறஞ்சேரியிறுத்த காதை. வரி.15-16.
20. மலைபடுகடாம்.,வ.567.
21. மேலது.,வரி.67-74.
22. மேலது.,வரி.73-74.
23. புறம்.,பா.3.வரி.3-9.

24. பொருணராற்றுப்படை.,வரி.79-82.

25. மேலது.,வரி.159-162.

26. மேலது.,வரி.86-88.

27. மேலது.,வரி.156-158.

28. மேலது.,வரி.125-129.

29. மேலது.,வரி.163-165.

30. மேலது.,வரி.170-173.

31. சிறுபாணாற்றுப்படை.,வரி.252-281.

32. மேலது.,வரி.85-87.

33. மேலது.,வரி.235-237.

34. பெரும்பாணாற்றுப்படை.,வரி.73-74.

35. சிறுபாணாற்றுப்படை.,வரி.203-206.

36. புறம்.,பா.91.

37. சிறுபாணாற்றுப்படை.,வரி.96-97.

38. புறம்.,பா.240.

39. சிறுபாணாற்றுப்படை.,வரி.103-107.

40. மேலது.,வரி.108-110.

41. பெரும்பாணாற்றுப்படை.,வரி.26-29.

42. மலைபடுகடாம்.,வரி.561-562.

43. பெரும்பாணாற்றுப்படை.,வரி.484-493.

44. மலைபடுகடாம்.,வரி.23-24.

45. மதுரைக்காஞ்சி.,23-24.

46. பதிற்றுப்பத்து 3ம்பத்து., பதிகம்.வரி.1-7.

47. சிலம்பு.,வழக்குரைக்காதை.,வரி.51-52.

48. புறம்.,பா.39.வரி.1-4.

49. சிலம்பு.,வழக்குரைக்காதை.,வரி.53-55.

50. மதுரைக்காஞ்சி.,489-492.

51. குறுந்தொகை.,பா.276.

52. புறம்.,பா.71.வரி.7-9.

53. கலித்தொகை., பா.62.வரி.14-15.

54. குறுந்தொகை.,பா.247.

55. நற்றிணை.,பா.226.வரி.1-3.

56. அகம்.,பா.286.வரி.8-10.

57. வித்தயானந்தன்.,தமிழர் சால்பு., ப.27.

58. புறம்.,பா.87.

59. பெரும்பாணாற்றுப்படை.வரி.134-136.

60. புறம்.,பா.31.வரி.5-6.

61. புறத்திரட்டு.,பா.1279.

62. கலித்தொகை.,பா.104.வரி.1-4.

63. புறம்.,பா.182.வரி.5-6.

64. மேலது.,பா.306.

65. ந.சுப்ரமணியன்.,சங்க கால வாழ்வியல்., ப.329.

66. புறம்.,பா.79.வரி.1-2.

67. மேலது.,பா.279.

68. மேலது.,பா.41.

69. மேலது.,பா.20.,வரி.1-4.

70. மேலது.,பா.9.வரி.1-4.

71. அகம்.,பா.309.வரி.3-5.

72. புறம்.,பா.76.,வ.12.

73. நா.வானமாமலை.,வரலாறும் வக்கிரங்களும்.,ப.51.

74. புறம்.,பா.7.வரி.7-9.

75. மேலது.,பா.16.வரி.7-9.

76. தொல்.புறத்திணையியல்.,நூ.7.

77. புறம்.,பா.77.வரி.6-8.

78. பதிற்றுப்பத்து., 2ஆம்பத்து.,பா.13.வரி.11-28.

79. புறம்.,பா.16.வரி.21-22.

80. மேலது.,பா.57.வரி.4-9.

81. மேலது.,பா.16.வரி.7-9.

82. மேலது.,பா.12.

83. மேலது.,பா.95.

84. மேலது.,பா.100.வரி.7-11.

85. குறுந்தொகை.,பா.393.

86. புறம்.,பா.62.வரி.7-8.

87. அகம்.,பா.208.வரி.9-12.

88. மேலது.,பா.36.வரி.14-17.

89. அகம்.,பா.148.வரி.8-10.

90. நற்றிணை.,பா.270.வரி.8-10.

91. குறுந்தொகை.,பா.292.

92. அகம்.,பா.262.வரி.4-9.

93. புறம்.,பா.167.வரி.1-7.

94. அகம்.,பா.55.வரி.10-11.

95. புறம்.,பா.65.வரி.9-11.

96. மேலது.,பா.312.வரி.1-4.

97. மேலது.,பா.278.

98. மேலது.,பா.279.

99. மேலது.,பா.290.வரி.3-4.

100. மேலது.,பா.330.

101. புறம்.,பா.122.வரி.5-6.

102. மேலது.,பா.45.

103. பதிற்றுப்பத்து.பா.74.வரி.17-19.

104. பொருநராற்றுப்படை.,வரி.54-55.

105. மதுரைக்காஞ்சி.,வரி.154-158.

106. பதிற்றுப்பத்து.,5ஆம்பத்து பதிகம்., வரி.16-17.

107. புறம்.,பா.10.வரி.5-6.

108. மேலது.,பா.46.வரி.5-6.

109. மேலது.,பா.3.வரி.20-26.

110. மேலது.,பா.35.வரி.25-34.

# இயல் மூன்று

## சங்க இலக்கியத்தில் புறவாழ்வியல்

இலக்கியம் என்பது வாழ்வின் பிம்பம். சங்க இலக்கியம் கற்பனையும் கனவும் பொய்யும் புனைவும் அற்ற தமிழ்ச்சமுதாயத்தை உள்ளபடியே காட்டும் காலக்கண்ணாடி. பல குடும்பங்கள் சேர்ந்தது சமூகம் எனவும் பல சமூகங்கள் சேர்ந்தது சமுதாயம் எனவும் கொள்ளுதலே சிறப்பு. அது போன்றே அகமும் புறமும் ஒட்டியே சங்க இலக்கியங்கள் பாடப்பட்டன. மனிதனின் அடிப்படைத் தேவைகளான உணவு, உடை, உறையுள் விருந்தோம்பல், கல்வி, வானியல் அறிவு போன்ற சங்கத்தமிழரின் புறம் சார்ந்த நிகழ்வுகளைப் பற்றி இவ்வியல் ஆய்கிறது.

**உணவு**

தமிழ் இலக்கியங்களில் உணவு என்பதற்குப் பல்வேறு பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

“உணாவே வல்சி யுண்டி யோதன
மசனம் பதமே யிரையா கார
முறையே யூட்ட முணடிவன லாகும்”[1]

உணா, வல்சி, உண்டி, ஓதனம், அசனம், பதம், இரை, ஆகாரம், உறை, ஊட்டம் என்பனவற்றை உணவின் பெயர்களாகப் பிங்கல நிகண்டு குறிப்பிடுகின்றது. இதைத் தவிர கொண்டி, புகா, மிசை போன்ற சொற்களும் உணவைக் குறிக்கப் பண்டைக் காலத்தில் பயன்பட்டுள்ளன. உயிர்களின் அடிப்படையான இயக்கங்கள் அனைத்தும் உணவினை மையமிட்டதாக இருக்கின்றன. ஓர் இனத்திற்குரிய உணவினை வைத்தே அவர்களின் பண்பாட்டினை மதிப்பீடு செய்து விடலாம். உணவு உலகளாவிய அளவில் சைவம், அசைவம் என்று இருபிரிவுகளாக உள்ளன.

இந்தியப் பண்பாட்டில் குறிப்பாகத் திராவிடப் பண்பாட்டில் குளிர், வெப்ப உணவு என்ற பாகுபாடு காணப்படுகின்றது. உடலைக் குளிர்விப்பதாகக் கருதப்படுவன கீரைகள்,மோர், தயிர், சில வகைக் காய்கனிகள் (புடலங்காய், பீர்க்கங்காய்) பழங்கள் (சீதாப்பழம், வெள்ளரிப்பழம்) போன்றவையாகும். இது

போன்று அகத்துக்கீரை, மா, பலா போன்றவை வெப்பமூட்டுவனவாக வகைப்படுத்தப்படுகின்றன. தமிழ்நாட்டில் உண்ணப்படும் உணவினைச் சுவையடிப்படையில், திடவுணவு, திரவ உணவு என்று பிரித்துக் கொள்ளலாம். இந்த உணவு வழிபாட்டோடும், இறப்பு நிகழ்ச்சிகளிலும் சடங்குகளிலும் முக்கியத்துவம் கொண்டதாக உள்ளது.

குறிஞ்சி, முல்லை நிலத்தில் வாழ்ந்த இனக்குழுச் சமூகம் குறிப்பிட்ட உணவை உண்டு வாழ்ந்ததை அறிய முடிகிறது. வேட்டையாடுதலும், கால்நடை மேய்த்தலும், சிறிய அளவில் விவசாயம் மேற்கொண்டு உணவை உற்பத்தி செய்தலும் போன்ற இருநிலப்பண்பாடு இன்றைக்கும் தமிழக வாழ்ப் பழங்குடிகளிடம் எச்சங்களாக உள்ளன. குறிஞ்சி நில மக்கள் மூங்கில் சோறு, உடும்பு, கடமான், பன்றி ஆகியவற்றின் இறைச்சி, நெல், பலாக்கொட்டைகள், மோர், நெய், தேன், கிழங்கு வகைகள் போன்றனவும், முல்லை நில மக்கள் தினையரிசிச் சோறு, ஆடு, வான்கோழி, மான், முயல் போன்ற இறைச்சிகளையும், பால், மோர், நெய், கும்மாயம் போன்றவற்றையும் உண்டுள்ளனர். இதற்குச் சான்றாகச் சங்க இலக்கியப் பாடல்களைப் பார்க்க முடிகின்றது.

இதோடு மட்டுமல்லாது, குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த குறவா் வில்லினைத் தோளில் மாட்டிக் கொண்டு தனது இளையரோடு மந்தி வேட்டைக்குச் சென்றனா், குடிசைகளில் வாழ்ந்த கானக்குறவர்கள், மூங்கிலரிசியில் விளைந்த மதுவை மகிழ்ந்து உண்டு வேங்கை மரம் நின்ற முற்றத்தில் குரவைக் கூத்தாடினர் என்பதை,

> ‘‘குறிஇறைக் குரம்பைக் குறவர் மாக்கள்
> வாங்கு அமைப் பழுனிய தேறல் மகிழ்ந்து’’[2]

என்னும் பாடல் உணா்த்துகின்றது. காட்டுப் பகுதியில் வாழ்ந்த வேடர் குலப்பெண், வீட்டுச் சிறுவர்கள் பிடித்து வந்த உடும்புக் கறியைத் தயிரில் பெய்து சமைத்த உணவை விருந்தாக வந்த பாணர்களுக்குப் பரிமாறினாள். எயின வேடர் சீறூர் மன்றத்திலிருந்த விளாமரத்திலிருந்து விழுந்த விளாம்பழங்களை, அவ்வீட்டு எயிற்றியின் மகனோடு யானைக் கன்றும் சேர்ந்து பொறுக்கியது.

முள்ளம் பன்றியைக் கொன்ற வேடர்கள் அதனோடு உடும்பைக் கொன்று அறுத்துத் தங்களது வேட்டைக் குடும்பங்களுக்குப் பாதீடு செய்தார்கள். அக்கறியைக் கொள்ளி வைத்துச் சுட்டதனால் எழுந்த நிணநாற்றம், அவ்வூர்த் தெருவில் சூழ்ந்ததை,

> ‘‘முளவுமாத் தொலைச்சிய முழுச்சொலாடவர்
> உடும்பிழு தறுத்த வொடுங்காழ்ப் படலைச்
> சீறின் முன்றிற் கூறுசெய் திடுமார்
> கொள்ளி வைத்த கொழுநிண நாற்றம்’’[3]

என்று புறநானூறு கூறுகின்றது. மக்களின் தேவைகளுள் இன்றியமையாதவை உணவு, உடை, இருப்பிடம், ஆகியவையாகும். இருப்பினும் பண்டைய தமிழர்கள் உணவிற்கு முக்கியத்துவம் கொடுத்தனர். பழங்காலத்தில் வேட்டையாடிக் கூட்டுச் சமுதாயமாக வாழ்ந்தவர்கள் உணவைத் தன் குழுக்களுக்குள் பங்கிட்டு உண்டு வந்தனர். காலச்சுழற்சியின் காரணமாகச் சமுதாயம் ஒரு மாபெரும் மாற்றத்தைச் சந்தித்தது.

பொற்காலம் என்று புகழப்பட்ட சங்க காலத்தில் பல இனத்தினர் செல்வச் செழிப்போடு வாழ்ந்தாலும் ஒரு சில இனத்தினர் வறுமையிலும், பட்டினியிலும் பிறரைச் சார்ந்து வாழ வேண்டி இருந்தது. பொருநர், பாணர், சிறுபாணர், பெரும்பாணர், கூத்தர், விறலியர் போன்றோர் பிறரைப் புகழ்ந்து பாடித் தன் வறுமையைப் போக்கிக் கொண்டனர். மனிதனின் அடிப்படைத் தேவையான உணவைத் தேடியே தன் வாழ்நாளைக் கழிக்க வேண்டி இருந்தது. அவ்வாறே மன்னர்களும், தன்னைத் தேடி வரும் இரவலர்களுக்குப் பொன்னையும், பொருளையும், உடையையும் கொடுப்பதைவிட உணவு இடுவதையே சிறந்த பண்பாடாகக் கருதினர்.

உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர் என உணவை உயிருக்கு இணையாக வைத்துப் போற்றினர். அவ்வாறாக உணவைக் கொடுத்த மேன்மையைப் பல இலக்கியங்கள் போற்றினாலும் கொடை இலக்கியம் என்று கருதப்படும் ஆற்றுப்படை இலக்கியத்தில் வறுமையில் வாடினோருக்கு உணவிட்டச் செய்தி பெருமைமிக்கதாகும்.

உணவு ஒரு சமூகத்தின் ஒழுக்கத்தை நிர்ணயிக்கும் பண்பாக அமைகின்றது. மழையில்லாமல் ஏற்படும் பஞ்சத்தினால் கொள்ளை, கொலை போன்ற சமூகச் சீர்கேடுகள் நடக்கின்றன. உணவு ஒரு சமூகத்தில் பண்பாட்டுப் பிழையை ஏற்படுத்துவதால் பசியை நோய் என்று பழந்தமிழர் குறித்துள்ளனர். இதனாலேயே, புறநானூறு, பண்ணன் என்ற வள்ளலைப் 'பசிப்பிணி மருத்துவன்' எனக் குறித்துள்ளது.

உணவின் பிண்டமாகிய உடம்பு உயிரைச் சுமந்து கொண்டிருக்க வேண்டுமானால் அதற்கு உணவு கொடுத்துக் கொண்டிருக்க வேண்டும் என்பதை

"உண்டி கொடுத்தோருயிர் கொடுத்தோரே"[4]
"உண்டி முதற்றே யுணவின் பிண்டம்"[5]

என்று குடபுலவியனாரும்,

"மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்
உண்டி கொடுத்தோருயிர் கொடுத்தோரே"[6]

என்று சாத்தனாரும் உணவு கொடுத்துப் பசியை நீக்குதல் நலம் எனக் குறித்துள்ளனர். எனவே சங்க காலத்தில் உணவு கொடுத்தல் தமிழர் பண்பாடாக இருந்திருக்கின்றது.

**அரிசி உணவு**

சங்க கால மக்கள் உணவுப் பொருள்களைப் பச்சையாக உண்ணாமல் மண்பானையில் சமைத்துச் சுவையேற்றி உண்டு மகிழ்ந்தனர். நெருப்பு மூட்டுவதற்கு ஒளிகோல் பயன்படுத்தியுள்ளனர்.இதனை,

"மன்றாடி புழுக்கிய புலவுநாறு குழிசி"[7]

என்ற பாடல்வரி மூலம் அறிந்துகொள்ள முடிகிறது. மலை அடிவாரத்தில் வாழ்ந்த மக்கள் தினைச்சோறு சமைத்து, நெய்யில் இறைச்சியை வேகவைத்து இரண்டையும் சேர்த்து உண்டனர். பலாக் கொட்டை, மா, புளி, நீர், மோர் ஆகியவற்றைக் கொண்டு தயாரிக்கப்பட்ட குழம்பை மூங்கிலரிசியால் சமைக்கப்பட்ட சோற்றுடன் கலந்து உண்டனர்.

அரிசியை உரலிலிட்டு அதனை வெளுக்கத்தீட்டுவர். உண்ணும் சோறு முல்லைப் பூப்போல வெண்மையாகக் காணப்பட்டது, பழஞ்சோற்றையும் விரும்பி உண்டனர். இதனை

"அடுமகள் முகந்த அளவா வெண்ணெல்
தொடிமா ணுலக்கைப் பரூஉக் குற்றரிசி......
பழஞ்சோ றயிலு முழங்குநீர்ப் படப்பைக்
காவிரிக் கிழவன் மாயா நல்லிசை"[8]

என்ற பாடல்வரிகள் உணர்த்துகின்றன. வெண்மையான பூளைப் பூவுக்கு ஒப்பான சிறுதாளுடைய வரகின் சோற்றைக் கொத்துக் கொத்தாக மலரும் அழகிய வேங்கைப் பூவைப் போன்ற அவரைப் பருப்புடன் வேகவைத்து இனிய சுவையான உணவைச் சங்கத் தமிழர்கள் அளிப்பார்கள் என்பதை,

"நெடுங்குரல் பூளைப் பூவின் அன்ன
குறுந்தாள் வரகின் குறள் அவிழ்சொன்றி
புகர்இணர் வேங்கைங் கண்டன்ன
அவரை வான் புழுக்கு அட்டி பயில்வுற்று"[9]

என இப்பாடல் வரிகள் தெளிவாக்குகின்றன. இப்பழக்கம் இன்றும்கூட கிராமப்புற மக்களிடம் இருக்கிறது. அவரைப்பருப்பை உணவில் கலந்து உண்ணும்போது மணமும், சுவையும் மிகுதியாக இருக்கும்.

**அந்தணர் உணவு**

அருந்ததி நட்சத்திரம் போன்ற கற்புடைய அந்தணர் குலப்பெண்கள், சூரியன் மறைந்த நேரத்தில் 'இராசான்னம்' என்ற உயர்ந்த நெல்லரிசியிலான உணவுடன் பசுமோரில் எடுத்த வெண்ணெய்யில், மாதுளங்காய்த் துண்டுகள், மிளகுப் பொடி, கருவேப்பிலை ஆகியவற்றை இட்டு வதக்கிய ஊறுகாயோடு விதவிதமான உணவுகளை உண்பதற்குக் கொடுப்பார்கள் என்பதை,

"சேதா நறுமோர் வெண்ணெயின் மாதுளத்து
உருப்புறு பசுங்காய்ப் போழொடு கறி கலந்து......
தகைமாண் காடியின் வகைப்படப் பெறுகுவிர்"[10]

என்று இப்பாடல் விளக்குகிறது. அந்தணர்கள் வேறுபாடு பார்க்காது தாங்கள் உண்ணும் உணவு வகைகளையே இரவலர்களுக்கும் கொடுத்துள்ளனர் என்பதை உணர முடிகிறது.

**ஆயர்கள் இடும் உணவு**

பால், தயிர் மோர் விற்றுப் பொன் கட்டிகளைப் பெறாமல் பண்டமாற்றாகப் பெற்ற நிரைகளை வளர்க்கும் இடையர்கள் குடியிருக்கும் முல்லை நிலத்திற்குச் சென்றால் நண்டின் சிறுகுஞ்சுக் கூட்டம் போன்ற தினை அரிசிச் சோற்றைப் பாலோடு கலந்து கொடுப்பார்கள் என்பதை,

''மடிவாய்க் கோவலர் குடிவயின் சேப்பின்
இருங்கிளை ஞெண்டின் சிறுபார்ப்பு அன்ன
பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவிர்''[11]

எனப் பொருநராற்றுப்படை சுட்டுகிறது. முல்லை நிலத்தில் இடையர் குடியிருப்புப் பகுதியில் இரவில் தங்கினால் பாலும், சோறும் கொடுப்பார்கள். உறங்குவதற்கு மயிர்நீக்கிய ஆட்டுத் தோலினாலான படுக்கையைக் கொடுத்துத் துயில் கொள்ளச் செய்வார்கள். இரவில் காட்டு விலங்குகளால் துன்பம் நேராமல் இருப்பதற்காகத் தீ மூட்டித் துணையாக இருப்பார்கள், என்பதை,

''பாலும் மிதவையும் பண்ணாது பெறுகுவிர்
துய்ம் மயிர் அடக்கிய சேக்கை யன்ன
மெய்யுரித்து இயற்றிய மிதி அதட் பள்ளித்
தீத்துணை ஆகச் சேர்ந்தனிர் கழிமின்''[12]

என்னும் பாடல் மூலம் பால்சோறு கலந்து உணவிடுவதைப் போலத் தன்னை நாடி வந்த இரவலர் உயிருக்கும் பாதுகாப்பாக ஆயர்கள் இருந்துள்ளனர் என்பதை அறிய முடிகின்றது.

**எயினர் உணவு**

எயினர்கள் உப்புநீரைக் கொண்டு சமைத்த உணவை இறைச்சி, கருவாடு உடும்புக்கறிப்பொறியல் ஆகியவற்றுடன் சேர்த்துப் பாணர்களுக்குத் தருவார்கள். என்பதை,

''நீழல் முன்றில் நில உரல் பெய்து
குறுங்காழ் உலக்கை ஓச்சி நெடுங்கிணற்று
வல் ஊற்று உடவரி தோண்டித் தொல்லை
முரவு வாய்க் குழசிமுரி அடுப்பு ஏற்றி
வாராது அட்டவாடு ஊன் புழுக்கல்''[13]

என்று பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது. உணவுடன் குழல் மீனையும் வறுத்துப் பசியோடு தங்களைத் தேடி வருபவர்களுக்கு உழவர்கள் தருவார்கள். இதனை,

''வறற்குழல் சூட்டின் வயின்வயின் பெறுகுவிர்''[14]

எனப் சிறுபாணாற்றுப்படை கூறுகிறது. மலைபடுகடாமில் மீன்கறியைத் தரும் சிறப்புக் கூறப்பட்டுள்ளது. மருதநில மக்கள் வயல்களில் விளைந்த நெல்சோறும், வலைவீசிப் பிடித்த பெரிய வாளை மீன்கறியும், தூண்டில் போட்டுப் பிடித்து வந்த பெரிய விரால் மீன் துண்டுகளும், குறிஞ்சிப்பூ அணிந்த மகளிர் நண்டுக்கறியோடு உண்ணுவதற்குக் கொடுப்பார்கள். மேலும் பச்சை மீன்களைச் சுட்டுச் சுவைசேர கள்ளையும் தருவார்கள் என்ற கருத்தை,

''தண்மீன் குட்டொடு தளர்தலும் பெறுகுவிர்''[15]

என்னும் இப்பாடல்வரி உணர்த்துகிறது. சமைக்கும் பெண்கள், உண்ணும் வட்டில்களைக் கழுவும் போது அதிலிருந்து வடிகின்ற நீர் குழம்பு போல் படிந்து சேறாக இருக்கும். பன்றிகள் புரளும் ஈரமான சேற்றுக் குழியில் வைத்து நெல்லை இடித்து மாவாக்கிய உணவைக் கொடுப்பர். இப்படிப் பலநாள் பாதுகாத்த குட்டைக்காலுடைய ஆண் பன்றியைப் பெண் பன்றியுடன் சேராவிட்டால் கறிச்சுவை மாறிவிடும் என்பதற்காகத் தனியே வளர்த்தனர். நன்கு தின்று கொழுத்த ஆண் பன்றியைக் கொன்று அத்தசைக்கறியை உணவாகச் சமைத்து அதனுடன் வெறியூட்டக் கூடிய கள்ளையும் இரவலர்க்குக் கொடுத்து மகிழ்ந்தனர்.

எயினர் குலப்பெண் தன் வீட்டு ஆண்கள் வேட்டையாடிக் கொண்டுவந்த கொழுப்புடைய இறைச்சித் துண்டைப் பாறையில் பரப்பிக் காயவைத்துக் கவர வந்த பறவைகளை விரட்டிய செய்திகளை

"கணமா தொலைச்சித் தன்னையர் தந்த
நிணவூன் வல்சிப் படுபுள் ளோப்பும்
நலமா ணெயிற்றி போலப்"[16]

என்னும் பாடல் விளக்குகிறது. கொழுத்த காளையைக் கவர்ந்து அதனை அறுத்துப் பெரும் இறைச்சித் துண்டுகளை நெருப்பில் சுட்டெரித்துத் தின்ற வேடர்கள் அதனொடு கள்ளையும் பருகித் தங்கள் கைகளையும் வாயையும் கழுவாமல் வேங்கட மலைச் சீறூர்ப்பக்கம் தூங்கியதனை,

"அணங்கு அரு மரபின் பேஎய் போல
விளர்ஊன் தின்ற வேட்கை நீங்க
துகள் அற விளைந்த தோப்பி பருகி
குலாஅ வல்வில் கொடுநோக்கு ஆடவர்
புலாஅல் கையர் பூசாவாயர்"[17]

என அகநானூற்றுப் பாடல் தெரிவிக்கின்றது. சங்க காலத்தில் மாமிசத்தைத் தீயில் சுட்டு உண்ணும் வழக்கம் இருந்ததை அறிய முடிகின்றது.

**மன்னர்கள் உணவு**

இரவலர்களுக்குக் கொடை நல்குவதில் வள்ளல்களுக்கு இணையாக மன்னர்களும் சிறந்து விளங்கினர். கரிகாலன் தன்னை நாடி வரும் இரவலர்களுக்கு எக்காலம் சென்றாலும் சோர்வடையாமல் உணவிடுவதை,

"சாறுகழி வழிநாள் சோறு நகை உறாது
வேறு புலம் முன்னிய விரகு அறிபொருந"[18]

என்னும் பாடல் சுட்டுகிறது. விழாக்களின் போதும், விழா முடிந்த பின்னரும் வெளியூரில் இருந்து வரும் மக்களுக்கு அவனது அரண்மனையில் தங்க வைத்துப் பலநாளும் உணவு கொடுத்ததை அறியமுடிகின்றது. பழுத்த பழத்தைப் பறவைகள் நாடிச் செல்வதைப் போல் பசிக்கும்போது கரிகாலனைத் தேடிச் சென்றவர்களின் இளைத்த உடம்பு பருத்துக் காட்சியளித்தது. என்பதை,

"முரவை போகிய முரியா அசிரி

விரல் என நிமிர்ந்த நீர்அமை புழுக்கல்
பரல் வறைக் கருணை காடியின் மிதப்ப”[19]

என்னும் பாடல் விளக்குகிறது. இரவு, பகல் பாராமல் இரவலர்க்கு உணவிட்டதால் எந்நேரமும் மென்று அவர்களுடைய பற்கள் ஏர் உழுவதைப் போலக் காட்சி அளித்தது. தன்னைத்தேடி வருபவரை மட்டுமின்றித் தன் நாட்டில் இருக்கும் இரவலரையும் விரும்பி அழைத்து உணவிட்டான் கரிகாலன் என்பதை,

“அயின்ற காலை பயின்று இனிது இருந்து
கொல்லை உழுகொழு ஏய்ப்ப பல்லே
எல்லையும் இரவும் ஊன் தின்று மழுங்கி”[20]

என்னும் இப்பாடல் விளக்குகிறது. சமையல் பற்றிய நுண்ணியக் குறிப்புகள் அடங்கிய பாகசாஸ்திரம் என்ற நூலில் கூறாத பலவகை உணவுகளைச் சூரியனைப் பழிக்கும் ஒளிவீசும் பொற் கிண்ணத்தில் இரவலர் விருப்பம் அறிந்து அருகிலிருந்து ஊட்டுவான் என்பதை,

“இளங்கதிர் ஞாயிறு எள்ளும் தோற்றத்து
விளங்கு பொற்காலத்தில் விரும்புவன பேணி
ஆனா விருப்பின்தான் நின்று ஊட்டி”[21]

என்னும் பாடல் விளக்குகிறது. இவ்வாறு சிறுபாணாற்றுப்படையில் வள்ளல்கள் உணவு வழங்கிய சிறப்பை அறியமுடிகிறது. இவர்களைப் போலவே சேரமான் பெருஞ்சோற்றுதியன், பாண்டவர்களுக்கும், கௌரவர்களுக்கும் நடந்த பாரதப்போரில் இருநாட்டு வீரர்களுக்கும் உணவு வழங்கிய சிறப்பை,

“அலங்குகளைப் புரவி ஐவரோடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம் பூந்ததும்பை
ஈரைம்பதின்மரும் பொருதுகளத் தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்!”[22]

எனப் போர் இலக்கியமான புறநானூறு சிறப்பித்துக் கூறுகிறது. பண்டைத் தமிழர்கள் பலவகை இறைச்சி உணவுகளை இரவலர்களுக்குத் தேவை அறிந்து கொடுத்து உதவிய செய்தியை அறிய முடிகிறது.

கரிகாலன் இரவலர்க்கு அருகம்புல்லை மேய்ந்து நன்கு கொழுத்த செம்மறி ஆட்டின் தசைக்கறிகளைச் சமைத்த பின்னர், உணவு உண்ணும் நேரம் அறிந்து கொடுத்து உபசரித்தான். இதனை,

“துரா அய்துற்றிய துருவை அம்புழுக்கின்
புரா அரை வேவை பருகு எனத் தண்டி
காழின் சுட்ட கோழி ஊன் கொழுங்குறை”[23]

எனப் பொருநராற்றுப்படை இறைச்சி உணவு கொடுத்ததைக் கூறுகிறது. தமிழர்கள் மான்கறி உண்ட செய்தி புறநானூற்றில் கூறப்பட்டிருக்கிறது. வன்பரணர் என்ற புலவரும் அவர் சுற்றத்தாரும் நடந்துவந்த வருத்தத்தால் பலா மரத்தின் அடியில் சோர்ந்து கிடந்தனர். அங்கு வேட்டைக்கு வந்த கோப்பெருநற்கிள்ளி என்பவன் அப்புலவரைக் கண்டவுடன் வேட்டையாடிய மானின் தசையைக் காட்டிலே வழிதவறிச் சென்ற பணியாளர்கள் விரைந்து வந்து கூடுவதற்கு முன் சட்டென்று தீக்கடைக் கோலால் உண்டாக்கிய நெருப்பில் சுட்டுப் பதப்படுத்தி உன்னுடைய உறவினருடன் உண்ணுக, என்று புலவருக்குக் கொடுத்தான், அந்த அமுதத்தைப் போன்ற, சுட்ட இறைச்சியை உண்டு பசியிலிருந்து விடுதலையடைந்தேன் என்று பரணர் கூறுவதை,

“இழுதின் அன்ன வால் நிணக் கொழுங் குறை
கானதர் மயங்கிய இளையர் வல்லே
தாம்வந் தெய்தா வளவை ஒய்யெனத்
நான் ஞெலி தீயின் விரைவனன் சுட்டுநின்
இரும்பே ரொக்க லொடு தின்ம எனத் தருதலின்”[24]

என்ற பாடல் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது. தமிழர்கள் முயல்கறி, உண்ணும் பழக்கம் உடையவர்களாக இருந்துள்ளனர். புன்செய் நிலத்தில் விளைந்த வரகைப் பால் ஊற்றிச் சமைத்துத் தேனோடு கலந்து, கொழுத்த சிறிய முயலின் சூட்டிறைச்சியை உணவுடன் சேர்த்து இலவமரம் உயர்ந்து வளர்ந்திருக்கின்ற மன்றத்திலே அமர்ந்து உண்பார்கள். இத்தகைய பாணர்களுக்குத் தனது செல்வம் முழுவதையும் அளிக்கின்றவன் சோழ மன்னன் என்பதை,

“புறவுக் கருஅன்ன புன்புல வரகின்
பால்பெய் புன்கம் தேனொடு மயக்கி
குறுமுயல் கொழுஞ்சூடு கிழித்த ஒக்கலொடு...

அகலாச் செல்வம் முழுவதும் செய்தோன்''[25]

என்னும் பாடல் மூலம் தமிழர்கள் புலால் உண்டதை அறியமுடிகிறது.

''செம்புற்று ஈயலின் இன் அளைப் புளித்து''[26]

செம்புற்றிலே தோன்றிய ஈசலை மோரும் புளியும் விட்டுச் சமைத்துண்ணும் வழக்கம் பண்டைத் தமிழரிடம் இருந்ததைக் காணலாம்.

தொண்டைமான் இளந்திரையன், நெல்லை உலர்த்தித் தூசுபோக்கிப் பொறுக்கி எடுத்த முனை முரியாத அரிசிச் சோற்றை, சுவைதரும் கண்டஞ்சர்க்கரை மற்றும் உயர்வகை உண்பொருள்களைச் சமைத்து வானில் விண்மீன் எவ்வாறு பூத்து இருக்கிறதோ, அதைப்போன்று பல உண்கலன்களில் பரப்பி அன்போடு அளவற்ற மகிழ்ச்சியுடன் 'உண்க' எனக் கொடுத்தான் என்பதை,

''அரிசெத்து உணங்கிய பெருஞ் செந்நெல்லின்
தெரிகொள் அரிசித் திரள் நெடும் புழுக்கல்...
மகமுறை மகமுறை நோக்கிய முதன் அமர்ந்து
ஆனா விரும்பின் தான் நின்று ஊட்டி''[27]

என்னும் பாடல் உணர்த்துகின்றது. குறிஞ்சி நிலத்தில் வாழும் மக்கள் சந்தன மரங்களை வெட்டி அதில் தோரைநெல் முதலியன பயிரிட்டதனை,

''குறுங்கதிர்த் தோரை நெடுங்கால் ஐயவி
ஐவன வெண்ணெலொடு அரில் கொள்பு நீடி
இஞ்சி மஞ்சள், பைங்கறி பிறவும்''[28]

என மதுரைக்காஞ்சி குறிப்பிடுகின்றது. இதன் மூலம் பண்படுத்தப்பட்ட வேளாண்மை முறையைக் காண முடிகின்றது.

**கானவர்**

மலைநாட்டில் வாழக் கூடிய கானவர், எள், தினை, அவரை, வரகு, மூங்கில்நெல், வெண்சிறுகடுகு, இஞ்சி, கூவைக்கிழங்கு, வள்ளிக்கிழங்கு, ஆசினிப்பலா, கரும்பு, ஐவனநெல் முதலியவற்றை விளைவித்தனர் என்பதை,

''வாதிகை அன்ன கவைக்கதிர் இறைஞ்சி
இரும்பு கவர்வுற்றன பெரும்புன வரகே
பால்வார்பு கெழீஇ, பல்கவர் வளி போழ்பு

வாலிதின் விளைந்தன ஐவன வெண்ணெல்”[29]

என்னும் மலைபடுகடாம் பாடல் கூறுகிறது. பெண் நாயால் வேட்டையாடிய பலவகையான கறிகளை மருதநிலமக்கள், கானவர்கள் என்று பலரும் இரவலர்க்கு விருந்தோம்பினர். கடமானின் கொழுத்த தசைக்கறி, முயல்கறி, நண்டு வகை, போன்றவற்றை உணவுடன் சேர்த்து அளித்துள்ளதைக் காண முடிகிறது. பெரும்பாணாற்றுப்படையில் மேட்டுநிலப் பயிரான நெல் சோற்றோடு மணிபோல முட்டையிடும் உடும்புக்கறி பொறியலை வீடுதோறும் கொடுப்பார்கள் என்பதை,

“குமலி தந்த மனவுச் சூல் உடும்பின்
வறைகால் யாத்தது வயின் தொறும் பெறுகுவிர்”[30]

என்று இப்பாடல் தெளிவுபடுத்துகிறது. வேட்டையாடப்பட்ட மாமிச உணவோடு மருதநில மக்கள் வீட்டில் வளர்க்கும் கோழியின் இறைச்சிகளையும் தருவார்கள் என்பதை,

“முடுவல் தந்த பைந்நிணத் தடியொடு”[31]

என மலைபடுகடாமும்,

“தீம்பழப் பலவின் சுளைவிளை தேறல்
வீளை அம்பின் இளையரொடு மாந்தி”[32]

என்று அகநானூறும் காட்டுகின்றன. தொல் இனக்குழுச் சமூகத்தின் அடையாளமாகப் பகிர்ந்துண்டதனைக் கூறலாம். வேட்டையாடிய விலங்கைத் தாம் மட்டும் உண்ணாமல், தங்களது சுற்றத்தார்க்கெல்லாம் கொடுத்து உண்டு மகிழ்ந்த நிகழ்வைச் சங்க இலக்கியம் மூலம் காணமுடிகிறது. மலைச்சாரலில் கானவன் அம்பால் எய்து கொன்ற முள்ளம்பன்றிக் கறியை, அவர்கள் வாழும் சிறுகுடிக் குறவர் குடும்பங்களுக்குப் பகிர்ந்தளித்தனர் என்பதனை,

“கானவன் எய்த முளவுமான் கொழுங்குறை
தேம் கமழ் கதுப்பின் கொடிச்சி கிழங்கொடு
காந்தள் அம்சிறுகுடிப் பகுக்கும்”[33]

என நற்றிணைப் பாடல் பகிர்கின்றது. பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் காட்டில் வாழும் கானவர்களுக்குரிய பண்பாகப் பகிர்ந்துண்ணலை நாம் காணமுடிகின்றது.

மலையில் வாழ்ந்த மற்றொரு இனமான குறவர்கள் மலையில் உதிர்ந்த மாவடுவைத் தொகுத்ததை,

> "ஈர்ந்தண் பெருவடுப் பாலையில் குறவ
> ருறைவீ ழாலியிற் றொகுக்குஞ் சாரல்"[34]

என ஐங்குறுநூற்றுப் பாடல் ஒன்று விவரித்துச் செல்கின்றது. குறமகள் திணைமாவினை உண்டு, ஐவன நெல்லைக் கிளிகள் மேயாதவாறு, வேலி அடித்துப் பாதுகாத்தனர். இதனை,

> "சாரற் புறத்த பெருங்குரற் சிறுதினைப்
> பேரமர் மழைக்கட் கொடிச்சி கடியவுஞ்
> சோலைச் சிறு கிளி யுன்னு நாட"[35]

என்னும் பாடல் வழி அறியமுடிகிறது. வேடர்களின் குடிசைக்குச் சென்றால் சிவந்த வேங்கைப் பூப் போன்ற சோற்றை அவரை விதையில் புளியிட்டுக் கரைத்து, உலையில் வேகவைத்து இரவில் கொடுப்பார்கள். சில நாள் தங்கினால் தினைமாவோடு கலந்த உணவை நெய்யோடு தருவார்கள். இதனை,

> "பழஞ்செருக்கு உற்றநும் அனந்தல்தீர
> அருவி தந்த பழஞ்சிதை வெண்காழ்"[36]

என்னும் இப்பாடல்வரிகள் நன்கு விளக்குகின்றன. வேட்டையாடிய களைப்பு அவர்களைத் தூங்கச் செய்திருக்கின்றது. மேலும் கொழுத்த பசுங்கறியைத் தின்ற வேடர்கள் சுனை நீரைக் குடித்தனர் என்பதை,

> "கொழுப்புஆ தின்ற கூர்ம்படை மழவர்
> செருப்புடை அடியர், தெண்சுனை மண்டும்"[37]

என அகநானூறு குறிப்பிடுகின்றது. கானவர்கள் தங்கள் வீடுகளில் விலங்கின் தசையை நெய்யில் வேகவைத்து உண்டு, கள்ளைக் குடித்து மகிழ்ந்தனர். விடியற்காலையில் அருவி அடித்துக்கொண்டு வந்த பலாப்பழத்தின் கொட்டைகளை இடித்துத் தயாரித்த மாவையும், மூங்கில் அரிசிச் சோற்றையும் புளி கலந்த மோரையும் குறமகள் பரிமாறுவாள் என்பதனை,

> "வேய்ப் பெயன் விளையுள் தேக்கட் தேறல்
> குறைவு இன்றி பருகிநறவு மகிழ்ந்து வைகறை...
> வருவிசை தவிர்த்த கடமான் கொடுங்குறை

இன்புளிக் கலந்து மாமோர் ஆக,

கழை வளர் நெல்லின் அரி, உலை ஊழத்து''[38]

என மலைபடுகடாம் காட்டுகிறது. சங்க காலத்தில் மூங்கில் அரிசிச்சோறு உண்டனர் என்பதை உணரமுடிகின்றது.

இரவலர்கள் மன்னர்களைத் தேடி வரும்பொழுது களைப்புத் தீர காட்டில் உள்ள மர நிழலில் தங்கும்பொழுது இசைக்கருவிகளை ஒலிப்பார்கள். இவ்விசை கேட்டு வேடர்கள் இனிய பழங்களைத்தருவார்கள். இதனை

''உண்டற்கு இனிய பழனும் கண்டோர்''[39]

என்னும் வரி விளக்குகிறது. வேடர்கள் இசைப் பாணர்களை மதித்த திறத்தையும் இசைக்கு மயங்கியதையும் அறியமுடிகிறது.

சங்க கால மக்கள் இயற்கையாகக் கிடைத்த காய் கறிகளையும், கலப்பிடம் இல்லாத உணவையும், மாமிசத்தையும் மண்பானைகளில் சமைத்து உண்டு நோயின்றி வாழ்ந்தனர் என்பதை அறியமுடிகின்றது.

**ஆடை**

போர் நடைபெறும் காலத்தில் சேர மன்னன் கழல் அணிந்தகாலையும், பூமியில் படுமாறு தொங்கக் கட்டிய விரிந்த நூலால் செய்த ஆடையையும் அணிந்திருந்தான் என்பதை,

''இருநிலம் தோயும் விரிநூல் அறுவையர்''[40]

எனப் பதிற்றுப்பத்துக் கூறுகிறது. முருகப்பெருமான் சிவந்த ஆடை அணிந்தவன்; வீரக்கழலைத் தரித்தவன்; தொடி என்னும் அணியைத் தோளில் அணிந்தவன்; அரைக்கச்சையை இடுப்பில் கட்டியவன்; நிலத்தளவு தொங்கிப் புரளும் ஆடையை அணிந்தவன் என்று திருமுருகாற்றுப்படை கூறுகின்றது. முருகனைப் போல் அரசனும் உடையணிந்திருந்தான் என்பதை,

''பூடைவீழ் அம்துகில் இடவயின் தழீஇ''[41]

என்னும் நெடுநல்வாடை வரி மூலம் அறியலாம். பாணர்கள் அணிந்திருந்த நார் நாராய்க் கிழிந்திருந்த உடையை நீக்கி சேரமன்னன் தன்னுடைய இடையில் உடுத்தியிருந்த உயர்ந்த ஆடையைக் கொடுத்து மகிழ்ந்தான் என்று புறநானூறு கூறுகிறது.

''எடுத்த நூல் உத்தரியத்தொடு எய்திநின்று
உடுத்தலால் நிறத்துகில் ஒழிந்த போன்றவே''[42]

என்னும் பாடல் மூலம் உத்தரியம் மார்பில் அணியும் தன்மையைக் கம்பர் விளக்குகிறார். ''மன்னன் புலவருக்கும் இரவலருக்கும் கொடுக்கும் நிலையில் மடி, துகில், கலிங்கம், அறுவை, வேறுபட்ட உடை போன்றன அமைகின்றன. வேறுபட்ட உடை என்பதற்குத் தெளிந்த விளக்கம் இல்லை. பல்வேறு வகையான உடைகளைக் குறிக்கும் சொல்லாக இதனைக் கருதலாம்''[43] என்று பகவதி கூறுகின்றார்.

போர் வீரர்களுக்கு அடிப்படைத் தேவை பாதுகாப்புத் தன்மை. எனவே போர் செய்வதற்கு ஏற்றவாறும் எதிரியின் படைக்கலங்களில் இருந்து தங்களைப் பாதுகாக்கவும் அதற்கேற்ற உடைகளை அணிந்திருந்தனர். வீரர்களுக்குப் பாதுகாப்பு அளிப்பது கவசம் என்பதை,

''புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய
எய்கணை கிழிந்த பகட்டு எழில் மார்பின்''[44]

என்னும் புறநானுற்றூப் பாடல் உணர்த்துகின்றது. புலியின் தோலால் செய்த கவசத்தின் மீது பட்ட அம்புகள் பிளந்தன என்று கூறுவதன் மூலம் சங்ககாலத்தில் புலித்தோல் ஆடையைப் போருக்குப் பயன்படுத்தியதை அறியமுடிகின்றது.

மகாபாரதத்தில் வரும் கர்ணன் கவசகுண்டலத்துடன் பிறந்தான். அது இருக்கும் வரை கர்ணனை எவராலும் வெல்ல முடியாது. அதை அறிந்த இந்திரன் தன் மகன் அர்ச்சுனனுக்கு ஆபத்து வரக் கூடாது என்று யாசகமாகக் கவச குண்டலத்தைப் பெறுகின்றான். கர்ணன் உயிர் நீங்க அதுவும் ஒரு காரணமாக இருந்ததை அறியமுடிகின்றது.

''புலிப் பொறிப் போர்வை நீக்கிப் பொன்னணிந் திலங்குகின்ற

ஒலிக்கழல் மன்னருட்கு முருகுச்சுடர் வாளை நோக்கி”[45]

என்னும் பாடல் சச்சந்தன் புலியினது வரியையுடைய கவசத்தைத் தவிர்த்து வாளை நோக்கும் தன்மையை அறியமுடிகின்றது. போரில் பாதுகாப்புக் கருதி கவசம் அணிந்தனர் என்பதை அறியமுடிகின்றது.

“சிதைவு அருநாள் அலர்ச்சிவந்த தாமரை
இதழ்தொறும் வண்டு வீற்றிருந்தது ஆம் என”[46]

என கம்பர், இராமன் தன் கைவிரல்களில் விரற்செறியை அணிந்து போர்க்கோலம் பூண்டான் எனக் குறிப்பிடுவதன் மூலம், கைவிரல்களுக்குப் பாதுகாப்புக் கருதி கவசத்தை அணிந்தான் என்பதை உணர முடிகின்றது.

முதன்முதலில் மனிதன் இலை, தழை மரவுரி, விலங்குகளின் தோல் போன்றவற்றை ஆடையாகப் பயன்படுத்தினான். நாகரிக வளர்ச்சியினால் உடைகளில் மாற்றம் ஏற்பட்டது. ‘ஒரு சில பகுதிகளில் உலகத்தோடு ஒட்ட ஒழுக இயலாது நாகரிக முதிர்ச்சி பெறாது தனித்து வாழும் மக்கள் இயற்கையின் தாக்குதல்களைப் பொருட்படுத்தாமல் ஆதி மனிதர்களைப் போல இருப்பதைக் கேள்வியுறுகின்றோம்’ சங்க காலத்திலேயே தமிழர்கள் நாகரிகமாகவும் சூழலுக்கு ஏற்றவாறும் உடை அணிந்திருந்தனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன.

**குளிர்காலம்**

குளிர்காலத்தில் சங்க கால மக்கள் இசைக்கருவிகளையும் போர்க்கருவிகளையும் உறையிலிட்டுப் பாதுகாத்தனர். குளிரிலிருந்து தங்களைக் காத்துக் கொள்வதற்காக ஆடுகளின் மயிர்களையும் பட்டையும் ஆடையாக நெய்து பயன்படுத்தினர் என்பதை,

“மடத்தகை மாமயில் பனிக்கு மென்றருளிப்
படாஅமீத்தக் கெடா நல்லிசை பேகன்”[47]

என்னும் புறநானூற்றுப் பாடல் மூலம் அறியமுடிகின்றது. சங்க கால மக்கள் குளிர்காலத்திற்கெனத் தனி ஆடைகளைப் பயன்படுத்தியதை அறியமுடிகின்றது. மலைவாழ் மக்கள் கடுங்குளிரிலிருந்து தங்களைப் பாதுகாத்துக்கொள்ள மயிர்

இழைகளால் ஆன ஆடைகளைப் பயன்படுத்துகின்றனர். இதனைப் பண்டையத் தமிழரும் நன்கு அறிந்திருந்தனர் என்பதை,

> ‘‘பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்
> கட்டு நுண்வினைக் காருகர் இருக்கையும்’’[48]

என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது. தமிழர்கள் எலியின் மயிர்களால் உருவாக்கப்பட்ட ஆடையைப் பயன்படுத்தினர். பிரச்சோதன மன்னனின் பள்ளியறையில் மயிர்ப்போர்வை, எலிப்பூம்போர்வை ஆகியவற்றைப் பயன்படுத்தினர் என்பதை,

> ‘‘புலிக் காலமளிப் பொங்கு பட்டசைஇ
> எலிப்பூம் போர்வையொடு மயிர்ப்படாம் விரித்து’’[49]

என்னும் பாடல் மூலம் கொங்குவேளிர் எடுத்துக்காட்டுகிறார். ‘‘எலியினது கூர்மையுடைய மயிரினால் செய்த ஆடையாலாகிய சட்டை எலிமயிராற் செய்த ஆடை மிகுந்த வெப்பம் உடையது. குளிர் நீக்கும் அதனுள் காற்றுப் புகாது என்பதும் பனிக்காலத்தில் அதனை அணிவது உண்டென்றும் அது கிடைத்தற்கரியது’’[50] என்று உ.வே.சாமிநாதையர் கூறுவதாகப் பகவதி கூறுகிறார்.

**பிறப்பு**

திருமணமான சில மாதங்களிலேயே பெரியவர்கள் வாரிசுகளை எதிர்பார்ப்பார்கள். ‘‘சங்க இலக்கியத்தில் பிறந்த நாள் பற்றிக் குறிப்பேதும் இல்லை’’[51] எனப் பகவதி கூறுகிறார். ஆனால் சங்க இலக்கியத்திற்கு முன்தோன்றிய தொல்காப்பியம்,

> ‘‘சிறந்த நாளணி செற்றம் நீக்கிப்
> பிறந்தநாள் வயிற் பெருமங்கலமும்’’[52]

என்று கூறுகிறது. இவ்வடிகளுக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர் ‘‘மங்கல வண்ணமாகிய வெள்ளணி அணிந்து எவ்வுயிர்க் கண்ணும் அருளே நிகழ்தலின் அதனை வெள்ளணி என்பர்’’[53] என்று பிறந்த நாளில் வெள்ளணி அணிதலைக் குறிப்பிடுவதாகப் பகவதி கூறுகிறார்.

> ‘‘அடித்தளை நீக்கும் வெள்ளணி’’[54]

எனச் சிலப்பதிகாரமும்,

''வெள்ளணி அணிந்தே ஞான்றே''[55]

எனச் சீவகசிந்தாமணியும் வெள்ளணி அணிதலைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. சங்க காலத்தில் மங்கல நிகழ்வுகளுக்கு மகளிர் வெண்ணிற ஆடையைப் பயன்படுத்தியதை அறிய முடிகின்றது. இன்றும் ஆண்கள் சுப துக்க நிகழ்வுகளுக்கு வெண்ணிற ஆடையைப் பயன்படுத்துகின்றனர்.

**குழந்தைகள்**

திருமாலின் ஐம்படைகள் பொன்னால் கோர்க்கப்பெற்று அது ஐம்படைத்தாலி என்னும் பெயரில் குழந்தைகளுக்கு நகையாக அணிவிக்கப்பட்டது. சிறுவர்கள் காலில் கிண்கிணி என்னும் சிலம்புகளையும் சிவபெருமானின் ஆயுதங்களைப் போலப் பொன்னால் செய்த அணிகலன்களையும் குழந்தைகளுக்கு அணிவித்தனர். புலிப்பல் கோத்த கழுத்தணிகளைச் சிறுவர்கள் அணிந்திருந்தனர் என்பதை,

''புலிப்பல் தாலிப் புன்தலைச் சிறாஅர்''[56]

என்னும் புறநானூற்றுப்பாடல் சுட்டுகிறது.

''மைஇல் செந்துகிர்க் கோவை அவற்றின் மேல்
தைஇய பூந்துகில் ஐது கழல் ஒரு திரை''[57]

என்னும் கலித்தொகைப் பாடல் கைவேலைப் பாடமைந்த பொற்காசுகளையும், அதன் மேலே சிவந்த பவள வடங்களையும் மென்பட்டாடையையும் இடுப்பில் அணிந்தனர் என்று கூறுகிறது. சங்க காலத்தில் தாயார் தம் குழந்தைகட்கு அணிகளைப் பூட்டி மகிழ்ந்தனர் என்பதை இப்பாடலால் அறிய முடிகின்றது. கிண்கிணி பொற்காசு, பவளக்கோவை அலர்தொடி, எறியாவாள், எற்றாமழு, ஆனேற்று, அவிர்பூண், முத்துமாலை, கண்ணி முதலிய அணிகலன்களை அணிந்து மகிழ்ந்தனர்.

குழந்தையின் அறியாமை உணர்வையும் துகில் உடுத்தியிருக்கும் அழகையும் மணிமேகலை

''செவ்வாய்க்குதலை மெய்பெரு மழலை
சிந்துபு சின்னீர் ஐம்படை நனைப்ப''[58]

என எடுத்துரைக்கின்றது. சுந்தரர் குழந்தையாக இருந்தபோது ஐம்படைத்தாலி அணிந்து விளையாடினார் என்று தேவாரம் கூறுகிறது.

**திருமணம்**

திருமணத்தின் போது மணமகனும் மணமகளும் புத்தாடை அணியும் வழக்கம் சங்க காலத்தில் இருந்ததை,

"கோடிக் கலிங்கத்து ஒடுங்கிய நிலையிலும்
முருங்காக் கலிங்கத்தை முழுவதும் வளைஇயும்"[59]

என்னும் பாடல் குறிப்பிடுகின்றது. இராமனுக்குத் திருமணம் நடைபெற்ற போது வெண்ணிறப்பட்டு உடுத்தியதைக் கம்பர்,

"தண்நிறப் பாற்கடல் தழீஇயது ஆம்என
வெண்நிறப்பட்டு ஒளிவிளங்கச் சாத்தியே"[60]

என்று வர்ணிக்கிறார். இன்று திருமணத்திற்குரிய ஆடைகள் சமூகத்திற்கு ஏற்றவாறு மாறுபடுகின்றன. ஆனால், வெண்ணிற ஆடை எல்லாச் சமூகத்தினரும் உடுத்துகின்றனர். "இந்தியாவின் வடக்கே செல்லச் செல்ல சிவப்பு நிறத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கின்றனர். இதனைக் கொண்டு இந்தியரின் மண ஆடையே சிவப்பு"[61] என்று தாரா அலி பெய்க் கூறுவதாகப் பகவதி கூறுகிறார். வெண்ணிற ஆடை உடுத்திய வழக்கம் காலப்போக்கில் மாற்றமடைந்து வெண்ணிறப் பட்டாடையை உடுத்துகின்றனர்.

**இறப்பு**

உயிர்துறந்த பின் பிணத்தின் மேல் போடும் ஆடைக்குக் 'கோடி' என்று பெயர். இறந்தவர்கள் பெண்களாக இருந்தால் புடவையும், ஆண்களாக இருந்தால் வேஷ்டியையும் கோடியாகப் போடுவர். சங்காலத்திலேயே இறந்தவர்களைப் பாடையில் கிடத்தி வெள்ளை நிற ஆடையைச் சாற்றுவது வழக்கமாக இருந்ததை,

"கால் கழி கட்டிலில் கிடப்பி
தூ வெள் அறுவை போர்ப்பித்திலதே"[62]

எனப் புறநானூறு கூறுகிறது. சூளாமணியில் அச்சுவக் கிரீவன் இறந்த போது உடலின் மீது பஞ்சினால் நெய்யப்பட்ட ஆடையையும் பட்டுத் துணியையும் போர்த்தினார்கள் என்பதை,

> ‘‘பஞ்சும் துகிலும் பூம்பட்டும்
> பாயப்பள்ளி படுத்தன் மேல்’’[63]

என்னும் பாடல் வரிகள் குறிப்பிடுகின்றன. ‘‘எகிப்தியர்கள் இறந்தவர் மேல் சணல் தவிர வேறு ஆடை போர்த்தல் தூய்மை அற்றது. செடியினின்றும் கிடைக்கும் ஆடைகளே தூய்மையானது என்னும் நம்பிக்கையுடன் சணல் ஆடையைப் போர்த்தும் பழக்கத்தைக் கொண்டிருந்தமை தெரியவருகின்றது.’’[64] இதன் மூலம் சங்க காலத்திலும் கோடி போடும் வழக்கம் இருந்ததை அறியமுடிகின்றது.

‘‘கலுழுவேகன் தன் மகனுக்கு இறுதிச்சடங்கு செய்வதற்காகச் சுடுகாட்டிற்கு வரும்போது காளக உடை கரிய உடை எனும் நிலையில் கறுத்த ஆடையினைப் பற்றிய எண்ணம் ஈண்டு அமைகின்றது.’’[65] கறுப்பு நிற ஆடை துக்கம் அனுசரிக்கக் கூடியதாக மாறிவிட்டது. ‘‘வெண்மையை மங்கலமெனக் கருதிய சமணர்கள் கறுப்பு நிறத்தினை அமங்கலமாகக் கருதினர்’’[66] அதனால் தான் சுபநிகழ்ச்சிகளுக்கு வெண்ணிற ஆடையையும் அமங்கல நிகழ்வுக்குக் கறுப்பு ஆடையையும் அணிகின்றனர்.

**ஆடை வகைகள்**

பழங்காலத்தில் புகையைப் போன்ற ஆடைகளும். பாலாவி, மூங்கில் உரி, பாம்பின் தோல் போன்ற ஆடைகளும் நெய்யப் பட்டிருந்தன. மன்னரும், அவரின் பணியாளர்களும் சட்டைகள் அணிந்தனர். அதற்குக் கஞ்சம் என்று பெயர். ‘‘ஆண்கள் வேட்டி அணிந்தனர். வசதி படைத்த சிலர் மேலாடையும் அணிந்தனர். பெண்கள் இடையில் புடவை உடுத்தினர். பெண்களில் சிலர் தம் உடலைத் துணியால் போர்த்திக் கொள்வதுண்டு. பஞ்சாலும், பட்டாலும் ஆக்கப்பட்ட ஆடைகளை நகரமந்தர்கள் விரும்பி அணிந்தனர்.’’[67] என்று பகவதி கூறுகிறார்.

**அணிகலன்கள்**

நெற்றிச்சுட்டியும், பிறையும், மூன்று வடம் இணைத்த தங்கச் சங்கிலியும் பெண் குழந்தைகளுக்கு அணிவிப்பர். மாதணி, முத்துமாலை, வெள்ளிக்கம்பியால் கோர்க்கப்பட்ட பொற்றாமரை மலர்கள், கைக்காப்புகள் குழந்தைகளுக்கு விரும்பி அணிவிக்கப்பட்டன. இதனை,

"குரல் புணர்சீர்க் கொளைவல்பாண் மகனும்பே...
வெள்ளி நாரால் பூப் பெற் றிசினே"[68]

என்னும் பாடல் வரிகள் உணர்த்துகின்றன. இன்று போல் அன்றும் பெண்கள் அணிகலன்கள் மீது அதிக விருப்பம் கொண்டிருந்தனர் என்பதை அறிய முடிகின்றது.

**ஆடை அணிகலன்கள்**

மணிகளைப் பொன்னால் இழைத்து அணி செய்யப்பெற்றது 'அணியிழை', ஒளி பொருந்திய இழை 'ஒளியிழை', செம்பொன்னாலும் பசிய மணிகளாலும் ஆன இழை 'சேயிழை', பசும்பொன்னாலும் பசிய மணிகளாலும் வேலைப்பாட்டாலும் சிறப்புற்று விளங்கிய இழை 'மாமணிழை', எனவும் பெயர் பெற்றன.

கலம் (கலன்) என்பது எங்ஙனம் நகையைக் குறித்தது என்று அறிய இயலவில்லை. இது 'கல்' என்னும் ஓசையுண்டாகும் சதங்கை, சிலம்பு போன்ற காலணிகளுக்கு முதலில் பெயராகிப் பின்பு காலப்போக்கில் நகைகளுக்குப் பொதுப்பெயராக அமைந்திருக்கலாம்.

கைகளிலும் தோள்களிலும் தொடுத்துக் கொண்ட அணி 'தொடி'' எனப்பட்டது. ஒளி பொருந்திய தொடி 'ஒண்டொடி', தொடிகளுள் சிறந்ததாக ஆராய்ந்து அணியப்பெற்றது 'ஐந்தொடி', செறிந்து இறுக அணியப்பெற்றது 'செறிதொடி', பசும்பொன்னால் அல்லது பசிய மணிகளாலான தொடி 'பைந்தொடி' எனவும் பெயர்பெற்றன.

வீரா் போன்றவர் அணிந்தத் தொடி 'வீரவளை' எனப்பட்டது. இளம்பெண்கள் அணிந்த முன் கை வளை 'குறுந்தொடி' எனப்பட்டது.

குழை - இது தளிரிலிருந்து (குழையிலிருந்து) பிறந்த பெயர், மகரமீன் வடிவத்தில் அமைந்தால் 'மகரக்குழை' எனப்பட்டது. பொன்னாற் செய்யப்பட்ட

குழை ‘பொலங்குழை’, ஒளி பொருந்திய குழை ‘ஒண்குழை’, பொலிவினையுடைய குழை பூங்குழை, பெரிய ஒளி ஒழுகின குழை ‘வார்குழை’, தாளுருவி என்னும் ஒரு வகைக் குழை ‘சிறுகுழை’ என்றும் பெயர்பெற்றன.

வளை - வளைந்த, கோணலான நகை. இது சங்கு, ஆமை ஓடு, பித்தளை, வெள்ளி, பொன் முதலியவற்றால் செய்யப்படுகின்றது. இக்காலத்தில் கண்ணாடி கொண்டும் ‘பிளாஸ்டிக்’ என்னும் கலவைப் பொருள் கொண்டும் செய்யப்படுகின்றது. காப்பு என்பதும் இவ்வகையைச் சேர்ந்ததேயாகும்.

**கூந்தல் ஒப்பனை**

தலைக்கோலம் செய்வது ஒரு தனிக்கலை, அது சங்ககால மக்களின் கைவந்தகலை, தங்களின் வட்டநிலா முகத்திற்கு ஏற்ப நீண்ட, நெளிந்த கருங்கூந்தலைப் பெண்கள் விரும்பி வளர்த்தனர் என்பதை,

“கலிமயிற் கலாவங் கால்குவித் தன்ன
ஒலிமென் கூந்தற் கமழ்புகை கொளீஇத்
தண்கமழ் கோதை புனைய”[69]

என்னும் பாடல்மூலம் அறியலாம். தற்காலத்தில் பெண்கள் ஒப்பனை செய்து கொள்ள விரும்புவது போல் சங்க காலத்திலும் கூந்தலை ஒப்பனை செய்து கொள்வதில் ஆர்வமாக இருந்தனர் என்பதை அறிய முடிகின்றது

**அரண்மனைகள்**

அரசன் வாழும் அரண்மனையைச் சுற்றிலும் நீலமணி போன்ற நிறமுடைய நீரினைக் கொண்ட அகழியும், கற்களால் கட்டப்பட்ட உயர்ந்த மதில் சுவர்களும் அதில் வலிமையான வாயிலும், தெய்வத்தன்மை பொருந்திய நெடிய நிலையையும், நெய் பூசப்பட்டது போன்ற கதவுகளையும், மேகங்கள் உலாவும் உயர்ந்த மாடங்களையும் தென்றல் காற்று உள்ளே செல்லுமாறு அமைக்கப்பட்ட சாளரங்களையும் கொண்டு விளங்கும் என்பதை

“மண்உற ஆழ்ந்த மணிநீர்க் கிடங்கின்…
நெய்படக் கரிந்த திண்போர்க் கதவின்…
சில்காற்று இசைக்கும் பல்புழை நல்இல்”[70]

என்னும் மதுரைக்காஞ்சிப் பாடல் வரிகள் உணர்த்துகின்றன. தேவலோகத்தைத் தொடும்படி கட்டப்பட்ட எழுநிலை மாடங்களின் மேல் இளவேனில் பருவத்தில் உறங்குவதற்காகப் படுக்கைகள் இருக்கும். மாடங்களில் உள்ள சாளரங்களின் வழியாகக் குளிர்ந்த காற்று வீசும். கதவுகள் காற்று உள்ளே நுழையாதவாறு நெருக்கமாக உருவாக்கப்பட்டிருப்பதை,

''சிலம்பி வால் நூல் வலந்தன தூங்க
வான்உற நிவந்த மேல் நிலை மருங்கின்
வேனில் பள்ளித் தென்வளி தரூஉம்''[71]

என நெடுநல்வாடை எடுத்தியம்புகிறது. சிற்ப நூலை அறிந்த தச்சர்களால் நுட்பமாக நூல் பிடித்துப் பார்த்துக் கட்டடங்கள் அமைக்கப்பெறும். அவர்கள் அரண்மனையின் ஒவ்வொரு பகுதியும் நன்கு அமைய வேண்டிய திசைகளைக் கருத்தில் கொண்டு அதில் காவலாக நிற்கும் தெய்வங்களால் எக்குறையும் நிகழாதவாறு அவற்றிற்கு வழிபாடுகளை நிகழ்த்துவர். பெரும் புகழுடைய மன்னர்களின் தகுதிக்கும் தேவைக்கும் ஏற்ப மனைகளும் மண்டபங்களும் வாயில்களும் பாகுபடுத்தப்பட்டு அமைக்கப்பெற்றன.

மதிலின் வாயிலில் அமைந்திருக்கும் கதவுகள் ஆணிகளாலும் பருத்த இரும்புகளாலும் பொருத்தப்பட்டிருக்கும். சாதிலிங்கக் குழம்பினால் செவ்வண்ணம் பூசப்பட்டிருக்கும், இருபத்தேழு வீண்மீன்களில் உத்தரம் என்ற விண்மீனின் பெயரைக் கொண்ட கற்பலகை, வாயிலின் இருகதவுகள் அமைந்துள்ள நிலைக்கு மேல் செருகப்பட்டிருக்கும். இப்பலகையில் குவளையின் புதிய மலர்களை உயர்த்தித் தங்கள் துதிக்கைகளால் ஏந்திய பிடிகளின் உருவங்களும் அவற்றின் நடுவில் திருமகள் உருவமும் பொறிக்கப்பட்டிருப்பதை,

''துணைமான் கதவம் பொருத்தி இணைமாண்டு...
போது அவிழ் குவளைப் புதுப்பிடி கால் அமைத்து...
குன்று குயின்றன்ன ஓங்குநிலை வாயில்''[72]

என்று நெடுநல்வாடை குறிப்பிடுகின்றது. திருமகள் நிலையாகத் தங்கும் குற்றமில்லாத சிறப்புடையதாக அரண்மனை முற்றம் விளங்கும். ஆற்று நீரினால்

கொண்டு வரப்பட்ட புதுமணலால் பரப்பப்பெற்றதாக அம்முற்றம் காட்சியளிக்கும். அதில் கவரிமான்களும் அன்னப்பறவைகளும் தாவி விளையாடும்.

யவன நாட்டினா் தங்கள் தொழில்நுட்பத்தால் உருவாக்கிய பாவைகளின் கைகளில் ஏந்தியுள்ள அகல்விளக்கில் நெய் ஊற்றப்பட்டுத்திரிகள் இட்டுக் கொளுத்தும்போது செந்நிறச்சுடா் மேல் நோக்கி எரியும். அந்தப்புரத்தின் உட்பகுதி சாந்து பூசப்பட்டிருக்கும். தூண்களில் கொடிகள் எழுதப்பெற்று அழகுடன் காட்சியளிக்கும்.

சோழன் தன் மதில் சுவரில் பொருத்தப்பட்டிருந்த கதவில் அடையாளச்சின்னமாகிய புலி இலச்சினையைப் பொறித்திருந்தான் என்பதை

‘‘புலிப் பொறிப் போர்க் கதவின்
திருத் துஞ்சும் திண்காப்பின்’’[73]

என்னும் பட்டினப்பாலை வரிகள் உணா்த்துகின்றன. நிலவின் பயனை நுகா்வதற்காக அமைக்கப்பட்டுள்ள வெண்ணிறமுடைய நிலாமுற்றத்தில் பெய்த மழைநீா் மாடங்களிலிருந்து கீழே இறங்குவதற்காக மகரமீனின் வாய் போல மழைநீர்க் குழாய்கள் அமைக்கப்பட்டிருப்பதை,

‘‘நிலவுப் பயன் கொள்ளும் நெடுநிலா முற்றத்து’’[74]

எனச் சிலப்பதிகாரமும்,

‘‘நிலவுப்பயன் கொள்ளும் நெடுவெண் முற்றத்து
கிம்புரிப் பகுவாய் அம்பணம் நிறைய’’[75]

என நெடுநல்வாடையும் குறிப்பிடுகின்றன. சேரமன்னின் மதிற்சுவா் மண்ணால் கட்டப்பட்டது. அதில் அழகான ஓவியங்கள் வரையப்பட்டிருந்தன. சங்க காலத்தில் பாதுகாப்பிற்காகப் பல அரண்மனைகளில் புறமதில்கள் இடைமதில்கள், அகமதில்கள் என மூன்று மதிற்சுவா்கள் அமைந்திருந்ததை அறியமுடிகின்றது. சங்க கால அரசா்கள் நீா் அரண், நில அரண், மலை அரண், காட்டு அரண் என நான்கு வகை அரண்கள் அமைப்பது வழக்கம் என்பதை,

‘‘மணிநீரும் மண்ணு மலையும் அணிநிழற்
காடும் உடையது அரண்’’[76]

என்னும் குறள் உணர்த்துகிறது. சங்க கால அரசர்கள் பாதுகாப்பிற்காக அரண்மனைச் சுற்றிலும் அரண் அமைப்பித்தனர் என்பது தெரியவருகிறது.

**குறவர் இல்லம்**

மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி, மலைப்பகுதியில் வாழும் குறவர்கள் வாழ்ந்த ஊரைச் சிறுகுடி என்றழைத்தனர்.

> ''மழை விளையாடும் குன்றுசேர் சிறுகுடி''[77]

மலைவாழ் மக்களின் குடில்கள் அவ்விடத்தில் கிடைக்கும் தினைத்தாளால் வேயப்பட்டிருக்கும். விலங்குகளிடமிருந்து தங்களைக் காத்துக் கொள்வதற்காக நுழைவாயிலைக் குறுகியதாக அமைத்திருப்பர். என்பதை,

> ''இருவி வேய்ந்த குறுங்காற் குரம்பை''[78]

என குறிஞ்சிப்பாட்டும்,

> ''புல்வேய் குரம்பைக் குடிதொறும் பெறுகுவீர்
> பொன் அறைந்தன்ன நுண் நேர் அரிசி''[79]

என்று மலைபடுகடாமும் குறவர்களின் குடில்களைப்பற்றிக் கூறுகின்றன.

**ஆயர் இல்லம்**

முல்லை நிலத்தில் வாழும் மக்களை ஆய்ச்சியர், இடையர், கோவலர் என்றழைப்பர். இவர்களின் முக்கியத்தொழில் ஆநிரை மேய்த்தல், பால், தயிறு மோர் விற்றல். ஆயர்களின் குடியிருப்புகள் குறுகிய கால்களை உடையது. அதன் மேற்பகுதி வரகுத்தாள்களாலும், வைக்கோற் கற்றைகலாலும் வேயப்பட்டிருக்கும், மூங்கில்களால் நெருக்கமாக அமைந்த படல்களைக் கதவுகளாகவும், ஆட்டுக்கிடாயின் தோல்களைப் பாயாகவும் பயன்படுத்தினர்.

முள்வேலியிட்டுக் காடுகள் சூழ்ந்த வேலிகளை உடைய ஊர்களில் ஆயர்கள் வாழ்ந்தனர். வீடுகளின் முற்றத்தில் நெற் கூடுகள் இருந்தன. முற்றத்தை ஒட்டிய மரப்பந்தலின் கீழ் யானையின் கால் போன்ற வரகு திரிக்கின்ற திரிகை நடப்பட்டிருந்தது என்பதை

''குளகுஅரை யாத்த குறுங்கால் குரம்பை
செற்றை வாயில் செறிகழிக் கதவின்''[80]

என்று பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகின்றது.

**உழவர் இல்லம்**

வயலும் வயல் சார்ந்த பகுதியும் மருதநிலமாகும், மருதநில உழவர்கள் தென்னந்தோப்புகளை உழுது பண்படுத்தும் தொழிலைச் செய்தார்கள். இவர்களின் மனைகள் தெருவாக இல்லாமல் தோப்புகள் தோறும் தனித்தனியாக அமைந்திருக்கும். உரல் போன்ற அடியினையும் மலையைப் போன்ற தோற்றத்தினையும் உடைய யானையின் உடல் அமைப்பில் கட்டப்பட்ட வீடுகள் தென்னையின் வாடிய மடலால் வேயப்பட்டிருக்கும். மஞ்சளையுடைய முற்றமும், மணம் கமழும் பூந்தோட்டங்களும் சூழ்ந்திருக்கும் என்பதை,

''புதுவை வேய்ந்த கவிகுடில் முன்றில்''[81]

''வண்தோட்டுத் தெங்கின் வாடுமடல் வேய்ந்த
மஞ்சள் முன்றில் மணம்நாறு படப்பை''[82]

என்னும் பெரும்பாணாற்றுப்படை பாடல்கள் உணர்த்துகின்றன. சங்க கால உழவர்களின் இல்லங்கள் வைக்கோலால் வேயப்பட்டதை அறியமுடிகின்றது.

**வலைஞர் இல்லம்**

கடலுக்குப் பரவை என்றொரு பெயரும் உண்டு. கடலும் கடல் சார்ந்த பகுதியையும் உடைய நெய்தல் நிலமக்களைப் பரதவர் வலைஞர் என்றழைக்கின்றனர். வலைஞர்கள் வேழக்கோலை வரிசையாக வைத்து இடையிடையே காஞ்சி, வஞ்சி மரத்தின் கொம்புகளைக் கலந்து தாழையின் நாரால் கட்டி நாணல் புல்லால் வேயப்பட்ட சிறிய குடில்களில் வாழ்ந்தனர். இதனை,

“வேழம் நிரைத்து வெண்கோடு விரைஇ
தாழை முடித்து தருப்பை வேய்ந்த”[83]

என்று பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகின்றது. பரதவர் குடில்கள் அணிலும் எலியும் கடிக்காமல் இருப்பதற்காக முள் போன்ற ஈந்தின் இலையால் வேயப்பட்டிருக்கும். நீர்படப்பால் சூழப்பட்டும், தாழை மரங்கள் வேலியாகவும், முள்ளிச்செடிகளால் வேய்ந்த குறுகிய கூரையையுடைய சிறு குடில்களில் பரதவர்கள் வாழ்ந்தனர் என்பதை,

“கண்டல் வேலிக் கழிசூழ் படப்பை
முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பை”[84]

என்னும் பாடல் வரிகள் தெரிவிக்கின்றன. பரதவர்களின் இல்லங்கள் நிலாப் போன்று விளங்குகின்ற மணல் மிகுந்த தெருக்களில் புல்லால் வேயப்பட்ட குடிசைகளையுடைய புலால்நாறும் சேரி என்பதை,

“நிலாவின் இலங்கு மணல்மலி மறுகில்
புலால்அம் சேரி புல்வேறு குரம்பை”[85]

என்று அகநானூறு சுட்டுகிறது. இவ்வாறு சங்க கால மக்கள் இயற்கையோடு இயைந்த குடியிருப்புகளில் வாழ்ந்தனர் என்பதை அறியமுடிகிறது.

### திருமணம்

ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் மனதிற்குள் நிகழும் காதல் அகம். பலர் முன்னிலையில் சடங்குகளுடன் நடக்கும் திருமணம் புறம் எனப் பகுக்கலாம்.

திருமணம் பற்றிய பல்வேறு அறிஞர்களின் கருத்துகள் பின்வருமாறு:

1 “திரு என்னும் சொல் அழகு, செல்வம், செம்மை, சிறப்பு முதலிய பொருள் பொதிந்த சொல்லாகும். சுருங்கக் கூறின் கண்டோரால் விரும்பப் பெறும்

தன்மை விளங்குமிடமெல்லாம் திருவும் பொலிகின்றதென்று சொல்லலாம். மணம் என்னும் சொல் நறுநாற்றத்தைக் குறிக்கும். பெரும்பாலும் இயற்கையில் மணங்கமழ்வது மலர்களே ஆகும். இம்மலரும் வைநுனையாய் - சிற்றரும்பாய் - வீயாய் இருக்குங்கால் மணஞ்சிறப்பதில்லை. மலரும் நிலையில் பெரும் போதாய் நிற்கும் போதுதான் மணமிகுந்து விளங்குகிறது"[86] என்று சரவண ஆறுமுக முதலியார் கூறுகிறார்.

2 "ஓர் ஆடவனும் ஒரு பெண்டும் கணவனும் மனைவியுமாக இல்லறம் நடத்த இசைந்து ஒன்று சேருவதே மணம்"[87] என்று தேவநேயன் கூறுவதாகச் சசிவல்லி கூறுகிறார்.

3 "திருமணம் இரண்டு தனிப்பட்டவர்களுக்கிடையே நடை பெறும் உடன்படிக்கையன்று இரண்டு குழுக்களுக்கிடையே இணைப்பை நெருக்கத்தை ஏற்படுத்தும் உறவுத்தளை நியதி"[88] என்கிறார் நடராஜன்.

4 "திருமணம் என்பது சமூகத்திலுள்ள ஒரு வகை வழக்கமாகும். இது சமுகத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஆண் பெண் உறவு நிலைகளைக் குறிக்கிறது. அத்தோடு திருமணம் என்பது ஒரு புதிய சந்ததி தோன்றுவதற்குரிய ஒருவித பிணைப்பு"[89] என்கிறார் சசிவல்லி.

5 "திருமணம் என்பது ஆணும் பெண்ணுமாகிய இருவரை ஒருவராகச் சேர்க்கும் இணைப்பு. மணம் என்னும் சொல்லுக்குக் கூடுதல் என்பது பொருள்"[90] என்று கூறுகிறார் அம்பேத்கர்.

திருமணம் என்பதற்குப் பல்வேறு அறிஞர்கள் கூறும் கருத்துக்கள் எக்காலத்திற்கும் பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது.

சங்க காலத்தில் வாழ்க்கைத் துணையைத் தானே தேர்ந்தெடுத்துக் கொண்டனர். காலப்போக்கில் நெறி தவறும் போது பலர் முன்னிலையில்

பெண்ணைப் பெற்றோர் உடன்பட்டுக் கொடுக்க வேண்டும் என்ற முறையை ஏற்படுத்தினர் இதனைத் தொல்காப்பியமும்,

> “பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
> ஐயர் யாத்தனர் கரணம் என்ப”[91]

என்று கூறுகிறது. பொய் கூறி ஒருவருக்கொருவர் ஏமாற்றும் போதுதான் தாலிகட்டும் வழக்கம் தோன்றியது. அக்காலத்தில் தாலிகட்டிக் கொள்ளாமல் வாழ்ந்தனர் என்பதைத் தொல்காப்பிய நூற்பா மூலம் அறிய முடிகின்றது.

**களவு மணம்**

தலைவி தலைவன் மீது கொண்ட காதலைத் தோழியிடம் கூறுவாள். தலைவனைச் சந்திப்பதற்குத் தோழி உறுதுணையாக இருப்பாள். வழக்கம் போல் தலைவியைச் சந்திக்கும் இடத்திற்குத் தலைவன் வருவான். தோழி மட்டும் அங்கிருப்பாள். தலைவியின் காதல் பெற்றோருக்குத் தெரிந்தவுடன் வீட்டை விட்டு வெளியே வரமுடியவில்லை. தலைவியுடன் களவு முறையில் இன்பம் துய்ப்பது தவறு. அதனால் தலைவியைத் திருமணம் செய்து கொள்வது நல்லது என்று தோழி கூறுகிறாள். இதனை,

> “தோளிடை முயக்கம் நீயும் வெய்யை...
> மணப்பு அருங்காமம் புணர்ந்தமை அறியார்”[92]

என்னும் அகநானூற்றுப்பாடல் தலைவன் வராவிட்டால் தலைவி உயிர் வாழமாட்டாள். அவளைத் தழுவுதலையே விரும்புகிறாய், ஆகவே மணம் செய்துகொள் என்று கூறுகிறது. களவுக்காலத்தில் சந்தித்த இருவரையும் மணம் செய்துகொள்வதற்குத் தூண்டுவதால் இது களவு மணம் என்றாயிற்று.

தலைவியும் தோழியும் மாறிமாறி தலைவனைப்பற்றி வள்ளைப்பாட்டு பாடுகின்றனர். அதைக்கேட்ட தலைவன் களவு நீட்டிக்காது மணமுடித்தலே சிறந்தது என்று தலைவியின் பெற்றோரிடம் பெண் கேட்கிறான். அவர்களும் மகிழ்ச்சியடைந்து இசைவு தெரிவிக்கின்றனர். திருமணம் பேசி உடன்படும் போது நல்ல இடமும் நல்ல நாளும் பார்ப்பது வழக்கம். குறிஞ்சி நில மக்கள் வேங்கை மரத்தின் கீழிலிருந்து திருமணத்தை முடிவு செய்தனர். வேங்கை பூக்கும் காலத்தில் திருமணம் நடத்துவது அவர்தம் மரபு என்பதை,

“நன்று ஆகின்றால் - தோழி! நம் வள்ளையுள்
ஒன்றி நாம் பாட மறைநின்று கேட்டு அருளி
மன்றல் வேங்கைக் கீழ் இருந்து
மணம் நயந்தனன்”[93]

எனக் கலித்தொகை கூறுகிறது. தலைமகன் மறைந்திருந்து வள்ளைப்பாட்டைக் கேட்டதனால் களவு வெளிப்படும் முன்பே திருமணம் செய்துகொண்டான் என்பதை அறியமுடிகின்றது.

சங்ககாலத்தில் திருமணம் ஆகாத பெண்கள் கால்களில் சிலம்பு அணிந்திருந்தனர். திருமணம் முடிந்த பிறகு சிலம்பை அகற்றுவர் என்பதை,

“நும்மனைச் சிலம்பு கழீஇய யரினும்
எம்மனை வதுமை நன்மணம் கழிக”[94]

என்று ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது. இதன் மூலம் திருமணமாகாத பெண்கள்தான் சிலம்பு அணிவார்கள் என்பது தெரிகிறது. பிற்காலத்தில் திருமணமான பெண்கள்தான் சிலம்பு அணிந்தனர்.

**மரபுவழித் திருமணம்**

பெண்ணின் பெற்றோர் மணமகனையும் ஆணின் பெற்றோர் மணமகளையும் தேர்ந்தெடுத்துத் திருமணம் முடிப்பது மரபுவழித்திருமணம் ஆகும்.

“நேரிறை முன்கை பற்றி நுமர்தர
நாடறி நன்மணம் அயர்கம்”[95]

என்னும் பாடல் சுற்றத்தார் பலரும் அறிய திருமணம் செய்து வைப்பதையே நன்மணம் என்று கூறுகிறது.

பாரிவள்ளல் இறந்த பிறகு அவரின் மகள்களைத் திருமணம் செய்து கொள்ளுமாறு அரசன் விச்சிக்கோவிடமும், இளங்கோ வேளிடமும் கபிலர் வேண்டுகிறார். பாரி இறந்த விட்டதால் அவரது பெண்களை எனது மகள்களாக நினைத்து மகட்கொடை புரிதற்குத் தகுதியுடையேன் என்று கூறுகிறார். “பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தில் களவின் வழித் திருமணம் போற்றப்பட்டு ஆதரிக்கப்பட்டது போலவே தமர் கொடுப்பக் கொள்ளும் மரபும் பழைமையுடையதாய்ப் போற்றப்பட்டது”[96] என்று சசிவல்லி கூறுவதன் மூலம் அக்காலத்திலும்

மரபுவழித்திருமணத்தையும் களவு வழித்திருமணத்தையும் ஏற்றுக்கொண்டனர் என்பதை அறியமுடிகின்றது.

**மடல் மணம்**

தலைவன் தான் விரும்பிய பெண்ணை அடைய முடியாத போது பனைமரத்தின் கருக்கினால் குதிரை செய்து அதன் மீது அமர்ந்து தலைவியின் உருவத்தை வரைந்து கையில் பிடித்துக் கொண்டு பலரும் இருக்கின்ற ஊரின் நடுவில் உள்ள நாற்சந்தியில் பூளைப்பூ, ஆவாரம்பூ, எருக்கம் பூ ஆகியவற்றால் தொடுத்த மாலையை அணிந்து நிற்பான்.

தலைவன் எண்ணம் நிறைவேறுவதற்குச் சில நாட்கள் ஆகும். பனங்கருக்கின் மீது நிற்கும் போது கால்களிலிருந்து குருதி வழியும் பார்ப்பவர்கள் இரக்கப்பட்டு அவன் காதல் கொண்ட பெண்ணின் பெற்றோரிடம் பேசித் திருமணத்தை நடத்தி வைப்பார்கள் என்பதை,

‘‘மணிப்பீலி சூட்டிய நூலொடு மற்றை
அணிப்பூளை, ஆவரை எருக்கொடு பிணித்து யாத்து
துன்பத்தில் துணையாய மடல்இனி இவள்பெற’’[97]

என்னும் கலித்தொகைப் பாடல் மூலம் அறியலாம். தன்னுடைய காதலியைக் கரம் பிடிக்க மடல் ஏறுதல் சங்ககாலத்தில் பின்பற்றப்பட்டது என்பதை அறியமுடிகிறது.

**பரிச மணம்**

பெண்ணின் பெற்றோர், தன்மகளைப் பெண் கேட்டு வருபவரிடம் பொன், நிலம் போன்றவற்றைப் பரிசத் தொகையாகப் பெற்றுக் கொண்டு திருமணம் செய்து வைப்பார்கள் என்பதை,

‘‘உறுமெனக் கொள்குநர் அல்லர்
நறுநுதல் அரிவை பாசிழை விலையே’’[98]

என்னும் அகநானூற்றுப் பாடல் எடுத்துரைக்கின்றது. சங்க காலத்தில் பால்ய விவாகம் நடைபெற்றதைக் காண முடிகிறது. திருமணத்தை உறுதி செய்த பிறகு

மணமகனைப் பிடிக்காவிட்டால் பெற்றோர் பெண் தருவதற்கு மறுத்து பரிசத்தொகையையும் அவர்களிடம் கொடுத்து விடுவார்கள்.

இன்றைய அறிவியல் யுகத்திலும் சில சமூகங்களில் பெண் பூப்படைந்தவுடன் அவளுக்கு மணமகனை உறுதி செய்து பிறகு திருமணம் செய்கின்றனர். அவள் பெற்றோரின் முடிவுக்குக் கட்டுப்பட்டு வேறு வழி தெரியாமல் திருமணம் செய்து கொள்வதும் மறுப்பதும் உண்டு.

சங்க காலத்தில் பரிசம் கொடுத்த வழக்கம் இன்றும் பின்பற்றப்பட்டு வருவதைக் காண முடிகிறது.

**ஏறுதழுவுதலும் திருமணமும்**

காளையை அடக்கி வெற்றி பெற்ற வீரம் பொருந்திய ஆண்மகனைத் திருமணம் செய்து கொள்ள சங்க காலப் பெண்கள் விரும்பினர். காளைகளை அதிகமாக விரும்பி வளர்த்தவர்கள் ஆயர்கள். அவர்கள் இயல்பாகவே ஆடு மாடுகளை மேய்த்து வந்ததால் காளையை வளர்ப்பதிலும் விருப்பம் கொண்டிருந்தனர். ஏறு என்னும் சொல் காளையைக் குறிக்கின்றது. தழுவுதல் என்பது அடக்குதல் என்று பொருள்படும்.

முல்லை நிலமக்கள் தங்கள் வீட்டில் பெண் குழந்தைகள் பிறந்தவுடன் காளைக் கன்று ஒன்றைத் தனியே பிரித்து ஏறு தழுவுதலுக்காக வளர்ப்பார்கள். பெண் பருவம் எய்தியவுடன் அந்தக் காளையை அடக்கி வெற்றிபெரும் வீரனுக்கு மணம் முடித்து வைப்பார்கள். அப்பெண்ணுக்குக் காதலன் இருந்தால் அவனும் ஏறுதழுவுதலில் பங்கேற்று வெற்றி பெற்றுக் காதலியைப் பரிசாக மணமுடிப்பான் என்பதை,

“வெள்ஏற்று ஏருத்து அடங்குவான்...
காரிகதன் அஞ்சான் கொள்பவன் ஈரரி
நறைவலஞ் செயவிடா இறுத்தன ஏறு”[99]

என்னும் கலித்தொகைப் பாடல் குறிப்பிடுகிறது. தான் விரும்பிய பெண்ணை மணப்பதற்கு ஏறுதழுவுதலை இளைஞர்கள் வாய்ப்பாகக் கருதித் தன் வீரத்தை

வெளிப்படுத்தினர். ஏறுதழுவுதலில் காதலும் வீரமும் இணைந்து வெளிப்படுகிறது. இன்று ஏறுதழுவதலை ஜல்லிக்கட்டு, காளை விரட்டு, மஞ்சு விரட்டு என்றும் கூறுகின்றனர்.

**போர் மணம்**

சங்க காலத்தில் ஒருவன் தான் விரும்பும் பெண்ணை மணம் முடிப்பது கடினம் என்ற நிலை வரும் போது, போரில் வெற்றி பெற்று மணம் செய்து கொண்டான் என்பதை அறிய முடிகின்றது.

அரசன் மாற்றரசன் மகளைக் கண்டு காதல் வயப்படுகிறான். முறையாகச் சென்று பெண் கேட்கிறான். பெண் கொடுக்க மறுக்கும் போது போர்தொடுத்து வெற்றி பெற்று மகளை மணம் முடிப்பேன், தோல்வியடைந்தால் வேல் பாய்ந்த உடலோடு இறந்துபடுவேன் என்று கூறுகிறான். இதனை,

"சுணங்கு அணி வனமுலை அவளொடு நாளை
மணம்புகு வைகல் ஆகுதல் ஒன்றோ-
நீள் இலை எ.்.கம் மறுத்த உடம்பொடு
வாரா உலகம் புகுதல் ஒன்று"[100]

என்னும் புறநானூற்றுப் பாடல் எடுத்துரைக்கின்றது. சங்ககாலத்தில் பெண்ணுக்குகாகப் போர் நிகழ்ந்துள்ளதைக் காண முடிகிறது.

.

**பலதார மணம்**

குழந்தை பிறக்காத காரணத்திற்காக முதல் மனைவியின் இசைவோடு இரண்டாவது திருமணம் செய்து இல்லத்திற்கு அழைத்துவருவான். முதல் தாரமும் முழுமனதுடன் அவர்களை வரவேற்று உபசரிப்பாள் என்பதை,

"பினமுறை ஆக்கிய பெரும்பொருள்வதுவைத்
தொல்முறை அனைவி எதிர்ப்பா டாயினும்"[101]

என்று தொல்காப்பியமும்,

"தண்மழை தழீஇய மாமலை நாட

நன்மனை யருங்கடி யயர”[102]

என்று ஐங்குறுநூற்றுப்பாடலும் விளக்குகின்றன. தனக்குக் குழந்தை இல்லாத துன்பத்தை அவள் தீர்த்து வைப்பாள் என்று கணவனின் இரண்டாவது திருமணத்திற்குப் பெண்கள் சம்மதித்தனர் என்பதைக் காணமுடிகிறது.

குழந்தை இல்லாத காரணத்திற்காகப் பெண்ணை மட்டும் குற்றம்கூறி மறுமணம் செய்துகொண்டனர். குழந்தை இன்மைக்கு ஆடவனே முக்கியக் காரணம் என்பதை இன்றைய சமூகமே மறுதலிக்கின்ற போது, சங்க கால மக்கள் மறுமணம் புரிந்ததில் வியப்பில்லை.

வானில் சந்திரன் உரோகிணியைச் சேரும் நல்லநாளில் அருந்ததி நட்சத்திரத்தைப் பார்த்துத் தீவலம் செய்து கொண்டனர். அருந்ததி பார்ப்பதின் நோக்கமே அவளைப் போலக் கற்புடையவளாக வாழ வேண்டும் என்பதற்காகத்தான். இன்றும் சில சமூகங்களில் இச்சடங்கு நடைமுறையில் உள்ளது.

**குடும்ப மதிப்புகள்**

சமுதாயம் பல்வேறு அமைப்புகளையும், படிநிலைகளையும் கொண்டது. அரசு, மதம், குடும்பம் எனச் சமுதாயத்தின் அடிப்படைக் கூறுகள் பலவாறாகப் பகுக்கப்படுகின்றன. பல்வேறு வகைப்பட்ட பரிமாணங்களைப் பெற்று வளர்ந்தது குடும்ப அமைப்பாகும்.

மனித வாழ்வில் சிறப்பானதாகவும் முழுமையானதாகவும் திகழ்வது குடும்பம் என்ற அமைப்பாகும். தனி மனிதனுடைய ஒழுக்கத்தால் குடும்ப அமைப்புச் சீரமைக்கப்படுகிறது. நல்ல குடும்பத்தைப் பல்கலைக்கழகத்துடன் ஒப்பிட்டுக் கூறுவது மிகப் பொருத்தமானதாகும். மனிதவளம் மேம்படும் இடங்களில் மனிதனைப் பக்குவப்படுத்தும் இடமாகவும் திகழ்வது பல்கலைக்கழகங்கள்; சுய அனுபவங்களை உலகியலறிவோடு பொருத்திப் பார்த்து வாழ்வியல் நடைமுறைகளைக் கற்றுத்தரும் மாபெரும் நிறுவனமான பல்கலைக்கழகத்திற்கு நிகரானது குடும்ப அமைப்பு.

ஒழுக்க நெறிகளையும், உயர் விழுமியங்களையும் ஒருவனுக்குள் புகுத்தி அவனை நல்வழியில் கவனம் செலுத்தி, பண்பில் முழு மனிதனாக்கி, அவனால்

சமூகம் பக்குவப்பட்டு, உலகத்தின் தேவைகளை உணர்த்திச் செயல்பட வைப்பது குடும்பம் ஆகும்.

சங்க இலக்கியங்களில் ‘குடி’ என்னும் சொல்லே குடும்பத்தைக் குறிக்கும் சொல்லாக ஆட்சிபெற்றுள்ளது. இந்தச் சொல் குலம், குடிமக்கள், ஊர், குடிமகன், குடியிருப்பு எனும் பொருட்களுடன் குடும்பம் எனும் பொருளினும் ஆட்சிபெற்றுள்ளது என்பதை,

‘‘ஒரு குடிபிறந்த பல்லோர்’’[103]

‘‘வீழ்குடி யுழவன் வித்துண்டா அங்கு’’[104]

‘‘இல்லடு கள்ளின் சில்குடிச் சீறுர் - இளவேட்டனார்’’[105]

என்னும் புறநானூற்றுப் பாடல்களில் குடி எனும் சொல் குடும்பம் எனும் பொருளிலேயே கையாளப்பட்டுள்ளன.

இல்லறம் பேணும் குடும்பம் நிகழ்காலம் சார்ந்த வாழ்க்கையாகவே இருப்பதாகப் புறநானூறு எடுத்துக்காட்டியுள்ளது. போர் சார்ந்த வாழ்க்கையாக இருப்பதால் அவர்கள் வாயிலாக வெளிப்பட்ட பண்புநெறிகள் புறத்தோடு தொடர்புடையதாகத் திகழ்கின்றன. சங்க கால மக்கள் வாழ்வில் கடைப்பிடிக்கப்பட்ட குடும்ப உயர்பண்பு நெறிகள் இக்காலத்திற்குத் தேவை. இயந்திர வாழ்க்கை வாழும் மனிதன் உணர்வுகளையும், பண்பாட்டு மரபுகளையும் இழந்து வாழ்வதனாலேயே குடும்பம் என்ற அமைப்பின் உள்நோக்கம் உடைக்கப்படுகின்றது. விருந்தோம்பல், பகுத்துண்ணும் பண்பு, கணவன் மனைவியின் உள்ளம் பரிதல், கூட்டுணர்வு மற்றும் நேசிக்கும் பக்குவம் இவையே மனிதனின் மேம்பாட்டை உயர்த்தி நிற்கும் என்பதில் ஐயமில்லை.

**இல்வாழ்க்கை**

கணவன் மனைவி மேற்கொள்ளும் அறம், பொருள், இன்பங்களாலேயே இல்வாழ்க்கைச் சிறப்புறுகின்றது என்பதைத் தொல்காப்பியம் பின்வருமாறு குறிப்பிடுகின்றது.

‘‘நன்னெறிப் படரும் தொன்னலம்’’[106]

சோழன் நலங்கிள்ளிக்கு முதுகண்ணன் சாத்தனார் அறம், பொருள், இன்பம் ஆகியவற்றின் பெருமையை,

"................அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்
ஆற்றும் பெருமநின் செல்வம்
ஆற்றாமைநிற் போற்றா மையே"[107]

என்னும் வரிகளில் உணர்த்துகின்றார். உன் செல்வம் அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றும் செய்வதற்கு உதவுதல் வேண்டும். இவற்றைச் செய்யாவிட்டால் மக்கள் யாக்கையிற் பிறந்தும் பயனில்லாப் பிறப்பாக அமைந்து பொல்லாங்கு விளையும் என்று கூறுகின்றார்.

அன்பு என்பது அனைத்து அறங்களுக்கும் அடிப்படையானதாகும். இல்வாழ்க்கை என்பது மனிதன் பக்குவப்படும் தளம் என்பதால் பல துன்பங்கள் வந்து சேர்வது இயற்கை.

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது"[108]

என்பது வள்ளுவரின் இல்லறக் கோட்பாடு. இல்வாழ்க்கையின் பயனாகப் பிறர்மீது செலுத்தும் அன்பும், அவர் நலனில் அக்கறை கொள்ளும் உயர் குணமாகிய அறமும், சிறந்த பயன் என்று வள்ளுவர் கூறுகின்றார்.

மனிதன் வெறும் ஆசைகளை மனதில் கொண்டு தற்காலிக மகிழ்ச்சிக்காகக் காலத்தைச் செலவு செய்து இம்மகிழ்ச்சியே முழுதென்று எண்ணி வாழத்தலைப்படுகின்றான்.

"அதள் எறிந் தன்ன நெடுவெண் களரின்
ஒருவன் ஆட்டும் புல்வாய் போல
ஓடி உய்தலும கூடும்மன்
ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே"[109]

என்னும் புறநானூற்றுப் பாடல் தனிமனித, குடும்ப வாழ்க்கையையும் எடுத்தியம்புகின்றது. வாழ்வில் அகப்படாத மனிதனை ஆசைகளும், கனவுகளும்

துரத்திக் கொண்டு செல்லும் என்ற உள்ளார்ந்த பொருளையே சுட்டுகின்றன. குடும்ப வாழ்விலும் மற்றவரோடு கூடி வாழும் வாழ்க்கையிலும் சக மனிதரின் உணர்வுகளையும், சுக துக்கங்களையும் பகிர்ந்து கொள்ளும் மனப்பக்குவம் பெறப்படுகின்றது. இல்வாழ்க்கையில் செய்யும் சிறந்த அறமாக விருந்தோம்பல் இடம்பெற்றிருக்கின்றது.

**கற்பு**

கற்பாவது தலைவனுக்குத் தலைவியை அவளுடைய பெற்றோர்கள் உரிய சடங்குகளோடு திருமணம் புரிந்து கொடுப்பது எனத் தொல்காப்பியம் கூறுகிறது.

> ‘‘கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்’’[110]

மனைவிடம் கற்பென்னும் கலங்கா நிலைமை ஏற்படுமாயின் பெண்மையினும் மேற்பட்டன வேறு எவையும் இல்லை. இதனை,

> ‘‘பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
> திண்மை யுண்டாகப் பெறின்’’[111]

எனத் திருக்குறள் கூறுகின்றது. தெய்வத்தைத் தொழாத பெண்ணும் கணவனையே தெய்வமாக வணங்குகின்றாள். மழையைப் பெய் என்று சொல்ல பெய்யும் என்பதனை,

> ‘‘தெய்வந் தொழாஅள் கொழுநண் தொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யும் மழை’’[112]

என்று திருவள்ளுவர் கற்பின் மேன்மையை விளக்குகிறார். பல அரிய பண்புகள் படைத்த ஒருவனும் ஒருத்தியும் திருமணம் புரிந்து கொண்டு இல்லறம் நிகழ்த்துவதும், இல்லறத்தை மேற்கொண்ட மனைவி கணவனைத் தெய்வமாகக் கொண்டு அவன் சொற்படி ஒழுகுவதும் கற்பெனத் தெளிவாகிறது.

கணவன் தன்னைப் பிரிந்திருக்குங்காலத்து மனைவி பிரிவுத்துன்பத்தால் தன்னை எவ்வகையிலும் ஒப்பனை செய்து கொள்ளாமை கற்பு மேம்பாட்டை உணர்த்துவதாகும்.

இத்தகைய தலைசிறந்த கற்பினைப் புறநானூறு ‘தெய்வக் கற்பு’ என்று போற்றுகிறது. பாண்டியன் இலவந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறன் தமக்குப் பரிசில் தரக் காலம் நீட்டித்ததைப் பொறுக்காமல் வடம வண்ணக்கன் பேரிசாத்தனார் மனம் வருந்தி உரைக்கும் போதும், அம்மன்னன் மனைவியின் தெய்வக் கற்பினை,

“கடவுள் சான்ற கற்பிற் சேயிழை”[113]

எனப் போற்றுகிறார். தெய்வத்தன்மை நிறைந்த கற்பு வாய்ந்த மனைவியை அம்மன்னன் பெற்றிருந்தும் புலவர்களுக்குப் பரிசில் வழங்கும் பண்பு அவனிடம் இல்லையே என்பதனை இவ்வடி குறிப்பாக உணர்த்துகின்றது. இச்சான்றுகளைப் பார்க்கின்ற பொழுது மனைவிக்குரிய மாண்புகளைத் தொல்காப்பியம் வழிநின்று உணர்த்துவதை அறியமுடிகிறது.

தமிழ் இலக்கியத்தைப் பொறுத்த வரையில் கற்பு என்ற சொல் ஒழுக்கம் என்ற பொருளிலேயே பெரும்பாலும் கையாளப்பட்டுவருகிறது.

முதன்முதலில் தொல்காப்பியம்தான் கற்பியல் என்றொரு இயல் வகுத்து, கற்புப் பற்றிய செய்திகளைக் கூறியுள்ளது. பெண்களுக்குரிய பண்புகள் பற்றித் தொல்காப்பியர்,

“அச்சகம் நாணும் மடனுமுந் துறுத்ல்
நிச்சமும் பெண்பாற் குரிய என்ப”[114]

என்று வைக்கிறார். அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு, பேதமை, நிறை (கற்பு) என்பன பெண்களுக்குரிய பண்புகளாகும். இப்பண்புகளுள் சிறந்து தோன்றுவது கற்புடைமையே ஆகும் என்பதை,

“உயிரினுஞ் சிறந்ததன்று நாணே நாணினுஞ்
செயிந்தீர் காட்சிக் கற்பு சிறந்ததன்று”[115]

என்றும் அடிகள் விளக்குகின்றன. மகளிர்க்கு உயிரினும் நாணம் சிறப்புடையதாகவும், அந்நாணினும் குற்றம் தீர்ந்த கற்பு நன்றென்று மனத்தில் காணுதல் சிறந்தது என்பதை உணர இயலும். காரிகையர்க்கு இன்றியமையாத கற்பென்னும் திண்மை மூவகைப்படும். அவை, தலைக்கற்பு, இடைக்கற்பு, கடைக்கற்பு என்பனவாம்.

**தலைக்கற்பு**

தன் கணவன் இறந்தான் என்ற செய்தியைக் கேட்டவுடன் மனைவி உயிர்நீப்பாளாயின், அது தலைக் கற்பு எனப்படும். இதுவே தொல்காப்பியத்தில் காணப்பெறும் காஞ்சித் திணையில் வந்துள்ள மூதானந்தம் என்னும் துறையாகும். இது முதுமை – உழுவவன்பு பற்றிய ஆனந்தம் - சாக்காடு என்று பொருள்படும். கணவனிடத்தே உள்ள மிக்க அன்பின் காரணத்தால் மனைவி உடனே உயிர்நீப்பதால் இது மூதானந்தம் என்ற பெயர் பெற்றது. இத்துறைக்குச் சான்றாகச் சிலம்பினால் நிகழ்ந்த நிகழ்வைக் கூறலாம்.

கோவலன் முறை தவறிக் கொல்லப்பட்டதனை அறிந்த நெடுஞ்செழியன், தன் செங்கோல் வழுவியது கண்டு, மனம்பொறாது அரியணையிலிருந்து வீழ்ந்து உயிர்விடுகின்றான். அவன் மனைவி கோப்பெருந்தேவிந்தேவி அவனுடன் இறந்துவிடுகின்றாள். இதனை,

‘‘மன்னவன் செல்ழிச் செல்க யானெனத்
தன்னயிர் கொண்டவ னுயிர்தே டினள்போல்
பெருங்கோப்பெண்டு ஒருங்குடன் மாய்ந்தனள்’’[116]

என்று சிலப்பதிகாரம் கூறுவதன் மூலம் கற்புடைய மனைவி கணவன் இருந்த அக்கணமே உயிர் நீத்தலையே பெருமையாகக் கருதினாள் என்பதை அறியமுடிகின்றது.

**இடைக்கற்பு**

இடைக்கற்பாவது, கணவன் இறந்தபோது, மனைவியும் அவனது ஈமத்தீயில் குதித்து உடன் இறத்தல். இது தொல்காப்பியத்தில் கற்புடை மனைவி தன் கணவன் இறந்தபோது அவனொடு எரிபுகுதல் புறங்காட்டுநிலை அல்லது பாலைநிலை என்று கூறப்பட்டுள்ளது. இப்பாலை நிலையும் காஞ்சித்திணையில் ஒரு துறையாகும். இத்துறைக்குப் பூதப் பாண்டியன் தேவியார் பாடிய புறநானூற்றுப் பாடல் சான்றாகும்.

‘‘செல்கெனச் சொல்லா தொழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே!’’[117]

என்னும் பாடல் பூதப் பாண்டியன் இறந்தபோது அவன் தேவி பெருங்கோப்பெண்டும் ஈமத்தீயுள் பாய்ந்தாள் என மொழிகிறது. அரசி இறக்கப் புகும்போது சான்றோர் சிலர் தீப்பாயவிடாது தடுக்க முயன்றனர். அதற்கு நீரிட்ட சோற்றைக் கையால் பிழிந்து, எள்ளுடன் புளிசேர்த்துச் சமைத்த வேளையிலைக்கறியோடு கலந்து அதனை உணவாக உட்கொண்டு பருக்கைக் கற்களைப் பரப்பிப் பாயின்றிப் படுத்து உறங்கும் கைம்மை நோன்பைப் பின்பற்றி வாழ்வதற்கு எனக்கு விருப்பமில்லை. முறுக்குண்ட காய்ந்த விறகுகளால் மிக்க நெருப்பினை மூட்டிய ஈமப்படுக்கை உங்களுக்கு அச்சத்தைத் தரலாம். கணவனை இழந்த பிறகு தீயும் பொய்கையும் ஒன்றே என்று கூறித் தீப்பாய்ந்தாள். சங்க காலத்தில் கணவனை இழந்த பிறகு மனைவி படும் துன்பம் தீயில் குதித்து உயிர்துறத்தலை விடவும் கொடியது என்பதைப் புறநானூறு சுட்டுகிறது.

**கடைக்கற்பு**

கணவன் இறந்த பின் மனைவி கைம்மை நோன்பு பூண்டு தவங்கிடத்தல் கணவனோடு மறுபிறப்பிலும் கூடி, வாழ நினைப்பது கடைக்கற்பாகும். கணவனை இழந்த மனைவி தவம்புரிந்து தொழுவதைத் தாபதநிலை என்பர். இதுவும் காஞ்சித்திணையைச் சேர்ந்த ஒரு துறையாகும்.

“கூந்தல் கொய்து குறுந்தொடி நீக்கி
அல்லியுணவின் மனைவியோடு”[118]

என்ற புறப்பாட்டுப் பண்டைக்காலத்தில் கைம்மை நோன்பு பூண்ட மகளிர் கூந்தலை நீக்கிவிடுதலும், அணிகலன்களைக் களைதலும் மரபாகும் என்பதை உணர்த்துகின்றது.

சங்கப் பாடல்கள் மகளிரின் கற்புநிலையை மிகச் சிறந்த முறையில் புலப்படுத்துகின்றன. கணவனைத் தெய்வமாகத் தொழுது வணங்குவது பத்தினிப் பெண்ணின் கற்பொழுக்கமாகக் கற்பிக்கப்பட்டுள்ளது.

**ஆண்களின் கற்பு**

கற்பு நெறியுடைய பெண்ணுக்கான இலக்கணத்தைத் தொல்காப்பியமும், சங்க இலக்கியங்களும் வரையறுத்துள்ளன. ஆனால், ஒரு ஆண் எவ்வாறு இருக்க

வேண்டும் என்ற வரையறை சங்க இலக்கியங்களில் பெருமளவில் காணப்படவில்லை. ஆனால் ஔவையார் பாடிய பாடலில்,

"எவ்வழி நல்வர் ஆடவர்
அவ்வழி நல்லை; வாழிய நிலனே!"[119]

என்ற கருத்துச் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. எந்த நிலத்தில் ஆடவர் ஒழுக்கத்தோடு வாழ்கிறார்களோ அந்த நிலமே நல்லநிலம் என்று ஆடவரின் கற்பு நிலைக்கு வரையறை கொடுக்கப்பட்டுள்ளது. பண்டைத் தமிழர்கள் பலதார மணம்புரிந்து வந்தனர். செல்வந்தர்களும், சிறந்த வீரர்களும் பரத்தையர்களுடன் சேர்ந்து வாழ்ந்தனர். இதற்காகவே பரத்தையர் சேரி இருந்தது. கணவன் கணிகையர் வீட்டிற்குச் செல்வதை அதிக எண்ணிக்கையிலான மருதத்திணைப் பாடல்கள் சுட்டிக்காட்டுகின்றன.

"ஆங்க விருந்து எதிர்கொள்ளவும் வாய்ச்சூள் அஞ்சவும்
மாய மகிழ்நன் பரத்தமை
நோவேன் தொழி!கடன் நமக்கு எனவே"[120]

என்ற மருதக்கலி பாடல் தலைவி இல்லறக் கடமைகளை எண்ணிக் கணவன் பரத்தையை நாடிச் சென்று வந்தாலும் அமைதி காக்கும் பொறுமையைச் சுட்டுகின்றது.

**குழந்தைச்செல்வம்**

"குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்"[121]

என்று குழந்தைகளின் மழலைச் சொல்லைத் திருவள்ளுவர் பெருமைப்படுத்துகிறார். புறநானூறு பல்வகைச் செல்வம் பெற்றுப் பலரோடு உண்ணும் உடைமை இருந்த போதிலும்,

"குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை யடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை"[122]

எனும் பாடல் குழந்தை இல்லாதவர்களுக்கு வாழ்வானது பெரும் குறையாகவே இருக்கும் என்பதைச் சுட்டுகின்றது.

மகவை நன்முறையில் நெறிப்படுத்தி வளர்ப்பதில் சங்ககால மகளிர் சிறந்து விளங்கினர். இதனை ஔவையாரின் புறநானூற்றுப் பாடல்வழி அறியலாம். அஞ்சியின்மேல் பேரன்பு கொண்டிருந்த ஔவையார் ஒருமுறை பொருட்டெழினியைக் கண்டார். இவை வரம்பு கடந்த வழித்தீங்கு பயக்கும் என்பதனைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

''அலர்பூந் தும்பை யம்பகட்டு மார்பின்
திரண்டு நீடு தடக்கை யென்னை யிளையோர்............
உறையுள் முனியுமவன் செல்லு மூரே''[123]

என்னும் பாடல் மகளிரது கண்கள் தாக்கும் உடல் வனப்பும் பகைவர்கள் அஞ்சும் வீரமும் கொண்டவன் என்று கூறுகிறது.

உலகிற் பிறந்த மகன், முதன்முதல் தன் தந்தையைக் காணும்போது அவன் நெஞ்சில் போர்க்கோலமும், போர் மறமும் நன்கு பதிய வேண்டுமென்று சங்க கால மகளிர் எண்ணினர். எனவே அதியமான் தன் மகன் பொருட்டெழினியைக் காணவரும்போது போர்க்கோலம் பூண்டு போர்க்குரிய உடையணிந்து, சான்றோர் சூழச்சென்று கண்டதாக ஔவையார்,

''வரிவயம் பொருந வயக்களிறு போல............
சிறுவனை நோக்கியுஞ் சிவப்பானவே''[124]

என்று பாடியுள்ளார். அரசர் போர் செய்வதைப் பெருமையாகக் கருதினர் என்பதை உணரமுடிகின்றது.

பெண்ணின் தலையாயக் கடன் பிள்ளை பெறுவது; அதுவும் ஆண்மகனைப் பெற்றுத் தருவது அப்போதுதான் அவளை மூதின்மகளாகவும், வீரத்தாயாகவும் கருதி புகழ்வார்கள் என்பதைப் புறநானூற்றுப் பெண்பாற் புலவர்களின் பாடல்கள் வாயிலாக உணரமுடிகின்றது.

“ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே;
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே;
வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே…
களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே”[125]

என்று பெண்பாற் புலவரான பொன்முடியாரும் பெண்ணின் தலையாயக் கடன் பற்றிக் கூறுகிறார்.

குடும்பம் என்பது கணவன் மனைவி என்ற இரு உறவுகளினால் அமைவுறுகிறது. இது காலப்போக்கில் இரத்த உறவுடைய மகன், மகள் பேரன், பேத்தி எனும் நிலைகளில் விரிவடைந்தது. சங்க இலக்கியத்தில் அகத்திணைப் பாடல்களில் தவைன், தலைவி, இருவரே முதன்மை உறுப்பினர்களாகத் திகழ்ந்தனர்.

“புதல்வன் நடுவன னாக நன்றும்
இனிது மன்றவர் கிடக்கை”[126]

“புதல்வற் கவைஇய தாய்புறம் முயங்கி
வாழ்நுத லரிவை மகன்முலை யூட்ட”[127]

“தனவன் சிறுபுறம் கவையினன்”[128]

என மிகப் பெரும்பான்மையாக மகன் பற்றிய குறிப்புகளே இடம்பெற்றுள்ளன. இவ்வுலகப் புகழையும் இறப்புக்குப் பின் மறுமையுலகப் பேற்றையும் தரும் இயல்புடையதும், செம்மையானதும் பகைவரும் விரும்பும் புதல்வரைப் பெறுதலே ஆகும். சங்ககால வாழ்க்கையில் பெண்குழந்தை பற்றிய குறிப்பு மிகுதியாக இடம்பெறவில்லை.

“நள்ளென் கங்குற் கள்வன் போல
அதன்துறை யூரனும் வந்தனன்
சிறந்தோன் பெயரென் பிறந்த மாறே”[129]

என்னும் நற்றிணைப் பாடல் வரிகள் ஆண்குழந்தை பற்றிக் கூறுகின்றது. சங்கப் பாடல்கள் சுட்டும் தலைவன் தலைவி எனும் இளந்தலைமுறை பற்றிய செய்திகள் அனைத்தும் காதலைப் பாடுவனவாகவே உள்ளன. குடும்ப உறவுகள் பற்றிய விரிவான செய்திகள் இடம்பெறாத நிலையிலும் மக்களின் வாழ்க்கை முறை குறித்துச் சிந்திக்கத் தவறவில்லை.

**மகளிரும் பண்பாடும்**

பழந்தமிழ்ப்பெண்கள், தங்கள் குடிப்பெருமையைக் காப்பதிலே கண்ணும் கருத்துமாக இருந்தனர். குடும்பத்தின் பரம்பரைப் பண்பாடு அவர்களிடம் குடிகொண்டிருந்தது. இதற்கு மறக்குடி மகளிர் பண்பைப்பற்றிக் கூறும் பழம்பாடல்களே சான்றாகும்.

வீரர் குடியிலே பிறந்த பெண்கள், தங்கள் பிள்ளைகளைப் போர்க்களத்துக்குத் துணிவுடன் அனுப்புவார்கள், அவர்கள் புறங்காட்டாமல் போர்புரிய வேண்டும் என்றே விரும்புவார்கள், மார்பில் காயம்பட்டுப் மடியும் மகனைத்தான் அவர்கள் பாராட்டுவார்கள். தம் மக்கள் புறங்காட்டி ஓடிவந்தனர் என்று கேட்டால் அவர்கள் அவமானம் அடைவார்கள், என்பதை,

''சிற்றில் நற்றூண் பற்றி நின்மகன்
யாண்டு ஔனோ என்று வினவுதி., என் மகன்
யாண்டுளன் ஆயினும் அறியேன்., ஓரும்
புலி சேர்ந்து போகிய கல் அளை போல
ஈன்ற வயிறோ இதுவே;
தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே''[130]

என்னும் புறநானூற்றுப் பாடல் உணர்த்துகின்றது. சிறிய வீட்டில் உள்ள கல்தூணைப் பிடித்துக் கொண்டு நின்று, உன்மகன் எங்கேயிருக்கிறான் என்று கேட்கின்றாய். என் மகன் எங்குள்ளான் என்பதை அறியேன், புலி கிடந்து எழுந்து போன மலைக்குகை போன்ற வயிறு இது. ஆதாலால் அவன் போர்க்களத்திலேதான் காணப்படுவான். அங்கே சென்று அவனைப்பார் எனக் கூறுகிறாள்.

இப்பாடல் மறக்குடிப்பெண் ஒருத்திக் கூறியது. தன்மகனைப் புலியாகவும், அவனைப் பெற்றெடுத்த தன் வயிற்றைப் புலியுறைந்த குகையாகவும் பெருமையுடன் கூறிக்கொள்கிறாள். எனவே, இப்பாடலின் மூலம் பெண்களின் வீரமனப்பான்மையைக் காணமுடிகிறது.

தாயிடம் உன்மகன் போர்க்களத்திலே புறமிட்டு ஓடினான் என்று சிலர் வந்து கூறினர். உடனே அவள் வாளைக் கையில் எடுத்துக் கொண்டாள். என் மகன்

புறமிட்டு ஓடியிருப்பானாயின், அவன் பாலுண்ட எனது மார்பை அறுத்தெறிவேன் என்று சூள் உரைத்துவிட்டுப் போர்க்களம் புகுந்தாள், அங்கே கிடந்த பிணங்களையெல்லாம் புரட்டிப்பார்த்தாள், தன் மகன் வாளால் சிதைந்து கிடப்பது கண்டு அவனை ஈன்ற காலத்திலும் பெரிதும் மகிழ்ந்தாள். இதனை

''நரம் பெழுந் துலறிய நிரம்பா மென்றோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறின னென்று பலர் கூற...
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே''[131]

என்னும் பாடல் உணர்த்துகின்றது. பெண்கள் தம்முடைய குடிப் பெருமையையும் குலஒழுக்கத்தையும் போற்றி வந்தார்கள் என்பதைக் காணமுடிகின்றது.

ஒரு வேட்டுவப்பெண் குடிசை வாயிலில் தினை உலர்த்தினாள். அண்மையில் ஒரு கலைமான் பெடையொடு கூடுகிறது. அவளது கணவனும் அதனருகே வேட்டையாடிய களைப்பினால் மெய்மறந்து உறங்குகின்றான். இந்நிலையில் தினையைக் கோழி கொத்துகின்றது. இத்தினையைத் தவிர வேறு ஆகாரம் இல்லை. இச்சமயத்தில் கோழியை விரட்ட வேண்டும். ஆனால் அவள் அதனைச் செய்யவில்லை என்பதை,

''கைம்மான் வேட்டுவன் கனைதுயின் மடிந்தெனப்
பார்வை மடப்பிணை தழீஇப் பிறிதோர்
தீர் தொழில் தனிக்கலை திளைத்து விளையாட
மானதட் பெய்த வுணங்குதினை வல்சி
கானக் கோழியோ டிதல் கவர்ந் துண்டென''[132]

என்ற பாடல் உணர்த்துகின்றது. பெண்மானும் ஆண்மானும் இன்பம் நுகர்வது தடைபடும் என அஞ்சி அவள் தினையைத் தின்னும் கானக் கோழியை வெருட்டாது விட்டுவிட்டாள் என்பதை அறிய முடிகிறது. விலங்கினங்களும் தம்மை ஒத்த உணர்வும் இயல்பும் உடையன என நினைக்கும் ஒப்பற்ற மனநிலையை உணரமுடிகிறது.

**விருந்தும் மகளிரும்**

சங்க காலங்களில் வீட்டிற்கு வரும் விருந்தினரை முகங்கோணாமல் வரவேற்று உதவி செய்யும் பண்பு பெண்களிடம் இயற்கையாக அமைந்தது ஆண்கள் எவ்வளவுதான் விருந்தினரை வரவேற்கும் தன்மையுள்ளவராயிருந்தாலும் பெண்களிடம் அக்குணம் இல்லாவிட்டால் பயன் இல்லை. பண்டைத் தமிழ்ப் பெண்கள் விருந்தோம்பும் குணம் படைத்தவராயிருந்தனர் என்பதை,

> ‘‘அழிழ்து அட்டு ஆனாக் கமழ்குய் அடிசில்
> வருநர்க்கு வரையா வசை இல் வாழ்க்கை
> மகளிர் ................................’’[133]

என்னும் பாடல் வழி அறிய முடிகின்றது. அமிழ்தத்தைத் தன் சுவையால் வென்றதும், தெவிட்டாத மணம் கமழ்வதுமான உணவை, விருந்தினருக்கும் குறைவில்லாமல் வழங்குவர். விருந்தோம்பல் தன்மை தமிழ்ப் பெண்களின் பிறவிக்குணம் என்பதை உணர்த்துகிறது.

தமிழ்ப் பண்பாட்டில் விருந்தோம்பல் என்பது நீண்ட பாரம்பரியத்தைக் கொண்டது. மரபுநெறியுடன் பின்னிப் பிணைந்தது. முகந்தெரியாத ஒருவனின் பசிக்கு உணவளிக்கும்போது பண்பாளன் ஆகின்றான். விருந்தோம்பல் என்ற தமிழரின் பண்பாட்டு நிலை பசிக்கு உணவளித்தலில் ஆரம்பமாயிற்று எனலாம். மக்களின் அன்றாட வாழ்வில் குறிப்பாக இன்றைய கிராமங்களில் பழந்தமிழரின் நடை, உடை, உணவு, பழக்கவழக்கங்கள், சிந்தனைகள் முக்கியமாக விருந்தோம்பல் போன்ற பழந்தமிழ்ப் பண்பாடு அழியாது நிலவி வருவது ஒரு தனிச்சிறப்பாகும். சாவா மருந்தெனினும் விருந்தினரைப் புறக்கணித்து உண்ணோம் என்ற தமிழரின் ஆழ்ந்த உள்ளக்கிடக்கையை,

> ‘‘மோப்பம் குழையும் அனிச்சம் முகம்திரிந்து
> நோக்கக் குழையும் விருந்து’’[134]

> ‘‘விருந்து புறத்ததாத் தான்உண்டல் சாவா
> மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று’’[135]

என்ற குறளின் மூலமாக வள்ளுவர் தெளிவுபடுத்துகின்றார்.

“உண்டலாம்ம இவ்வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிது எனத்
தமியர் உண்டலும் இலரே…..”[136]

என்ற புறநானூற்றுப்பாடல் விருந்தோம்பல் குறித்துச் சுட்டிச் செல்கின்றது. இந்தப் பண்பு வாழ்வோடு இயைந்த கலப்பு என்பதை,

“அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலும்
துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை”[137]

எனும் சிலப்பதிகாரப்பாடல் உணர்த்துகின்றது. கண்ணகி எந்த இழப்பையும் அவள் பெரிதாகக் கருதாமல், வாழ்வின் முக்கியத் தேவையான அறவோர், அந்தணர், துறவோர் முதலியோர்க்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யாமையையும். விருந்தினரை உபசரிக்க முடியாமையையும் எண்ணி வருந்தும் இல்லறப் பண்பைக் குறிப்பதாகும். ‘தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடலும்’ என்று கூறுவது ஆண்டாண்டு காலமாய் மூதாதையரின் பண்புநலன்களுள் குறிப்பிடத்தக்கதாகும்.

தமிழர்களின் வாழ்க்கையை உற்றுக்கவனித்தால் விருந்தும், உபசரிப்பும் அவர்தம் பண்புடன் இணைந்த உயர்குணம் என்பது புலப்படும். இல்லத்திற்கு வரும் விருந்தினர்க்குச் சுவையான உணவளித்து விருந்தோம்புவதே பழியற்ற வாழ்க்கை என்பதை,

“வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை”[138]

என்ற புறநானூற்று வரிமூலம் ஊன்பொதி பசுங்குடையார் என்ற புலவர் அறிவுறுத்துகிறார்.

வருவோருடைய மன விருப்பத்தை இல்லத்தார் அறியாமற் போயினும் தம்மால் இயன்றளவு அவர்களுக்கு உணவளித்துத் தன் இல்லின்கண் தங்கிச்செல்லுமாறு கூறும் பண்புள்ளம் கொண்டவர்களாக இருந்தனர் என்பதை.

“சிலைப்பாற் பட்ட முளவுமான் கொழுங்குறை
விடர்முகை யடுக்கத்துச் சினை முதிர் சாந்தம்…

விருந்திறை நல்கு நாட னெங்கோன்முட மோசியார்"[139]

என்ற பாடல் வரிகளால் அறிந்துகொள்ள முடிகின்றது. விருந்தாற்றுவதற்கு ஒரு பொருளும் இல்லையாயினும் தினைக்கதிரில் விதைக்காக வைத்திருந்தவற்றைக் கொண்டு வந்து குற்றி உணவாக்கித் தர அவர்கள் சிறிதும் தவறவில்லை; தயங்கவில்லை; இந்நிகழ்வினை,

"சென்றதற் கொண்டு மனையோள் விரும்பி
வரகுந் தினையு முள்ளவை யெல்லாம்
இரவல் மாக்க ளுணக்காளத் தீர்ந்தெனக்...
சிறிது புறப்பட்டன் றே! இலளே"[140]

என்ற பாடல் வழி அறியலாம். இல்வாழ்க்கையை மேற்கொண்டோர் வரும் விருந்தினர்களுக்குச் சுவைமிக்க உணவளித்து விருந்தோம்பியதோடு அவர்களுக்குப் பரிசுப் பொருள்களும் தந்து உதவும் பண்பும் பெற்றிருந்தனர்.

குறிஞ்சி, முல்லை நிலங்களில் இருந்து மருதம், நெய்தல் நிலங்களுக்கு வந்தவிருந்தினர்களுக்கு அங்குள்ள மக்கள் வாளைமீன், ஆமை, கரும்புத்தேன். செங்கழுநீர் ஆகியவற்றை உணவாகக் கொடுத்து உபசரித்த நிகழ்வினைப் பின்வரும் புறநானூற்று வரிகளால் அறிய இயலும்.

"பெருவிறல் யாணர்த் தாகி அரிநர்
கீழ்மடைக் கொண்ட வாளையு முழவர்
படைமிளிர்ந் திட்ட யாமையு மறைநர்
கரும்பிற் கொண்ட தேனும் பெருந்துறை......
மென்புல வைப்பி னன்னாட்டுப் பொருந"[141]

யாசிப்பவர், இரவலர், புலவர், கலைஞர் எனப் பல படிநிலைகளில் விருந்து போற்றுவது விளக்கப்பட்டுள்ளது. தன்னுடைய தலைவன் போருக்குச் சென்ற போதிலும், இல்லறக் கடமையான விருந்தோம்பல் செய்வதற்கு அவனை எதிர்பார்த்திருப்பவள் இல்லத்தலைவி. தமிழர்கள் தங்களுடைய குடும்பம் வறுமையில் இருந்த போதிலும் மற்றவர்களுக்கு விருந்து போற்றிச் சிறப்பித்துள்ளனர்.

சுற்றம் ஓம்பும் பண்பை மிகுதியாகக் கொண்டிருந்தனர் தமிழர்கள். தன் சொந்தம், தன்னைச் சார்ந்தவர்கள் என்றெண்ணாமல் ஊரில் வாழும் கலைஞர்களை முகம் தெரியாத மனிதர்களை உறவினர்களாக ஏற்று விருந்து போற்றுவது உயர் பண்பாகக் கொள்ளப்பட்டது. இந்த உயர்பண்பு குடும்ப மதிப்பாகக் கொள்வதற்குரியதாகும்.

‘‘இரும்பேர் ஒக்கலொடு ஒருங்கு இனிது அருந்தித்
தங்கினை சென்மோ’’[142]

என்னும் பாடல் உணவைச் சுற்றத்தோடு கூடி உண்டு மகிழ்ந்து தங்கிச் செல்க எனப் பாணருக்கு அறிவுறுத்தப்பட்டது என்று கூறுகிறது. இதுபோன்ற ஒழுக்க நெறிகளைக் காப்பாற்றியதன் விளைவாகவே மனிதனை மனிதன் நேசிக்கும் தோழமை உணர்வும், மனித நேயப்பண்பும் செழித்தோங்கியிருந்தது.

விருந்து போற்றுதல் என்னும் பண்பு பெண்ணை மையமாகக் கொண்டு இயங்குகிறது. குறைவாக இருக்கும் உணவைக் கூட அனைவருக்கும் பகிர்ந்தளிக்கும் பக்குவம் பெண்ணிடம் உள்ளது. வறுமை நிலையிலும் பொருட்களை இரவலர்க்கு மன நிறைவோடு கொடுக்கும் தன்மையை,

‘‘தவச்சிறிது ஆயினும் மிகப்பலர் என்னாள்
நீள்நெடும் பந்தர் ஊண் முறை ஊட்டும்
இற்பொலி மகடூஉப் போல’’[143]

என்று உறையூர் முதுகூத்தனார் வெளிப்படுத்துகின்றார். விரும்தோம்பலின் பயனை அடைந்தவர்களின் நிலையில் இருந்து விருந்து ஏற்பு நிகழ்வைக் கூறும் போது,

‘‘உண்ட நன்கலம் பெய்து நுடக்கவும்
தின்ற நண்பல் ஊன் தோண்டவும்’’[144]

என்னும் புறநானூற்றுப்பாடல் உணவை மீதப்படுத்தி அடுத்த வேளைக்கு வைத்து உண்ணாமல் மீதமானவற்றைப் பசியென்று வந்தவர்க்கு விருந்து போற்றிய சமூக அமைப்பு இருந்தது என்பதனையே அடையாளப்படுத்துகின்றன.

பாணன் உயிருடன் இருந்தபோது வறுமைத்துயர் நீங்கும் அளவுக்குப் பொருள் கொடுத்து உதவுவாள். அவன் இல்லாத நேரத்தில் வந்தவர்களுக்கு

இல்லை என்று சொல்லியனுப்ப மனமில்லாத பாடினி, ஊற்று நீர் தூய்மையாகச் சாடியிலே உள்ளது. முற்றத்திலே புறா, காடை போன்றவை உண்பதற்காகச் சமைத்த இணைச்சோறும் இருக்கின்றன. சுட்ட முயல் இறைச்சி உள்ளது. அதையாவது தருகிறேன் இங்கு இருந்து உண்டு செல்வீராக! என்று அன்போடு அழைக்கின்றாள் என்பதை,

''முயல் சுட்டவாயினும் தருகவோம் புகுதந்து
ஈங்கு இருந்தீமோ முதுவாய்ப் பாண''[145]

என்ற பாடல் சுட்டுகிறது. கணவன் இல்லாதபோதும் மற்றவர்களுக்கு உதவும் மனிதநேயம் கொண்ட மாண்பை நமக்குக் காட்டுகிறார்.

நக்கீரர் ஒருமுறை பெருஞ்சாத்தன் என்பவரைக் காண்பதற்குச் சென்ற போது நன்கு வரவேற்று சீரிய உணவும் பெருஞ்செல்வமும் அளித்து மகிழ்ந்தார். இச்சிறப்புகள் செய்தும் மனம் அமையாது தன் மனைவியிடம் நக்கீரரைக் காட்டி 'என்னைப் போல் இவரைப் போற்றுக' என்று பணித்தான். வீட்டிற்கு வம் விருந்தினர்களையும் நன்கு உபசரிக்க வேண்டும் என்பதைச் சங்க இலக்கியப் பாடல்கள் கூறுகின்றன.

**கணவனைப் பிரிந்த மகளிர்**

வையாவிக் கோப்பெரும்பேகன், தன் மனைவியை விட்டுப் பிரிந்து பரத்தையிடம் வாழ்கிறான். கபிலர், பரணர் போன்ற புலவர்கள் பேகனை அவன் மனைவியுடன் சேர்ந்து வாழுமாறு அறிவுரை கூறுகின்றனர். அரிசில்கிழாரும் உன்னுடைய பிரிவினால் உன் மனைவி தன் கூந்தலில் மலரைக்கூட சூடிக் கொள்ளாமல் இருக்கிறாள். ஆகவே அவள் துயரத்தைப் போக்கப் புறப்பட்டுச் செல்வாயாக என்று அறிவுரை கூறுகின்றார். இதனை,

''அன்னவாக நின் னருங்கல வெறுக்கை
அவைபெறல் வேண்டே மடுபோர்ப் பேக! ...
தண்கமழ் கோதை புனைய
வண்பரி நெடுந்தேர் பூண்கநின் மாவே''[146]

என்ற பாடல்வரிகள் உணர்த்துகின்றன. பெண்கள், கணவனைப் பிரிந்த காலத்தில் பூச்சூடித் தம்மை அலங்கரித்துக் கொள்ள மாட்டார்கள். இது கணவனைப் பிரிந்த மகளிர்க்குரிய வழக்கமாக விளங்கியது. இவை அக்காலப் பண்பாட்டினைப் புலப்படுத்துவனவாக உள்ளன.

**கைம்மை நோன்பு**

கணவனின் சிரிப்பிலே களிப்பு எய்தி, காலமெல்லாம் அவனது அன்பிற்கும், துன்பத்திலும் தோள் கொடுத்து, எத்தனைப் பிறவி எடுத்தாலும் நீயே என் கணவன் என்றெல்லாம் எடுத்துக்கூறி ஒரு புதிய உலகம் படைத்து வாழ்ந்த காலத்தில், கணவன் இறந்து விட்டான் என்ற செய்தி அவளுக்குப் பேரிடியாக இருந்தது. இவ்வாறு கணவனை இழந்த மகளிர், கைம்மை மகளிர் எனப்படுவர். கணவனை இழந்த துயரம் தாங்காது பிரிவுத் துயரால் கணவனோடு இறக்க வேண்டும். அல்லது கைம்மை நோன்பு நோற்று வாழ வேண்டிய நிலைக்குத் தள்ளப்படுவதை உணரமுடிகின்றது.

பெண்கள் பூப்பெய்திய காலங்களில் தூய்மையற்றவர்களாகக் கருதப்படுவர். அவர்கள் வீட்டுப் பொருள்களைத் தொடாமல் ஒதுங்கி வாழ்ந்தமையால் அவர்கள் ‘கலந்தொடா மகளிர்’ எனப்பட்டனர்.

புறநானூற்றுப்பாடல் ஒன்றில் கலந்தொடா மகளிர் பற்றிய தெளிவான குறிப்புக் காணப்படுகிறது. பருத்திப் பயிர்களால் சூழப்பட்ட சிற்றூர் மன்னனின், உழுந்தின் சக்கையைத்தின்று வளர்ந்து தளர்ந்த நடையை உடைய குதிரை, கடல்நீரைப் பிளந்து கொண்டு செல்லும் தோணியைப் போலப் பகைவருடைய சேனையினிடையே சென்று போரிட்டது. நெய்யால் சமைத்த உணவை உண்டு ஒழுங்காகச் சித்திரிக்கப்பட்ட பிடரியினையுடைய பகை மன்னனின் குதிரைகள் முருகன் கோட்டத்தில் பிண்டங்களைத் தொடுதற்கல்லாமல் விலக்குடைய மகளிர் போல் இருந்தமையை,

“அணங்குடை முருகன் கோட்டத்துக்
கலந்தொடா மகளிரி னிகழ்ந்துநின் றவ்வே”[147]

என்னும் பாடல் கூறுகிறது. தலைவனுடன் இணைந்து வாழும் மகளிர் சிறந்த ஆடைகளை அணிந்து, நெய்பூசித் தங்களை அழகு படுத்திக் கொள்வர். கைம்பெண்கள் இவற்றை எல்லாம் இழந்து காட்சியளிக்கின்றனர். இராமனால் வாலி வதம் செய்யப்படுகின்றான். அவன் மனைவி தாரை மங்கல நாண் இழந்து அழகு செய்யப்பட்ட தனங்களைக் கழுத்தொடு மறையும் படியாகப் போர்த்திய நிலையில் காட்சியளிக்கிறாள் என்பதை,

''மங்கல அணியை நீக்கி மணிஅணி துறந்து வாசக்
கொங்கு அலர்கோதை மாற்றி குங்குமம் சாந்தம் கொட்டாப்
பொங்கு வெம்முலைகள் பூகக் கழுத்தொடு மறையப் போர்த்த
நங்கையைக் கண்ட வள்ளல் நயனங்கள் பனிப்ப நின்றான்''[148]

என்று கம்பர் கூறுகிறார். விதவைப் பெண்கள் அழகு செய்யும் தங்கள் மார்பை மறைத்துக் கொள்ளும் வழக்கம் இருந்ததை அறியமுடிகின்றது.

விதவைப் பெண்கள் தங்கள் வாழ்வு முடிந்தது என்ற எண்ணத்தில் மனம் தூய்மையாக இருக்கவும், தன்னைப் பிறர் விரும்பாமல் இருக்கவும் வெண்ணிற ஆடை உடுத்துகின்றனர். இன்று பல சமூகங்களில் கணவனை இழந்த பெண்கள் வண்ண ஆடை உடுத்துவதும் மறுமணம் செய்து கொள்வதும் வரவேற்கக் கூடியது.

**கல்வி**

சங்க காலத்தில் வாழ்ந்த தமிழர்கள் கல்வியால் சமூக மதிப்பு உயரும் என்பதனை நன்கு உணர்ந்திருந்தனர். பொன்னையும், பொருளையும் அள்ளிக் கொடுத்தாவது படிக்க வேண்டும் என்ற கொள்கை இருந்தது. கற்போர் ஆசானிடம் கீழ்ப்படிந்து நடக்க வற்புறுத்தினர். கற்றல், கற்பித்தல் ஒரு கடமையாக மட்டும் இருக்கவில்லை. உடனுறைக் கல்விமுறை இருந்ததால் ஆசானுக்கு இன்னல் உற்றால் உடன் உதவும் பண்பும் கற்போரிடம் இருந்தது. கற்பிப்போர் இறைநிலையில் 'எழுத்தறிவித்தவன் இறைவன் ஆவான்' என்று மதிக்கப்பெற்றனர். எனவே கற்றல் கற்பித்தல் ஒரு சடங்காக நிகழவில்லை என்பது புலனாகிறது.

கற்றோரை உலகம் மதிக்கும் என்ற கொள்கையுடன், உதிரத்தை உணவாக்கி ஊட்டி வளர்த்த தாய், தன் பிள்ளைகள் எவரிடமும் வேறுபாடு காட்டமாட்டாள். ஆனால் கற்றவன் சிறப்புப் பெறுவதால் உயர்வாக நடத்துவாள் என்று கருதினர். கல்விக்குச் சமூகத்தில் இருந்த சிறப்பு மிக உயர்ந்ததாக இருந்துள்ளது என்பதை,

''உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றை நிலை முனியாது கற்றல் நன்றே!
பிறப்பு ஓரன்ன உடன் வயிற்றுள்ளும்
சிறப்பின் பாலால் தாயும் மனந்திரியும்''[149]

கல்வி கற்றோர் அரசுக்கு அணுக்கமாக இருந்துள்ளனர். ஆட்சி அதிகாரத்தில் பங்கேற்றனர். சிறியோர், பெரியோர் என்பது அகவை கூடியதால் மட்டும் கணக்கிடப்படவில்லை. 'கல்வியினால் ஆழ்ந்த அறிவுடையோர் கூறும் வழியில்தான் அரசு செயல்படும். இந்திய ஆட்சிப் பணித் தேர்வில் வென்றவர் இளையோர் ஆனாலும் மாவட்ட ஆட்சியராக இருந்தலைக் கருத்தில் கொள்ளவேண்டும்.

அறிவுடைய ஒருவனைத்தான் அரசனும் விரும்புவான், அவன் இளையோனாக இருந்தாலும் அவன் கூறும் நெறியிலே அரசனும் செல்வான் என்பதை,

''ஒரு குடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக என்னாது அவருள்
அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்''[150]

என்னும் புறநானூற்றுப் பாடலில் கூறப்பட்டுள்ளது. பழங்காலத்தில் வேற்றுமை அறியப்பட்ட நான்கு குலத்தினருள், கீழ்க்குலத்தவர் கல்வியில் சிறந்து மேம்பாடு உடையவராகயிருப்பின் மேற்குலத்தவரும் அவர் வழியில் நடந்துள்ளனர் என்ற செய்தி சிறந்த பண்பாட்டினை வெளிப்படுத்துகிறது.

''கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினும் கற்கை நன்றே''[151]

என்னும் பாடல் பிச்சை எடுத்தாவது கல்வி கற்க வேண்டும் என்று கூறுகிறது. உடல் அழகு மட்டுமே ஆண், பெண் இருபாலாருக்கும் பெருமை தராது. கல்வி

அழகே இருவருக்கும் புகழைத் தேடித்தரும் என்பர். அவற்றுள் பெண்கல்வியின் அவசியத்தை,

"குஞ்சி யழகும் கொடுத்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல – நெஞ்சத்து
நல்லம் யாம் என்னும் நடுவுநிலைமையால்
கல்வி அழகே அழகு"[152]

என்று கல்வியின் சிறப்பை நாலடியார் வலியுறுத்துகிறது. கல்வி கடல்போல் பரந்துபட்டது 'கற்றது கைம்மண்ணளவு கல்லாதது உலகு அளவு' என்று ஔவையாரும், 'கல்வி கரையிலே கற்பவர் நாள் சில' என்று நாலடியாரும், 'ஒருவன் கன்னடங்கக் கற்றானும் இல்' என்று சிறுபஞ்சமூலமும், 'முற்றும் உணர்ந்தவர் இல்லை முழுவதூஉங் கற்றனம்' என்று நீதிநெறி விளக்கமும் 'பல் கற்றோம் யாம் என்று நற்புகழ வேண்டா' என்று அறநெறிச் சாரமும் விளக்கியுள்ளன. சங்க காலத்திலேயே கல்வியின் சிறப்பினை, மக்கள் நன்கு அறிந்திருந்தனர் என்பதனை அறிய முடிகிறது.

சங்க காலத்தில் ஊர்ப்பொது மன்றங்களில் உள்ள பலர வேம்பு போன்ற மரங்களின் நிழலில் கல்வி கற்றனா். கொல்லன் அழிசி, குறமகள், வெயினி, மருத்துவன், தாமோதரன், வாணிகன், சாத்தன், அறுவை வாணிகன், இளவேட்டன், ஆசிரியன், பெருங்கண்ணன் எனத் தொழில் வேறுபாடு உடையவா்களும் கல்வியில் புலமை பெற்றவா்களாகத் திகழ்ந்தனா்.

மதுரை இளம்பாலாசிரியன், சேந்தன் கூத்தனாா், மதுரைப் பாலாசிரியன் என்னும் பெயா்கள்மூலம் பாலகா்களுக்குக் கல்வி கற்றுத்தருவதற்கெனத் தனியாகத் தனியாக ஆசிரியா்கள் இருந்தனா் என்பதை அறிய முடிகிறது.

சங்க காலத்தில் கல்வி எல்லோருக்கும் பொதுவானதாக இருந்தது. ஆண்பாற் புலவர்களும், பெண்பாற் புலவர்களும் பாடல் இயற்றுவதிலிருந்து கல்வியானது ஆண், பெண் என்னும் இருபாலருக்கும் பொது என அறிய முடிகின்றது. சங்க காலங்களில் மாணவர்கள் செய்யுள் வழியாகக் கல்வி கற்பதற்கும், இயற்றுவதற்கும் ஆசிரியர்கள் கற்றுத் தந்துள்ளனர். மாணவர்கள் ஆசிரியர்க்கு வேண்டிய உதவிகள் செய்தும், தேவையான பொருள்களினைக் கொடுத்தும் கல்வி கற்றனர் என்பதை அறியமுடிகின்றது.

**இளமைக் கல்வி**

சங்க காலத்தில் இளமையிலேயே கல்வி கற்க வேண்டும் என்னும் உயர்நெறி சான்றோர் பெருமக்களால் வற்புறுத்தப்பட்டது. இளம் பருவத்திலேயே கல்வி அறிவு பெறாதவனின் நிலைப்பாடு பெரிதும் இரங்கத்தக்கதாகும் என்பதை,

''குளித்து மணற் கொண்ட கல்லா இளமை
அளிதோ தானே! யாண்டு உண்டு கொல்லோ''[153]

என்னும் பாடல் உணர்த்துகிறது. அறியாமை என்னும் அவலநிலையிலிருந்து விடுபடுவதற்குக் கல்வியைக் கருவியாகப் பயன்படுத்த வேண்டும் கல்விச் சாலைகள் நிரம்பியிருத்தலே பேதைமையை அகற்றும் வழி என்று சங்கப் புலவர்கள் அரசர்களுக்கு அறிவுரை வழங்கினர். 'சமுதாயம் மேம்பட வேண்டுமானால் சமுதாய உறுப்பினர் ஒவ்வொருவரும் அறியாமை ஆகிய இருளிலிருந்து விடுபட்டுக் கல்வியாகிய ஒளியைப் பெற வேண்டும். கல்வி கற்பிக்க பல கல்விச் சாலைகள் நிறுவப்பட வேண்டும்.

**வேள்விக் கல்வி**

ஏட்டுக்கல்வியில் பெறும் பயனைவிடக் கேள்வியறிவுக்குச் சங்க காலத்தில் சிறப்பிடம் கொடுக்கப்பட்டிருந்தது. கேள்வி அறிவால் சமுதாயத்தில் விளைந்த மாற்றங்களை,

''பொய்த்தல் அறியா உரவோன் செவிமுதல்
வித்திய பனுவல் விளைத்தன்று நன்று''[154]

என்ற பாடல்கள் மூலம் அறியலாம. கல்லாதவர்கள் கூடக் கேள்வியறிவினால் தம்மைக் கற்றவருக்கு இணையாக உயர்த்திக் கொள்ளமுடியும். சிறிதளவே கல்வி கற்றவராயினும் முழுமையான கல்வியறிவைப் பெற முயல வேண்டும் என்று புறநானூறு கூறுகிறது.

**சமயக்கல்வி**

சங்க காலத்தில் அந்தணர்களுக்கு மிகுந்த மதிப்பு அளிக்கப்பட்டிருந்தது. அவர்களைக் கல்வியாளன் எனப் போற்றியுரைத்துள்ளனர். அந்தணர்களே மறை நூல்களைக் கற்றுணர்ந்து பலருக்கும் பயன்நல்கும் பணியைச் செய்தனர். அந்தணரைத் தவிரப் பிறரும் சமயக்கல்வி பயின்றனர் என்பதை,

“மறைநவில் அந்தணர் நுவலவும் படுமே”[155]

“வேத வேள்வித் தொழில் முடிந்ததூஉம்”[156]

என்னும் சங்கப் பாடல்கள் சுட்டுகின்றன. அந்தணர்கள் மட்டுமே சமயப்படைப்புகளைக் காப்பாற்றினர். அவர்கள் மட்டும் சமயக்கல்வி முறையாகக் கற்பிக்கப்பட்டது என்று அக்காலச் சமூகம் அந்தணர்களைப் போற்றியதை அறியமுடிகிறது.

“சமுதாயம் ஒருவனை மனிதனாக அங்கீகரிப்பது அவன் பதவியையோ, பணத்தையோ பிறப்பையோ உருவத்தையோ அல்ல, அவன் பெற்ற கல்வியே அவனைச் சிறந்த ஒழுக்க சீலனாகக் காட்டும் உயர்ந்த ஆயுதம்”[157] என்று ஜோதிகனி கூறுகிறார். இதன்மூலம் கல்வியே மனிதனைச் சமூகத்தில் உயர்ந்தவனாக ஏற்றுக்கொள்கிறது என்பதை அறியமுடிகிறது.

**வாழ்க்கைக்கல்வி**

தாய், தந்தை, கொல்லன், அரசன், வீரன் இவர்களுடைய மரபுசார்ந்த தொடர்பை ஒரு சங்கப்பாடல் தெளிவுபடுத்துகிறது. தந்தையின் தொழிலுக்கு ஏற்றவாறு மகனையும் ஈடுபடுத்தி அவனுக்கு ஏற்ற கல்வியும் அக்காலத்தில் கற்பிக்கப்பட்டமை அறியமுடிகிறது.

“இனக் களிற்று யானை இயல்தேர்க்குரிசில்
நுந்தை தந்தைக்கு இவன் தந்தை தந்தை
எடுத்துஎறி ஞாட்பின் இமையான் தச்சன்”[158]

என்னும் பாடல் தந்தை வழித் தொழிலைக் கற்க வேண்டும் என்று கூறுகிறது. கல்வி முறை கூட அவர்களின் சாதிசார்ந்து இருந்ததை அறியமுடிகின்றது.

**கூத்து - நாடகம்**

சங்காலத்திலிருந்தே கூத்தாடுவதற்கு என்று தனியினம் இருந்தது. இவர்கள் திருவிழாக்காலங்களில் அந்த ஊருக்குச் சென்று கூத்தாடினர். பெண்களும் அக்காலத்தில் கூத்தாடினர் என்பதை,

"ஆடுமகளிரின் மஞ்ஞை அணிகொள"[159]

என்று கார்நாற்பது கூறுகிறது. பாமரமக்களின் பல்கலைக் கழகமாகத் திகழ்வது கூத்துக்கலை. சங்க காலத்தில் ஆண் பெண் இருவரும் கூத்துக்கலையில் பங்கேற்றனர். மக்களும் மன்னர்களும் கூத்துக்கலையையும் கூத்தர்களையும் பாதுகாத்தனர் என்பதற்குச் சங்க இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. கூத்தர் பொருநர், விறலியர், கோடியர் எனப் பல்வேறு பெயர்களில் கூத்துக் கலைஞர்கள் வாழ்ந்தனர்.

"கவின் கலைகளில் நாடகக்கலைக்குத் தனியிடமுண்டு. செவிக்கும் கண்ணுக்கும் கருத்துக்கும் ஒரே நேரத்தில் விருந்தளிப்பது நாடகம்"[160] என்கிறார். தட்சணாமூர்த்தி. ஆயகலைகள் அறுப்பத்தி நான்கில் முதன்மைப்பெறுவது நாடகக்கலையாகும்.

"விளியாதான் கூத்தாட்டுக் காண்டலும்"[161]

என்று திரிகடுகமும்,

"கூத்தும் விழவும் மணமும்"[162]

என்று ஏலாதியும் கூத்து ஆடும் இடத்திற்கும், திருவிழாக்கள் நடக்கும் இடத்திற்கும் கல்வி அறிவுடையோர் செல்லமாட்டார்கள் எனக் கூறுகின்றன.

"வாயிற்கூத்தும் சேரிப் பாடலும்
கோயில் நாடகக் குழுக்களும்"[163]

என்று பெருங்கதையும் கூத்தும் நாடகமும் வெவ்வேறாகக் கூறப்பட்டுள்ளன. கூத்தும் நாடகமும் நடக்கும் களம் ஆடுகளம் எனப்பட்டது.

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்"[164]

என்று தொல்காப்பியர் கூத்துக்கலையைக் குறிக்க நாடகம் என்ற சொல்லையே பயன்படுத்துகிறார்.

உரையாசிரியர்கள் நாடக நன்னூல் செயிற்றியம், சயந்தம், பொய்கையார் நூல், விளக்கத்தார் கூத்து, செயன்முறை, மதிவாணார் நாடகத்தமிழ் எனப் பல்வேறு நாடகநூல்கள் இருந்தன என்று கூறுகின்றனர்.

நாடக மேடை அமைப்பினைப் பற்றி இளங்கோவடிகள்,

“நூனெறி மரபின் அரங்கம் அளக்கும்
கோலள விருபத்து நால்விரலாக
எழுகோல் அகலத்து எண்கோல் நீளத்து
ஒருகோல் உயரத்து உறுப்பினதாகி”[165]

என்று கூறுகிறார். நாடக அரங்கம் அமைப்பதற்குப் பழுதற்ற இடத்தைத் தேர்ந்தெடுக்க வேண்டும். பின்னர் பொதிய மலை முதலான புண்ணிய மழைச்சாரலில் ஒரு கணுவுக்கும் மற்றொரு கணுவுக்கும் இடையில் ஒரு சாண் இடைவெளியுடன் ஓங்கி வளர்ந்த மூங்கில்களை வெட்டிக்கொணர்ந்து நூல் நெறிப்படி நல்லவனின் கைப்பெருவிரலில் இருபத்து நான்கு கொண்ட அளவிற்கு மூங்கிலை வெட்டினர். அதனை அரங்கம் அளக்கும் கோலாகக் கொண்டனர். எழுகோல் நீளம் ஒருகோல் உயரமாக நடன அரங்கத்தை அமைத்தனர்.

தூண்களின் மீது இட்ட உத்திரப் பலகைக்கும் அரங்கில் உள்ள பலகைக்கும் இடையில் உள்ள உயரம் நான்குகோல் அளவாகும். அரங்கின் உள்ளே சென்று வெளியில் வருவதற்கு இருவாயில்கள் அமைத்தனர். தூண்களின் நிழல் அரங்கிலும் அவையிலும் விழாதவாறு விளக்குகளை வைத்தனர் ஒருமுக எழினி, பொருமுக எழினி, கரந்துவரல் எழினி என்னும் மூன்று திரைச்சீலைகளைப் பயன்படுத்தினர்.

நவீன வசதிகள் இல்லாத காலத்திலும் கலைஞர்களின் நிழல் பார்வையாளர்களின் மீது விழாதவாறு மேடை அமைப்பு இருந்ததை அறியமுடிகின்றது.

வேத்தியல், பொதுவியல், வரிக்கூத்து, வரிச்சாந்திக்கூத்து, சாந்திக்கூத்து, புகழ்க்கூத்து, வசைக் கூத்து, விநோதக் கூத்து, இயல்புக்கூத்து, தேசிக்கூத்து, ஆரியக் கூத்து, தமிழ்க்கூத்து எனப் பலவகைக் கூத்துக்கள் இருந்ததாகச் சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் கூறுகிறார்.

**குரவைக் கூத்து**

எழுவர் கைகோத்து வட்டத்தில் நின்று ஆடுவது குரவைக்கூத்து. போரில் வெற்றி பெற்ற அரசனின் தேரின் முன் ஆடுவது முன்தேர்க்குரவை. தேரின் பின்னால் ஆடுவது பின்தேர்க்குரவை என்றழைக்கப்படும் இதனை,

> “தேரோர் தோற்றிய வென்றியும் தேரார்
> வென்ற கோமான் முன்தேர்க் குரவையும்
> ஒன்றிய மரபி பின்தேர்க் குரவையும்”[166]

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. குறவர்கள் தம் வீட்டில் ஆடுதலில் முதிர்ச்சி பெற்ற பெண்களோடு குரவைக்கூத்தாடுவர் என்பதை,

> “வியல்அறை வரிக்கும் முன்றில் குறவர்
> மனைமுதிர் மகளிரொடு குரவை தூங்கும்”[167]

என்னும் அகநானூற்றுப் பாடல் விளக்குகின்றது. அதிகாலையில் கள்ளினைக் குடித்த குறவர்கள் தம் மனைவியுடன் சேர்ந்து மான் தோல் போர்த்திய சிறுபறையில் ஓசை உண்டாகுமாறு அடித்து வானைத் தொடும் அளவிற்கு உயர்ந்த மலை உச்சியில் நின்று குரவைக் கூத்தாடினர் என்பதை,

> “நறவுநாட் செய்த குறுவர் தம் பெண்டிரொடு
> வான்தோய் மீமிசை அயரும் குரவை”[168]

என்றும் பாடல் கூறுகிறது. காற்றுக் குவித்து வைத்த மணலில் குரவைக் கூத்து ஆடியதை,

> “கொண்டல் இடுமணல் குரவை முனையின்
> வெண் தலைப் புணரி ஆயமொடு ஆடி”[169]

என்னும் பாடல் விளக்குகிறது. குறவர்களால் ஆடப்படுவது குரவைக்கூத்து என்பதை அறியமுடிகின்றது.

### துணங்கைக் கூத்து

துணங்கைக் கூத்துக் குரவைக் கூத்தோடு தொடர்புடையது. ஆனாலும் குரவையைப் போல் கைகளைப் பிணைத்தாடுதல் இல்லை. இதில் கைகளை மடக்கி விலாப்புறத்தில் ஒற்றி அடித்து ஆடுவார்கள். இவர்கள் திருவிழாக்காலங்களில் பேரொலி எழுப்பி துணங்கைக் கூத்தை ஆடி மகிழ்ந்திருந்தனர் என்பதை,

"முழவு இமிழ் துணங்கை தூங்கும் விழவின்"[170]

என்று அகநானூறும்,

"மகளிர் தழீஇய துணங்கை யானும்"[171]

என்று குறுந்தொகையும் கூறுகின்றன. துணங்கைக்கூத்து விழாக்காலங்களில் ஆடப்படும் மகிழ்வுக் கூத்தாகக் கருதப்படுகிறது.

### துடிதுணங்கல்

நெல்லால் சமைத்த தோப்பிக் கள்ளினைக் குடித்துப் புலால் நாறும் கைகளோடு, இடைவிடாது குழறும் சூட்டினையுடைய கோட்டானின் குரலுடன் கூடி வெண்கடப்ப மரங்களையுடைய சிற்றூரில் கூத்தாடினார் என்பதை,

"ஓராஅ உருள்துடி குடுமிக் குராலொடு
மராஅஞ்சிறூர் மருங்கில் தூங்கும்"[172]

என்னும் பாடல் உணர்த்துகின்றது. சங்ககாலத்தில் விளையாடல்களாக இருந்தவற்றுள் சில அக்காலத்திலேயே கூத்து வடிவம் பெற்றன. தழூஉ என்னும் விளையாட்டுப் பின்னர் குரவைக் கூத்தாகவும், பாவை என்னும் விளையாட்டுத் தோற்பாவைக் கூத்தாகவும் வளர்ந்தது.

கண்ணன் பலராமனுடன் விளையாடிய குழந்தைப் பருவ நாடகங்களில் ஒன்றான குரவைக் கூத்தினை ஆய்ச்சியர்கள் ஆடினர் என்பதை,

"தான் காண ஆயர்பாடியில் எருமன்றத்து மாயவனுடன்
நெடுங்கண் பிஞ்ஞையோ டாடிய குரவை ஆடுதும்"[173]

என்று சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது. அக்காலத்தில் குரவைக் கூத்து நிகழ்ந்தமையை அறியமுடிகிறது.

**கோடியர் கூத்து**

கணந்துள் பறவையின் ஓசை அச்சத்தைத் தருவதால் பாலை நிலத்தின் வழியாகச் செல்லும் கூத்தர் அச்சம் தீர யாழிசைப்பர் என்பதை,

"நெடுங்கால் கணந்துள்அம் புலம்பு கொள் தெள்விளி
சுரம்செல் கோடியர் கதுமென இசைக்கும்"[174]

என்னும் நற்றிணைப் பாடல்மூலம் சங்க காலத்தில் கோடியர் என்னும் கூத்து வகையினா் இருந்தனர் என்பதை அறியமுடிகின்றது.

**பாவைக் கூத்து**

அல்லிப்பாவை என்பது ஒருவகைக் கூத்து. ஒருவரே ஆண் பெண் என இருவகை வேடங்களையும் தரித்து ஆடுவது என்பதை,

"வல்லோன் தைஇய வரி வனப்பு உற்ற
அல்லிப் பாவை ஆடு வனப்பு ஏய்ப்ப"[175]

என்று புறநானூறும்,

"அஞ்சன வண்ணன் ஆடிய ஆடலுள்
அல்லியந் தொகுதியும் அவுணன் கடந்த"[176]

என்று சிலப்பதிகாரமும் சுட்டுகின்றன. இன்றைய கூத்துகளிலும் ஆண் பெண்வேடம் தரித்தும் ஆடுகின்றனர். பெண்களும் ராஜபார்ட் வேடங்களையும் புனைந்து ஆடுகின்றனர்.

**வெறிக் கூத்து**

சினமுடைய வீரர் வெறியோடு ஆடும் கூத்து வெறிக் கூத்து எனப்படும். வெறிக்கூத்தின் ஒலி கடலொலி போல இருக்கும் என்பதை,

"சின மாந்தர் வெறிக் குரவை
ஓத நீரின் பெயர்பு பொங்க"[177]

என்று புறநானூறு கூறுவதன் மூலம் சங்க காலத்தில் வெறிக்கூத்து இருந்ததையும், இன்று வழக்கிழந்ததையும் அறியலாம்.

இன்று நாடகம் என்பது திருவிழாக்காலங்களில் கோயில் அருகில் கொட்டகை அமைத்து மின்விளக்குகளைக் கட்டி கலைஞர்கள் ஆடலுடன் பாடலைப் பாடி ஆடுவது நாடகம் ஆகும். இதனைக் கூத்து என்றும் கூறுவர். இன்றைய காலத்தில் கூத்து, நாடகம் என்ற சொற்கள் ஒரே பொருளைத் தருகின்றன.

**இன்றைய கூத்து**

சங்க காலத்தைப் போன்று இன்றும் தமிழகத்தில் தைமாதம் தொடங்கி ஆடி மாதம் முடிய கூத்துக்கள் நடந்தேறிய வண்ணம் உள்ளது. தைமாதம் முழுவதும் மாளாகோவில்களிலும் மாசி முதல் வைகாசி மாதம் வரை மாரியம்மன் திருவிழாக்களிலும் ஆனி, ஆடி மாதங்களில் காளியம்மன், முனியப்பன் கோயில்களிலும் கூத்துக்கள் நடைபெறுகின்றன.

நல்லதங்காள், அர்ச்சுனன்தபசு, மதுரைவீரன், பவளக்கொடி, அல்லிஅர்ச்சுனா, ஆரவல்லி, மரகதவல்லி கல்யாணம், மாற்றாந்தாய் கொடுமை, மதிசூரன், வாணாசூரன், பத்மாசூரன், அருந்ததி கல்யாணம், சத்யாவதி கல்யாணம், அரவான்களப்பலி, சதி அனுசுயா, சத்தியவான் சாவித்திரி, புலந்திரன் களவுமாலை, சின்ன அர்ச்சுனன் சண்டை, சிறுதொண்டபக்தன், வேடுவர் கண்ணபுராணம், ஜெகதலப்பிரதாபன், வன்னியபுராணம், கோவலன் நாடகம், சூர்ப்பணகை மானபங்கம், தடகைவதம், பப்ருவாகனன் சண்டை, சுபத்திரை கல்யாணம்.

போன்ற நூற்றுக்கும் மேற்பட்ட இராமாயண மகாபாரதக் கதைகளைக் கூத்தாக நடத்துகின்றனர்.

தமிழகத்தில் நடைபெறுகின்ற கூத்துகள் பெரும்பாலும் தாழ்த்தப்பட்டவா்களின் ஊா்களில்தான் நடை பெறுகின்றன. மிகவும் குறைவாகவே உயா்சாதியினா் கூத்து நடத்துகின்றனா். படித்தவா்கள் மிகவும் குறைவாகவே கூத்துப்பாா்க்கின்றனா். அதற்கு மிக முக்கியக்காரணம் கூத்துக் கலைஞா்கள் பெரும்பாலனோா் தாழ்த்தப்பட்டவா்கள் என்பதால் அக்கலை தாழ்த்தப்பட்டோருக்கு உரியது என்றாகிவிட்டது.

கூத்து நூல்களைக் கலைஞா்களைத் தவிர மற்றவா்கள் அதிகம் படிப்பதில்லை. அதனால் நூல்கள் அச்சாவதும் இல்லை. கூத்துக் கலைஞா்களில் பலா் முன்னோா்களிடமிருந்து கற்றுக் கொள்வதால் நூல்களைப் படிப்பதில்லை. பல கூத்து நூல்கள் அழிந்து போனதற்கு இதுவும் காரணமாகும்.

**இசைக்கலை**

குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் எனத் தமிழ்ப்பண்கள் ஏழு. அப்பண்களிலிருந்து பிறப்பவை திறங்கள். அவற்றில் பல கிளைகள் உண்டு. தமிழ்ப்பண்கள் குறிஞ்சிப்பண், பாலைப்பண், முல்லைப்பண், மருதப்பண், நெய்தற்பண் என ஐவகைப்படும். அவற்றில் பகற்பண்கள், இரவுப்பண்கள், காலை மாலை பண்கள் எனப் பொழுதிற்கேற்ப பண்கள் பாடப்பட்டன.

இசையின் இனிமையில் மலர்கள் மலர்ந்தன. யானைகள் மயங்கின. கள்வர்கள் தொழிலை மறந்தனர். பேய்கள் கலைந்தன. நரிகள் ஓடின எனப் பல செய்திகளைச் சங்க நூல்களில் காணமுடிகிறது.

“............................ புதலும்
வரிவண் டூதவாய் நெகிழ்ந்தனவே”[178]

என்னும் பாடல் வரிகள் வண்டுகளின் இசையில் பூங்கொத்துக்கள் மலர்ந்தன எனக் கூறுகிறது.

போர்க்களத்தில் பிணங்களை உண்ணவரும் பேய்களையும் இசையால் மயக்கினர் என்பதனை,

“தீங்கனி யிரவமொடு............

.................. னெடுந்தகை புண்ணே”[179]

என்னும் புறநானூற்றுப்பாடல் வெளிப்படுத்துகிறது. மார்பிலே புண்பட்டு, மாண்டு கிடந்த வீரனின் புண்ணை உண்ண வந்த பேய்களைத் தடுக்கும் பொருட்டுக் காஞ்சிப் பண்ணைப் பாடி யாழையும் குழலையும் இயக்க முயன்றாள் தலைவி எனக் கூறுகின்றது.

இசை நுட்பங்களைத் தமிழர் பழங்காலமாகப் பாடி வளர்த்து வந்திருக்கிறார்கள். நாயன்மார் காலத்துக்கு முன்னமே தொடங்கிய தமிழ்ப்பண்கள் தமிழகமெங்கும் ஒலித்தன. சோலையிலுள்ள வண்டுகளெல்லாம் அருமையாகப் பண்பாடுகின்றன என்பதை

“சேறாடு செங்கழுநீர்த் தாதாடி
மதுவுண்டு சிவந்த வண்டு
வேறாய வருவாகிச் செவ்வழிநற்
பண்பாடும் மிழலையாமே!”[180]

என்று ஞானசம்பந்தர் பாடுகிறார். இவ்வாறாக வண்டுகளும் பண்பாடின என்று சொல்லும் அளவிற்கு இசை வளர்ந்திருந்தது.

பாணர்களெல்லாம் தங்கள் ஏழ்மை காரணமாகத் தலைவனிடம் சென்று, முறையாகப் பாடுவது மரபாயிருந்தது. ஆனால் நள்ளி என்னும் வள்ளல் கொடுத்த கொடையினால் பாணர்கள் பாடிப் பிழைக்க வேண்டிய அவசியம் இல்லாமல் போய்விட்டது. செல்வச் செருக்கு அதிகமானதால் இசை மரபையும் கைவிட்டார்கள். காலைக்குரிய மருதப்பண்ணை மாலையில் பாடுகிறார்கள் மாலைக்குரிய செவ்வழிப் பண்ணைக் காலையில் பாடுகிறார்கள் என்பதை,

“நள்ளி வாழியோ நள்ளி! நள்ளென்
மாலை மருதம் பண்ணிக் காலை
கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி
வரவெமர் மறந்தனர், அதுநீ
புரவுக் கடன்பூண்ட வண்மையானே”[181]

என்னும் பாடல் உணர்த்துகின்றது. இத்தகைய அருங்கலைச் சிறப்புகளெல்லாம் பண்டைத் தமிழரிடம் பொருந்தியிருந்தன என்பதனைப் புறநானூற்றுப் பாடல் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது. சங்க காலத்தில் கூத்துக்கலையும் இசைக்கலையும் செல்வாக்கோடு திகழ்ந்தமையை அறிய முடிகிறது.

**சங்க கால மக்களின் அறிவியல்**

சூரியன், சந்திரனின் இயக்கத்தைக் கொண்டு காலத்தைக் கணித்தனர். ஓராண்டினை ஆறு பெரும் பொழுதுகளாகவும் ஒருநாளை ஆறு சிறுபொழுதுகளாகவும் பகுத்தனர். ஒரு நாளைக்கு அறுபது நாழிகைகள் என்று கணக்கிட்டனர்.

**வானியல் அறிவு**

வளிமண்டலத்திலுள்ள சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் ஆகியவற்றைப் பற்றியும் கணித்தனர். ஆகாயத்திற்குச் சென்று அறிந்தவர் போல சூரியனின் பாதை, அதன் இயக்கம், காற்று விரவியிருக்கும் திசை ஆகாயத்தின் தன்மை போன்றவற்றைக் கருத்தளவையால் நுட்பமுடன் ஆராய்ந்து கூறுவர் என்பதை,

“அஞ் ஞாயிற்றுப் பரிப்பும்
பரிப்புச் சூழ்ந்த மண்டிலமும்
வளி திரிதரு திசையும்”[182]

என்னும் பாடல்வழி அறியமுடிகிறது. கல்வியறிவு இல்லாத அக்காலத்திலேயே வானியல் அறிவு பெற்றிருந்தனர் என்பதை அறிய முடிகின்றது. சூரியக்கதிர்களுக்கு ஈர்க்கும் ஆற்றல் உண்டு என்பதையும் வானில் காற்று இல்லாத வெற்றிடம் இருந்ததையும் தெரிந்து வைத்திருந்தனர்.

**நிலவு**

தானே ஒளிவீசக் கூடிய சூரியனிடமிருந்து பகலில் ஒளிபெற்று இரவில் பிரதிபலிக்கக்கூடியது கோள்கள் ஆகும். நிலவு சூரியனோடு சேர்வதும், பிரிந்து எதிர்ப்பக்கம் செல்லும் நிகழ்வு நடைபெறும் போது ஒளி ஒவ்வொரு நாளும் வளர்ந்து முழு வட்டமாகும் என்பதை,

“மாவிசும்பின் வெண்திங்கள்

மூஐந்தான் முறைமுற்ற”[183]

எனப் புறநானூறு கூறுகிறது. வெள்ளியாகிய கோல் தென்திசையில் இயங்கினால் மழை பொழியாது வறண்டு போகும் என்று பழந்தமிழர் நம்பினர். என்பதை,

“அலங்குகதிர்க் கனலி நால்வயின் தோன்றினும்

இலங்குகதிர் வெள்ளி தென்புலம் படரினும்”[184]

என்று புறநானூறும்,

“வசையில் புகழ் வயங்கு வெண்மீன்

திசைதிரிந்து தெற்கு ஏகினும்...

வான் பொய்ப்பினும் தான் பொய்யா”[185]

என்று பட்டினப்பாலையும் கீழ்வானில் தோன்றும் வெள்ளி மீன் வடக்குத் திசையிலிருந்து தெற்குத் திசை நோக்கி நகர்ந்தால் நாட்டில் மழை பெய்யாது என்று கூறுகின்றன.

“விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்

கால்பொரு நிவப்பிற் கடுங்குர பெற்றொடும்”[186]

என்னும் சிலப்பதிகாரப் பாடல் சனிக்கோள் புகையினும் விசும்பில் தூமகேது தோன்றினும் சுக்கிரன் தென் திசை சென்றாலும் காற்றுத் தாக்கும் குடமலையில் மழை பொழியும் என்று கூறுகிறது. சங்க காலத் தமிழர்கள் கோள்களைக் கொண்டு மழை பொழிவதைக் கணிக்கும் திறமை பெற்றவர்களாகத் திகழ்ந்தனர்.

**வெள்ளி**

“மைம்மீன் புகையினும் தூமம் தோன்றினும்

தென்திசை மருங்கின் வெள்ளி ஓடினும்”[187]

என்னும் பாடல் கோள்களின் இயக்கத்தை வைத்துச் சங்ககால மக்கள் பலனை அறிந்தனர் என்று கூறுகிறது. சனி மீன் புகைந்தாலும் இடபம் சிம்மம், மீனம் இவற்றொடு மாறுபட்டாலும் சனி தனக்குப் பகை வீடாகிய சிம்ம ராசியில் புகுந்தாலும் உலகிற்குப் பெருந்தீங்கு உண்டாகும் என்று நம்பினர்.

புகைக்கொடி என்னும் தூமம் மறைந்துறையும் கோள்களில் ஒன்று. இது தோன்றினால் தீமை விளையும் என்பதை,

‘‘மதி நிலாக் கரப்ப வெள்ளி ஏர்தர’’[188]

என்னும் புறநானூற்றுப் பாடல் விளக்குகிறது. இரவில் நிலவொளி மறைந்தால் வெள்ளியாகிய விண்மீன் வைகறைப் பொழுதில் கீழ்த்திசையில் தோன்றும். வெள்ளி மீன் தென்திசையில் தோன்றுதல் தீய நிமித்தமாகும். என்பதை,

“வரும் வைகல் மீன் பிறழினும்”[189]

என்று மதுரைக்காஞ்சி கூறுகிறது. கோள்களுள் மிகுந்த ஒளிவீசக்கூடியது வெள்ளியாகும். வெள்ளி மீன் தோன்றுவதால் ஏற்படும் நன்மை தீமைகளைத் தெரிந்து வைத்திருந்தனர்.

**நாளும் கோளும்**

பங்குனி மாதத்துக் கார்த்திகை நாளின் நடு இரவில் ஒரு மீன் விழுந்தது. இது அரசர்களுக்குத் தீங்கு நேரும் அறிகுறி. மீன் விழுந்த ஏழாம் நாளில் சேரன் இறந்தான். அவன் இறக்கும் முன் யானை உறங்கவில்லை, முரசு கிழிந்து வீழ்ந்தது குதிரைகள் இயக்கம் ஒழிந்தது இந்நிகழ்வுகள் இறப்பை உணர்த்தும் தீய சகுனங்களாகும் என்பதை,

‘‘கனை எரி பரப்ப கால் எதிர்பு பொங்கி
ஒருமீன் வீழ்ந்தன்றால் விசும்பினானே’’[190]

என்னும் பாடல்வழி அறியலாகிறது. நிலத்தில் விதை இடுவதற்கும் விளைந்த பயனை நுகர்வதற்கும் நல்லநாள் பார்த்தனர் என்பதை

‘‘கடுங்கண் கேழல் உழதபூழி
நல் நாள் வருபதம் நோக்கி குறவர்’’[191]

என்று புறநானூறு கூறுகிறது. அக்காலத்தில் கோள்களின் மீது நம்பிக்கை வைத்திருந்தனர். சங்க இலக்கியத்தில் பயணத்தை விரைவாக்கிய விமானம் பற்றிய சிந்தனைகளையும் காண முடிகிறது.

“வலவன் ஏவா வான வூர்தி”[192]

என்று புறநானூறும்,

“வானவூர்தி ஏறினள் மாதோ”[193]

எனச் சிலப்பதிகாரமும்,

“துன்பமில் பறவை யூர்தி சேர்த்தினன் றுணைவி சேர்ந்தாள்”[194]

என்று சீவக சிந்தாமணியும் பேருந்து வசதிகூட இல்லாத அக்காலத்திலேயே வானவூர்தியைப் பற்றிக் குறிப்பிட்டிருப்பது பெருமை கொள்ளத் தக்கச் செயலாகும். இதன் மூலம் சங்க கால மக்களின் வானியல் அறிவைப் பற்றி அறிய முடிகிறது.

**நிமித்தம் பார்த்தல்**

இரவலர்கள், புலவர்களிடம் பரிசில் பெறச் செல்லும் போது நல்ல நிமித்தம் பார்ப்பதை நம்பிக்கையாகக் கொண்டிருந்தனர். அவர்கள் புரவலர்களிடம் பரிசில் பெறாதபோது தாம் புறப்பட்ட நேரத்தையும் புள் நிமித்தத்தையும் பழித்தமையை,

“புள்ளும் பொழுதும் பழித்த லல்லதை
உள்ளிச் சென்றோர் பழியல ரதனாற்”[195]

என்ற பாடல்வழி அறியமுடிகிறது. பகல் இருளுதல், பால் புளித்தல், இரவில் தும்பி ஊர்தல், விளக்கவிதல், கண்துயில் வேட்டல் ஆகியனவும் தீ நிமித்தங்களாகப் புறநானூற்றுப் பாடல்கள் கூறுகின்றன.

**கனவுப்பலன்**

இலக்கியத்தில் கனவுகள் நம்பிக்கைகளாகவும் வருங்காரியத்தை முன்னர் உணர்த்துவனவாகவும் அமைந்துள்ளன. சிலருக்கு உண்மையான நிகழ்ச்சியை உள்ளவாறே அறிவித்தல் பின் நிகழ்வனவற்றை வேறொரு நிகழ்ச்சியால் குறிப்பாகக் காட்டல் எனக் கனவுக் காட்சிகளை இருவகை நம்பிக்கைகளாகக் கொள்ளலாம். மக்கள் பொதுவாகப் பின் நிகழ்வனவற்றை, முன்னுணர்த்தும் வகையில் கனவுகள் அமைகின்றன என நம்புகின்றனர்.

‘கனவு என்பது அடக்கி வைக்கப்பட்ட விருப்பத்தின் மறைமுகமான வெளிப்பாடே என்பர் உளவியலார். கனவுகள் உளநோயால் தோன்றுகின்றன என்பர் ஒரு சிலர்.’

எயிறு நிலத்தில் வீழ்தல், தலையில் எண்ணெய் தேய்த்திருத்தல், களிறுமேல் ஊர்தல், கட்டிய ஆடை நீங்கல், படைக்கலம் கவிழ்தல் ஆகிய கனவுகள் தீ நிமித்தங்களைக் குறிப்பனவாகப் புறநானூற்றுப் பாடல் உணர்த்துகின்றன.

“எயிறு நிலத்து வீழவு மெண்ணெ யாடவும்
வெள்ளி நோன்படை கட்டியொடு கவிழவும்...
கனவி னரியன காணா நனவிற்”[196]

சீவக சிந்தாமணியில் வரும் சச்சந்தன் கனவு கண்டு தீமை நிகழப்போவதை முன்கூட்டியே உணர்ந்தான். இலக்கியக் கனவுகளில் தீமையை முன்கூட்டி உணர்த்துபவைதான் மிகுதி நற்கனவுகள் மிகக் குறைவாகயே அமைந்துள்ளன.

கனவுகள் எதிர்கால நிகழ்ச்சிகளைக் குறிக்கும் இயல்புடையன என்று பண்டுதொட்டே மக்கள் கருதினர். பண்டைய ரோமானிய நாட்டில் ஜூலியஸ் சீசஸ் கொல்லப்படுவதற்கு முன்னே அவனுடைய மனைவி கல்புப்னியா தீக்கனவு கண்டு தம் கணவனை வெளிச்செல்லாது தடுத்ததாகக் கூறுவர்.

பிற்காலத்து அமெரிக்க நாட்டுக் குடியரசுத் தலைவர் ஆபிரகாம் லிங்கன் தமக்குக் கொலையால் சாவுநேரும் என்று முன்னமேயே கனவு மூலமாக அறிந்து தம் நாட்குறிப்புப் புத்தகத்தில் குறித்து வைத்திருந்தார் என்று கூறுவர்.

எண்திசையும் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை எதிர்த்த பகைவர்கள், எரிகொள்ளி எரிந்து வீழவும், பெரிய மரங்களின் கிளைகள் இலையின்றி உதிர்ந்து போகவும், கதிர்களை உடைய ஞாயிறு பலவிடங்களில் செறிந்து தோன்றவும் அச்சம் தரத்தக்க பறவைகள் குரலிசைப்பவும், பற்கள் நிலத்தில் விழவும், எண்ணெயை மயிரின் கண் வார்க்கவும், படைக்கலங்கள் கட்டிலொடு கவிழும் தீயசகுனங்களைத் தம் கனவில் கண்டு அதனால் தமக்குத் தீமை நிகழப்போவதை எண்ணிக் கலங்கியிருந்தனை,

“காலனும் காலம் பார்க்கும் பாராது

வேலீண்டு தானை விழுமியோர் தொலைய
வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்தே...
செருமிகு வளவ நிற் சினை இயோர் நாடே''[197]

என்ற பாடலிலிருந்து அறியமுடிகின்றது. அரசர்களும் தீய சகுனங்களைக் கண்டு அஞ்சினர் என்பதைச் சங்கப்பாடல் மூலம் உணரலாம்.

**நாளும் சகுனமும்**

எந்தக் காரியத்தைச் செய்வதற்கும் நல்லநாள் பார்ப்பது மூடநம்பிக்கை. நாளிலும் நட்சத்திரத்திலும் என்ன இருக்கிறது? நம்மிடம் அறிவும், திறமையும், உறுதியும் இருந்தால் தொட்ட காரியத்தை வெற்றியுடன் செய்து முடித்து விடலாம். சிலர் தாம் செய்யும் செயல்களைச் சுபமுகூர்த்தம் பார்த்துதான் செய்கின்றனர்.

சிலர் நல்லநாள் நல்லநேரம் இவைகளைப் பிறர் அறியாமல் பார்த்து வைத்துக் கொள்கின்றனர். குறிப்பிட்ட நேரத்தில் செயலைத் தொடங்குகின்றனர். இதற்குக் காரணம் பரம்பரைப் பண்பாடே ஆகும்

பறவைச் சகுனம் பார்ப்பது தமிழர்களின் பழக்கம் என்பதை,

''நாள் அன்று போகிப், புள் இடை தட்ப ...
................................பாடியோரே''[198]

என்னும் புறநானூற்றுப் பாடல் ஒன்று தெளிவுபடுத்துகின்றது. ஓசையுடன் வீழுகின்ற அருவியை உடைய பெருமை நிறைந்த மலையில், தலைவனாகிய மலையமான் திருமுடிக்காரியைப் புகழ்ந்து பாடிச் சென்ற புலவர்கள் பரிசில் பெறுவது உறுதி. நல்லநாள் அல்லது கெட்ட நாளிலே அவனிடம் சென்றாலும், செல்லும் போது பறவை தடுத்தாலும், காலம் அறியாமல் சென்றாலும், தகுதியற்ற சொற்களை அவனிடம் கூறினாலும் பரிசில் பெற்றுத்தான் திரும்புவார்கள்.

நல்ல நாளும் சகுனமும் பார்க்கும் வழக்கம் தமிழரிடம் இருந்தன என்பதை அறியமுடிகிறது.

**பல்லி பலன்**

நற்செயலுக்குப் புறப்படும் போது, பல்லி சத்தமிட்டால் தயங்குகின்றோம். அதற்கு ஏதோ பலன் உண்டு என்று நம்புகின்றோம். பல்லி சொல்லை நம்புவதும் நமது பரம்பரை வழக்கம் என்பதை,

''முதைச் சுவற கலித்த மூரிச் செந்தினை
ஒங்கு வணரப் பெருங்குரல் உண்இய , பாங்கர்ப்
பகுவாய்ப் பல்லிப் பாடு ஓர்த்துக் குறுகும்
புருவைப் பன்றி''[199]

என்னும் பாடல் வழி உணரமுடிகின்றது. உச்சியிலே செழித்து முற்றியிருக்கும் நல்ல தினையின் உயர்ந்து வளைந்த பெரிய கதிரை உண்ணும் பொருட்டுப் பிளந்த வாயையுடைய பல்லியின் சொல்லை அறிந்து நல்ல நிமித்தம் என்று எண்ணி இளம்பன்றி வருகின்றது என்று கூறுவதன் மூலம் விலங்குகளும் சகுனம் பார்த்தது என்பதை அறியமுடிகிறது.

பல்லி சொல்வதற்குப் பலன் உண்டென்று தமிழ் மக்கள் நம்பி வந்தனர் என்பதை

''பல்லியும் பாங்கு ஒத்து இசைத்தன
நல் எழில் உண்கணும் ஆடுமால் இடனே''[200]

என்று கலித்தொகை கூறுகின்றது. இன்றைய அறிவியல் யுகத்திலும் பல்லி சகுனம் பார்ப்பது நடைமுறையில் உள்ள போது அன்றைய மக்கள் பார்த்ததில் வியப்பில்லை.

பெண்களுக்கு இடதுகண், இடதுதோளும் ஆண்களுக்கு வலதுகண், வலதுதோளும் துடித்தால் நன்மையும் வெற்றியும் உண்டாகும். மாறாகத் துடித்தால் தீமை உண்டாகும். இத்தகைய நம்பிக்கைத் தமிழரிடம் இருந்தது என்ற உண்மையை இக்கலித்தொகைப் பாடல் காட்டுகிறது.

பண்டைத் தமிழர்கள் மந்திரங்களில் நம்பிக்கை வைத்திருந்தனர். பெரியோர்கள் சொல்லிய, பொருள் தெரியாத மொழிகளையே அவர்கள் மந்திரங்கள் என்று நம்பி வந்தனர். இன்றும் குறிகேட்டல், நோய் நீங்கத் தெய்வத்தை வேண்டிக்

கொள்ளுதல், பழைய மரங்களில் தெய்வம் இருப்பதாக நம்புதல் போன்ற பல செயல்கள் தமிழ் மக்களிடம் இருந்து வந்தன என்பதை,

''எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியர்
திண்ணியர் ஆகப் பெறின்''[201]

என்னும் குறள் மூலம் அறியலாம். நற்காரியங்களைச் செய்ய எண்ணியவர் உறுதியுள்ளவராக இருந்தால், அவர்கள் தாம் எண்ணிய எல்லாவற்றையும் எண்ணிபடியே அடைவார்கள் என்ற பொருளமைந்த இக்குறள் மூடநம்பிக்கைகளுக்கு முற்றுப்புள்ளி வைப்பதாகும்.

முன்னோர்கள் மூடநம்பிக்கைகளைக் கண்டித்துங்கூட அவை நம்மால் அதிலிருந்து முழுவதுமாக மீண்டுவர முடியவில்லை. ஆயிரங்காலத்து நம்பிக்கைகளை, ஒழித்துவிட முடியாது. இடைக்காலத்திலே நம்மிடம் ஏற்பட்ட பழக்க வழக்கங்களை எளிதில் மாற்றிக் கொண்டு விடலாம். பரம்பரையாக நம்மிடம் ஊறிவந்த பழக்க வழக்கங்களையும் நம்பிக்கைகளையும் மாற்றுவது எளிதல்ல என்பதைக் காணமுடிகின்றது.

**தீமை செய்யாதிருத்தல்**

ஒவ்வொருவரும் அறம் செய்யாவிடினும் தீமை செய்தலை ஒழிக்க வேண்டும். இதனை,

''நல்லது செய்த லாற்றராயினும்
அல்லது செய்த லோம்புமின துதான்
............................ரதுவே''[202]

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன. ஒருவருக்குத் தீமை செய்யாதிருத்தலே பெரிய உதவியாகும்.

**பொருள் நிலையாமை**

செல்வம் நிலையானது. அழியாதது என்று நம்பி அதைச் சேர்ப்பதிலே காலங்கடத்துவது அறியாமை. ஏனெனில் செல்வம் நிலையற்றது. ஆதலால்

செல்வம் உள்ள போதே நல்ல செயல்களைச் செய்ய வேண்டும் என்பது பழந்தமிழரின் கொள்கையாகும்.

புலவர் உறையூர் முதுகண்ணன் சாத்தனார் சோழன் நலங்கிள்ளியிடம் அறிவுறுத்தும் விதமாகப் பொருட்செல்வம் தேய்ந்து குறைபடுவதும் வளர்ந்து பெருகுவதும் இயல்பு. இவ்வுலகில் உயிர் நீங்கி உடல் அழியும் தன்மையுடையது. உயிர்கள் மீண்டும் பிறவி கொண்டு தழைக்கும் என்கின்ற உண்மை நிலைகளை அறியாதவரானாலும் அறிந்து கொண்டு உன்னுடைய பொருளை அளிப்பாயாக என்று அறிவுறுத்தினார் என்பதை

“தேய்தல் உண்மையும் பெருக்கல் உண்மையும்
வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி” [203]

என்னும் பாடல் விளக்குகிறது. இதன் மூலம் பொருள் நிலையற்றது. இருக்கும் போது பலருக்கும் உதவிசெய்தல் வேண்டும்.

**பழிக்கு நாணும் பண்பு**

சங்ககாலச் சான்றோர் புகழெனின் உயிரையும் கொடுப்பவராகவும், பழியெனின் உலகுடன் பெறுவதாக இருந்தாலும் வேண்டாதவராகவும் இருந்துள்ளனர் என்பதை,

“புகழெனின் உயிரும் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர்”[204]

என்ற பாடல் வரிகள் மூலம் அறிய முடிகிறது. இதுவே மக்களின் பண்பாட்டினை விளக்குவதாக அமைந்துள்ளது.

**புகழ் பெற்று வாழ்தல்**

மனிதனாகப் பிறந்தவன், புகழ் பெற வேண்டுமானால் பலரும் போற்றக்கூடிய நல்ல செயல்களைச் செய்ய வேண்டும். புகழ் பெறாத மனிதன் பிறந்தும் பயன் இல்லை. இந்த உண்மையைத் தமிழ்நூல்கள் வற்புறுத்திக் கூறுகின்றன.

இவ்வுலகில் நாம் கண்ணால் காணும் பொருட்கள் அனைத்தும், என்றும் நிலைத்திருப்பன அல்ல, அழிந்து போகக்கூடியன, அழியாமல் நிலைத்து வாழ

விரும்புகின்றவர்கள் தமது புகழை நிலைத்து நிற்கும் படி செய்த பிறகுதான் இறப்பார்கள். அவர்களின் உடல் மறைந்தாலும், புகழ் மறையாமல் நிற்கும். வறுமையால் வருந்தி வந்தோர்க்கு உதவி, அவர்களை வாழ வைப்பதுதான் புகழ் நிலைப்பதற்குரிய செயலாகும். கிடைப்பதற்கரிய சிறந்த செல்வத்தைப் பெற்றவர்கள் பலர் உண்டு.

செல்வர்கள் கொடாத காரணத்தால், இறந்தபின் இவ்வுலகை விட்டு அடியோடு மறைந்து போய்விடுவார்கள். அவர்கள் இரப்போர்க்கு ஈந்து புகழ்பெற்ற பழமையான மக்களைப் போன்றவர்கள் அல்லர், பெரியோர்கள் நடந்த வழியைப் பின்பற்றி நடக்கத் தெரிந்தவர்களும் அல்லர் ஆதலால், அவர்கள் மனிதப்பிறவியின் பயனைப் பெறாதவர்களே ஆவார்கள்.

“மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஅத் தாம் மாய்ந்தனரே
தொன்மை மாக்களின் தொடர்பு அறியலரே”[205]

என்ற பாடல்மூலம் புகழ்பெற்று வாழ்தலே சிறந்த வாழ்க்கையென்று பண்டைத்தமிழ்கள் எண்ணியிருந்தனர்.

**செய்ந்நன்றி மறவாமை**

செய்ந்நன்றி அறிதல் என்பதைத் தமிழர்கள் தலைசிறந்த அறமாகப் போற்றியிருக்கின்றனர். செய்ந்நன்றி அறிதல் என்பது பிறர் செய்த நன்றியை மறவாமையாகும் மக்கள் ஒருவருக்கு ஒருவர் உதவி செய்து ஒத்து வாழ்வதற்கு இந்த நன்றியுணர்ச்சியே பெருந்துணையாக நிற்பதாகும்.

நாம் துன்புறும் போதும் அல்லது உதவியை நாடிய போது நமக்கு உதவியவர்களையும் நாம் மறக்காமலிருக்க வேண்டும். அப்போதுதான் பிறர் நமது உதவியை நாடியபோது அவர்க்கு நாமும் உதவி செய்யப் பின்வாங்க மாட்டோம். பிறர் நமக்குச் செய்த உதவியின் நினைப்பு நம்மைப் பிறருக்கு உதவி செய்யத் தூண்டும் ஆதலால் செய்ந்நன்றி மறவாமையைச் சிறந்த அறமாக வலியுறுத்தினர்.

பசுவின் மடியை அறுத்த பாவிகளுக்கும், சிறந்த நகைகளை அணிந்த பெண்களின் கர்ப்பத்தை அழித்தவர்களுக்கும், அறநூல்களை ஆராய்ந்து பார்த்து, மக்களுக்கு நல்லறங்காட்டும் பார்ப்பனர்களுக்குக் கொடுமை செய்தவர்களுக்கும், அவர்கள் பாவத்தைப் போக்கும் கழுவாய்கள் உண்டு, ஆனால் இந்த நிலமே கீழ்

மேலாக மாறுவதானாலும் ஒருவர் செய்த நன்மையை மறந்தவர்க்கும், அழித்தவர்க்கும் நரகம் கிடைப்பது உறுதி. அதிலிருந்து மீள முடியாது என்பதை,

"ஆன்முலை அறுத்த அறன் இலோர்க்கும்
மாண் இழை மகளிர் கருச் சிதைத்தோர்க்கும்...
செய்தி கொன்றோர்க்கு உய்திஇல் என
அறம்பாடிற்றே"[206]

என்று புறநானூறு கூறுகிறது.செய்ந்நன்றி மறவாமை பற்றித் திருவள்ளுவரும் செய்ந்நன்றி அறிதல் என்னும் அதிகாரத்தில் தெளிவாக விளக்கியுள்ளார்.

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"[207]

எந்த நன்றியை அழித்தவர்க்கும் தப்பிப் பிழைக்க வழியுண்டு, ஒருவர் செய்த உதவியை மறந்தவர்க்கும் அழித்தவர்க்கும் அப்பாவத்திலிருந்து தப்பிப் பிழைக்க வழியே இல்லை, எனவே நமக்கு உதவி செய்தவர்களை எக்காலத்தும் மறத்தல் கூடாது என்ற உயரிய பண்பினைச் சங்கச் சான்றோர்கள் நன்கு அறிந்திருந்தனா் என்பதை உணர முடிகிறது.

**இரத்தலின் இழிவு**

பிறரிடம் பொருள் கொடு என்று கேட்டு யாசிப்பது இழிவானது. அப்படிக் கேட்போரிடம் கொடுக்க மாட்டேன் என்று சொல்லுதல் இரப்பதைவிட இழிவாகும். பிறர் கேட்டதை வாங்கிக் கொள்க என்று கொடுப்பது உயர்ந்தது. அப்படிக் கொடுக்கும்போது பெற்றுக்கொள்ள மாட்டேன் என்று மறுப்பது கொடுப்பதை விட உயர்ந்ததாகும் என்பதை,

"ஈ என இரத்தல் இழிந்தன்று, அதன் எதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று
கொள் எனக் கொடுத்தல் உணர்ந்தன்று, அதன் எதிர்
கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று"[208]

இப்பாடல் உணா்த்துகிறது. இரத்தலின் இழிவையும், ஈவோரும் இரப்போரும் அற்ற சமுதாயம் தோன்ற வேண்டும் என்ற உயரிய பண்பு மக்கள் மனதில் தோன்றியுள்ளமையையும் அறிய முடிகிறது.

“தனி ஒருவனுக்கு உணவில்லை எனில்- இந்த
சகத்தினை அழித்திடுவோம்”[209]

பழந்தமிழர்களின் பண்பாட்டு உணர்ச்சியே பாரதியாரை இவ்வாறு பாடத்தூண்டியது என்பதனை உணர முடிகிறது.

**உயர்ந்த குறிக்கோள்**

சங்க காலங்களில் எந்த ஒரு செயலினைச் செய்வதாக இருந்தாலும் உள்ளத்தில் மிகுந்த உறுதியினைக் கொண்டிருந்தனர்.

உள்ளத்தில் வலிமையுடையவன், யானை வேட்டைக்குப் போனால், வென்று வருவான். வலிமை இல்லாதவன் காடை வேட்டைக்குப் போனாலும் வெறுங்கையோடு திரும்ப நேரிடும். என்பதை,

“நீங்கா நெஞ்சத்துத் துணிவுஇல் லோரே
யானை வேட்டுவன் யானையும் பெறுமே…
தொய்யா உலகத்து நுகர்ச்சியும் கூடும்”[210]

என்ற புறநானூறுப் பாடல் உணர்த்துகிறது. வாழ்க்கையில் ஒவ்வொருவரும் உயர்ந்த குறிக்கோளை மனதில் கொண்டிருக்க இருக்க வேண்டும் என்பதையே இலக்கியங்கள் சுட்டுகின்றன.

## தொகுப்புரை

சங்ககால மன்னர்களின் அரண்மனையில் மழைநீர்க்குழாய்களும், பெரிய வாயில்களும் அமைக்கப்பட்டு அவற்றில் ஓவியங்களும் வரையப்பட்டிருந்தன.

குறவர் குடில்கள் தினைத்தாளால் வேயப்பட்டும், விலங்குகள் உள்ளே நுழையாதவாறு கதவுகள் குறுகலாகவும் அமைக்கப்பட்டிருந்தன. ஆயர் இல்லம் மூங்கில் கொண்டும், உழவர் இல்லம் வைக்கோலாலும், வலைஞர் இல்லம் நாணல் புற்களாலும் வேயப்பட்டிருந்ததை அறியமுடிகின்றது.

போர் வீரர்கள் புலித்தோல் ஆடையைப் போருக்கும் பாதுகாப்புக்கருதி கசவக்குண்டலமும் அணிந்தனர். குளிர்காலத்தில் ஆடு, எலி மயிரினால் நெய்யப்பட்ட ஆடைகளை அணிந்தனர். பிறப்பு, இறப்பு மற்றும் திருமணங்களில் புதிய வெண்ணிற ஆடை அணிவதைப் பழக்கமாகக் கொண்டிருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

குளிர் மற்றும் வெப்பக் காலங்களுக்கு ஏற்ற உணவு முறைகளைப் பழந்தமிழர் பயன்படுத்தினர். மான், முயல், பன்றி, உடும்பு, காடை, கானக்கோழி போன்ற இறைச்சிகளையும், தாவர உணவு, பருப்பு, கீரைகள், காய்கள் போன்ற சைவ உணவுகளையும் உண்டதை அறியமுடிகின்றது.

எயினர், அந்தணர், இடையர் ஆகியோர் உணவோடு கள்ளை அருந்தும் பழக்கம் உடையவர்களாக இருந்தனர். கானவர், மன்னர், வேடர் பசியோடு வரும் உறவினர்களுக்குப் பல்வகையான உணவு வகைகளை அளித்து அவர்களின் பசியைப் போக்கியதையும் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. அன்பு கலந்த வாழ்வைப் பழந்தமிழர்கள் கொள்கையாகக் கொண்டனர்.

கணவனைப் பிரிந்திருந்த காலத்தில் மனைவி எவ்வகையான ஒப்பனைகளையும் செய்து கொள்ளாது இருத்தலையும், உயிரினும் நாணமும், நாணத்தினும் கற்பும் சிறந்ததாகக் கொண்டு சங்க கால மகளிர் வாழ்ந்திருந்தனர். கணவன் இறந்தவுடன் மனைவியானவள், உடன் தீ மூழ்குதல், கைம்மை நோன்பு

நோற்றல் போன்ற செயல்களால் கற்பு தடம் மாறாமல் வாழ்ந்திருந்தனர் என்பதை அறிய முடிகின்றது.

மான்கள் இன்பம் நுகர்வது தடைப்படாமல் இருக்க, தினை தின்ன வரும் கானக்கோழிகளை வெருட்டாது விட்டு விட்ட மகளிரின் ஒப்பற்ற மனநிலையை உணரமுடிகிறது.

விருந்தினர்க்குச் சுவையான உணவு தந்து விருந்தோம்புவதே பழியற்ற வாழ்க்கை என்று நினைத்து வாழ்ந்த சங்கத் தமிழர்களின் மாண்பு போற்றுதலுக்குரியதாகும்.

மகளிர், அணியிழை, ஒளியிழை, இலங்கிழை, சேயிழை போன்ற அணிகலன்களைப் பயன்படுத்தியை அறிய முடிகின்றது.

திருவிழாக்காலங்களில் கொட்டகை அமைத்துக் கூத்து ஆடினர். குரவைக் கூத்து, துணங்கைக் கூத்து, துடிதுணகல், கோடியர் கூத்து, பாவைக் கூத்து போன்ற கூத்துகள் நடைபெற்றதையும் அறிய முடிகின்றது.

காற்றுமண்டலம், சூரியனின் பாதை, அதன் இயக்கம் தன்மை, வெள்ளிக் கோளின் தன்மை போன்ற அறிவியல் சார்ந்த அறிவினைச் சங்ககால மக்கள் பெற்றிருந்தனர்.

பால் புளித்தல், விளக்கவிதல் போன்றவை தீ நிமித்தங்களாகவும், மேலும் குறிகேட்டல், சகுனம் பார்த்தல், பல்லி சொல்லும் பலன் போன்ற நம்பிக்கை சார்ந்த பழக்கவழக்கங்களும் அவர்களிடம் இருந்ததைக் காண முடிகின்றது.

இசையால் மலர்கள் மலர்ந்தன, யானைகள் மயங்கின, கள்வர்கள் தொழிலை மறந்தனர் போன்ற சுவையான செய்திகளைச் சங்க நூல்கள் பேசுகின்றன.

**சான்றெண்**

1. பிங்கலந்தை நிகண்டு., நூ.1153.
2. புறம்., பா.129. வரி.1-2.
3. மேலது., பா.325. வரி.6-9.
4. மேலது., பா.18.
5. மேலது., பா.18. வரி.6-9.
6. மணிமேகலை., காதை.11. வரி.95.96.
7. புறம்., பா.168. வ.9.
8. மேலது., பா.399. வரி.1-12.
9. பெரும்பாணாற்றுப்படை., வரி.192-195.
10. பொருநராற்றுப்படை., வரி.306-310.
11. மேலது., வரி.166-168.
12. மலைபடுகடாம்., வரி.417-420.
13. பெரும்பாணாற்றுப்படை., வரி.96-100.
14. சிறுபாணாற்றுப்படை., வ.163.
15. பெரும்பாணாற்றுப்படை., வ.282.
16. ஐங்குறுநூறு., வ.37.
17. அகம்., பா.265. வரி.14-18.
18. பொருநராற்றுப்படை., வரி.2-3.
19. மேலது., 113-115.
20. மேலது., 116-118.
21. சிறுபாணாற்றுப்படை., வரி.243-245.
22. புறம்., பா.2. வரி.13-16.

23. பொருநராற்றுப்படை., வரி.103-105.

24. புறம்., பா.150. வரி.9-13.

25. மேலது., பா.34. வரி.9-15.

26. மேலது., பா.119. வ.3.

27. பெரும்பாணாற்றுப்படை., வரி.473-479.

28. மதுரைக்காஞ்சி., வரி.287-289.

29. மலைபடுகடாம்., வரி.112-115.

30. பெரும்பாணாற்றுப்படை., வரி.132-133.

31. மலைபடுகடாம்., வ.563.

32. அகம்., பா.182. வரி.3-4.

33. நற்றிணை., பா.85. வரி.8-10.

34. ஐங்குறுநூறு., பா.22. வரி.213-214.

35. மேலது., பா.29. வரி.282.

36. மலைபடுகடாம்., வரி.173-174.

37. அகம்., பா.129.

38. மலைபடுகடாம்., வரி.171-181.

39. மேலது., பா.282.

40. பதிற்றுப்பத்து., வ.34.

41. நெடுநல்வாடை., வரி.181.

42. கம்பராமாயணம்., பா.4359.

43. கு.பகவதி., தமிழர் ஆடை., ப.95.

44. புறநானூறு., பா.13. வரி.2.3.

45. சீவகசிந்தாமணி., வ.266.

46. கம்பராமாயணம்., வரி.7256.

47. புறநானூறு., பா.145. வரி.1-2.

48. சிலப்பதிகாரம்., இந்திரவிழா ஊர் எடுத்தக்காதை., வரி.16-17.

49. கொங்குவேளிர்., பெருங்கதை., பா.1:47. வரி.178-179.

50. கு.பகவதி., தமிழர் ஆடை., ப.12.

51. மேலது.,

52. தொல்காப்பியம்., புறத்திணையியல்., நூ.9.

53. கு.பகவதி., தமிழர் ஆடை., ப.127.

54. சிலப்பதிகாரம்., நீர்ப்படைக்காதை., வ.229.

55. சீவகசிந்தாமணி., காந்தர்வதத்தையார் இலம்பகம். பா.614. வ.1.

56. புறம்., பா.374. வ.9.

57. கலித்தொகை., பா.85. வரி.3-4.

58. மணிமேகலை., மலர்வனம் புக்கக்காதை. வரி.137-138.

59. அகம்., பா.86. வரி.21-22.

60. கம்பராமாயணம்.,பா.1307.

61. கு.பகவதி., தமிழர் ஆடை., ப.12.

62. புறம்., பா.286.

63. கம்பராமாயணம்., பா.1483.

64. கு.பகவதி., தமிழர் ஆடை., ப.134.

65. மேலது.,

66. மேலது.,

67. மேலது.,

68. புறம்., பா.31.

69. மேலது.,பா.146. வரி.8-10.

70. மதுரைக்காஞ்சி., வரி.351-358.

71. நெடுநல்வாடை., வரி.59-61.

72. மேலது., வரி.81-88.

73. பட்டினப்பாலை., வரி.41-42.

74. சிலப்பதிகாரம்., அந்திமாலை சிறப்பு செய்காதை., வ.31.

75. நெடுநல்வாடை., வரி.95-96.

76. திருக்குறள்., எண்.742.

77. குறுந்தொகை., வ.108.

78. குறிஞ்சிப்பாட்டு., வ.153.

79. மலைபடுகடாம்., வரி.139-140.

80. பெரும்பாணாற்றுப்படை., வரி.148-149.

81. மேலது., வ.225.

82. மேலது., வரி.353-54.

83. மேலது., வரி.263-64.

84. நற்றிணை., பா.207. வரி.1-2.

85. அகம்., பா.200. வரி.1-2.

86. சசிவல்லி., சி.வி. தமிழர் திருமணம்., 351.

87. மேலது.,

88. இந்திய பல்கலைக்கழகத் தமிழாசிரியர்கள் மன்றம், முதலாவது கருத்தரங்கம்.,ப.152.

89. சசிவல்லி., சி.வி. தமிழர் திருமணம்., ப.9.

90. மேலது.,

91. தொல்காப்பியம்., கற்பியல்., நூ.4.

92. அகம்., பா.122. வரி.10-15.

93. கலித்தொகை., பா.41. வரி.40-44.

94. ஐங்குறுநூறு., பா.399.

95. குறிஞ்சிப்பாட்டு., பா.231-32.

96. சசிவல்லி., சி.வி. தமிழர் திருமணம்., ப.9.

97. கலித்தொகை., பா.138. வரி. 8- 18.

98. அகம்., பா.90. வரி.13-14.

99. கலித்தொகை., பா.104. வரி. 19- 31.

100. புறம்., பா.341. வரி.11-15.

101. தொல்.,கற்பியல்.,நூ.31.

102. ஐங்குறுநூறு., பா.292.

103. புறம்., பா.185. வ.5.

104. மேலது., பா.230 வ.13.

105. மேலது., பா.329 வ.1.

106. தொல்காப்பியம்.,கற்பியல்., நூ.5.

107. புறம்., பா.28. வரி.15-17

108. திருக்குறள்., எண் 45.

109. புறம்., பா.193.

110. தொல்காப்பியம்.,கற்பியல்., நூ.150.

111. திருக்குறள்.,எண் 54.

112. மேலது., 55.

113. புறம்., பா.198. வ.3.

114. தொல்காப்பியம்.,கற்பியல்., நூ.96.

115. மேலது., நூ.22.

116. சிலப்பதிகாரம்.,காட்சிக்காதை., 84-86.

117. புறம்., பா.246. வரி.2-15.

118. மேலது., பா.250.வரி.4-5.

119. மேலது., பா.187.

120. மேலது., பா.188. வரி.3-6.

121. திருக்குறள்., எண்.66.

122. புறம்., பா.188. வரி.3-6.

123. மேலது., பா.96.

124. மேலது., பா.100. வரி.7-17.

125. மேலது., பா.312.

126. ஐங்குநுறூறு., பா.401.

127. மேலது., பா.402.

128. மேலது., பா.406.

129. நற்றிணை., பா.40. வரி.10-12.

130. புறம்., பா.86.

131. மேலது., பா.278.

132. மேலது., பா.320. வரி.3-11.

133. மேலது., பா.10. வரி.7.9.

134. திருக்குறள்., எண்.90.

135. மேலது., எண்.82.

136. புறம்., பா.182. வரி.1-3.

137. சிலப்பதிகாரம்., கொலைக்களக்காதை., வரி.71-73.

138. புறம்., பா.10. வ.9.

139. மேலது., பா.374. வரி.11-15.

140. மேலது., பா.333. வரி.8-13.

141. மேலது., பா.42. வரி.12-18.

142. மேலது., பா.320. வரி.14-15.

143. மேலது., பா.331. வரி.7-9.

144. மேலது., பா.384. வரி.21-22.

145. மேலது., பா.319. வரி.8-9.

146. மேலது., பா.146. வரி.1-11.

147. மேலது., பா.299.

148. கம்பராமாயணம்., பா.4320.

149. புறம்., பா.183. வரி.1-4.

150. மேலது., பா.183. வரி.5-7.

151. அதிவீரராமபாண்டியன்., வெற்றிவேற்கை., பா.35.

152. நாலடியார்., பா.131.

153. புறம்., பா.243. வரி.10-11.

154. மேலது., பா.237. வரி.4-5.

155. மேலது., பா.1. வரி.6.

156. மேலது., பா.224. வரி.9.

157. நா.ஜோதினிகனி., சங்கப்பலகை., பா.291.

158. புறம்., பா.290.

159. கார்நாற்பது., பா.4.வ.1.

160. தட்சணாமூர்த்தி.அ., தமிழர் நாகரிகமும் பண்பாடும்.,ப.239.

161. திரிகடுகம்., பா.11 வ.1.

162. ஏலாதி.,பா.62.வ.1.

163. பெருங்காதை, கொங்குவேளிர் பா.137.வரி.88-89.

164. தொல்.அகத்திணையியல்.,நூ.53.

165. சிலம்பு.,அரங்கேற்றுக்காதை., வரி.99-106.

166. தொல்.பொருளியல்.,நூ.75.

167. அகம்.,பா.232.வரி.9-10.

168. மலைபடுகடாம்.,வரி 320-322.

169. அகம்.,பா.20.வரி.7-8.

170. மேலது.,பா326.

171. குறுந்தொகை.,பா.31.

172. அகம்.,பா.265.வரி.19-20.

173. சிலம்பு.ஆய்ச்சியற்குரவை., வரி.12-13.

174. நற்றினை., பா.212.வரி.2-3.

175. புறம்.,பா.33.வரி.16-17

176. சிலம்பு.கடலாடுகாதை.வரி.47-48.

177. புறம்.,பா.22.வரி.22-23.

178. குறுந்தொகை., பா.260.

179. புறம்., ப.281.

180. திருவாசகம்.,பா.3027.

181. புறம்.,பா.149.

182. மேலது.,பா.30.வரி.2-4.

183. மேலது.,பா.400.வரி.1-2.

184. மேலது.,பா.35.வரி.6-7.

185. பட்டினப்பாலை.,வரி.1-5.

186. சிலம்பு.நாடுகாண்காதை.,வரி.103-104.

187. புறம்.,பா.117.வரி.1-2.

188. மேலது.,பா.398.வ.1.

189. மதுரைக்காஞ்சி.வ.100.

190. புறம்.,பா.229.,வரி.11-12.

191. மேலது.,பா.168.வரி.4-5.

192. மேலது.,பா.27.வ.8.

193. சிலம்பு.கட்டுரைக்காதை.,வ.200.

194. சீவகசிந்தமணி., நாமகள் இலம்பகம்.,பா.273.

195. புறம்.,பா.204.,வரி.10-11.

196. மேலது.,பா.41.வரி.8-11.

197. மேலது.,பா.41.

198. மேலது.,பா.124.

199. அகம்.,பா.88.வரி.1-4.

200. கலித்தொகை.,பா.11.வரி.21-22.

201. திருக்குறள்.,எண்.666.

202. புறம்.,பா.195.,வரி.6-9.

203. மேலது.,பா.27.வரி.11-16.

204. மேலது.,பா.182.வரி.5-6.

205. மேலது.,பா.165.வரி.1-5.

206. மேலது.,பா.34.வரி.1-7.

207. திருக்குறள்.,எண் 110.

208. புறம் பா.204., வரி.1-4.

209. மேலது.,பா.214.

# முடிவுரை

சில சமயங்கள், சங்க இலக்கியமும் தொல்காப்பியமும் தோன்றும் முன்பே தோன்றிவிட்டன. இந்து சமயத்தில் அறுவகையான உட்பிரிவுகள் உள்ளன. சிவனை வழிபடுவது சைவம் திருமாலை வழிபடுவது வைணவம் சக்தியை வழிபடுவது சாக்தம் கணபதியை வழிபடுவது காணாபத்தியம் முருகனை வழிபடுவது கௌமாரம் சூரியனை வழிபடுவது சௌரம் ஆகும்.

இயற்கை வழிபாட்டு முறைகளே உருவ வழிபாட்டிற்கு வித்திட்டன. அதனால் பழங்கால மக்கள் சூரியனையும், பிறையையும் தொழுதனர். விதைத்த விதைகள் நன்றாக வளர வேண்டும் என்று மழையை வழிபட்டதோடு மாலை நேரத்தையும் வழிபட்டனர். இந்திரனுக்குச் சங்க காலத்தில் கோயிலும், வழிபாடுகளும் இருந்தமையைச் சங்க இலக்கியங்களும் சிலப்பதிகாரமும் சுட்டுகின்றன. மரங்களையும் அதற்கடியில் உறையும் தெய்வங்களையும் வழிபட்டனர்

சங்க இலக்கியத்தில் சிவன் என்னும் சொல் இடம் பெறவில்லை. ஆனால் சிவனின் அடையாளங்களைச் சுட்டிக்காட்டுகின்றன. ஆயர் குலப்பெண்களின் திருமால் வழிபாடும், ஓணம் விழா நிகழ்வும் இடம்பெறுகின்றன.

சங்க காலத்தில் மாடுபிடி சண்டை நடைபெற்றது. அதில் உயிர் துறந்த வீரனுக்குக் கல்நட்டனர். போரில் இறந்த வீரனுக்காக ஒரு கல்லைத் தேர்வு செய்து அதை நீரில் இட்டு வைத்துச் சுத்தம் செய்து நறுமணப் பொருள்களால் நீராட்டி மாலை சூட்டி நடுவார்கள். இறந்த வீரனைத் தெய்வமாக நினைத்து நாட்பலியிட்டு வழிபடும் மரபு இன்றும் உள்ளது.

கன்னிப் பெண்கள் நல்ல கணவரைப் பெறுவதற்காகத் திருவாதிரை நாளில் வைகறைப் பொழுதில் நீராடி நோன்பு நோற்றனர். முன்னோர்களிடம் அச்சம் தரும் பேய் பற்றிய நம்பிக்கைகள் இருந்தன. தீயவற்றிலிருந்து தங்களைக் காத்துக் கொள்வதற்காகத் தெய்வத்தை வழிபட்டனர். சங்க காலத்தில் சமண, பௌத்த வழிபாடுகளும் நிகழ்த்தப்பட்டதை இலக்கியங்கள் வழி அறிய முடிகின்றது.

சங்க இலக்கியங்கள் காதலையும் வீரத்தையும் பாடுபொருளாகக் கொண்டு அக, புற இலக்கியங்கள் தோன்றியன எனலாம். சங்க காலச் சமுதாயம் போர் விருப்பச் சமூகமாக இருந்துள்ளது எனச் சங்க புற இலக்கியங்கள் கூறுகின்றன.

மன்னர்கள் தவறான பாதையில் செல்லும்போது புலவர்கள் அறிவுரைகள் கூறி இடித்துரைத்து நல்வழிப்படுத்தினர். மக்களைக் காப்பாற்ற பகைவரை எதிர்த்துப் போரிடுக எனக் கூறும் துணிவும் உரிமையும், அரசர் புலவர் நட்பைப்பற்றியும், அரசன் செங்கோலாக இருந்தாலே நாட்டில் மழை, விளைவு ஆகிய இயற்கை நிகழ்வுகள் ஒழுங்காக நடைபெறும் என்ற நம்பிக்கையும் இருந்ததைப் புலவர்கள் பாடியுள்ளனர்.

இரவலர்க்குப் பறம்பு மலையில் இருந்த முந்நூறு ஊர்களைக் கொடுத்துள்ளான் என்பதைப் பெருங்கொடை என்றும் இறைவன் மேல் கொண்ட பக்தியால் ஆடையைக் கொடுத்ததைப் பற்றற்றக் கொடை என்றும் முல்லைக் கொடி கொம்பின்றி தவித்தபோது தன் தேரைக் கொடுத்ததை அருட்கொடை என்றும் சங்க இலக்கியம் உணர்த்துகின்றது.

ஆநிரை கவர்தல் அதிகார எல்லையை விரிவுபடுத்தவும் பிற நாடுகளைத் தனது கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருவதற்காகவும் போர் நடந்தது. மேலும் வீரமும் புகழுணர்வும் கூட பண்டைத் தமிழர்களின் போருக்குக் காரணங்களாக இருந்திருக்கின்றன.

படைவீரர்கள் நாட்டிற்கேற்ப அடையாளப்பூச் சூடினர். மேலும் போருக்குப் புறப்படுவோர் ஊர்க்கிணற்றில் நீராடி வெள்ளையாடை உடுத்தினர். சகுனம் பார்த்தல், குறிகேட்டல் போன்ற வழக்கங்கள் இருந்துள்ளன என்பதைக் காணமுடிகின்றது.

தோல்வியுற்ற நாட்டில் ஏர்பூட்டி உழுது, எள் விதைத்து வெற்றியைக் கொண்டாடினர். பகை மன்னர்களின் நாடுகளில் பொருள்களைக் கவர்ந்து வந்து மக்களுக்கும் புலவர்களுக்கும் கொடையாக வழங்குவது அறமாகக் கருதப்பட்டது.

தோற்றுப்போன வீரர்களை அடிமைகளாக்கியதும், பகை மன்னர்களின் அந்தப்புறப் பெண்களை ஏவல் மகளிராக ஆக்கிக் கொள்வதும் வழக்கமாக இருந்தது.

பெண் கொலைபுரிந்த நன்னன் பற்றிய செய்திகளும், போரிற் பின்னியலும், புறமுதுகிடலும், முதுகிற் புண்படலும் நாணத்தக்கச் செயல்களாகக் கருதப்பட்டன. பகைநாட்டு ஒற்றர்களுக்கு மரணதண்டனை வழங்குவதும் தோற்ற மன்னனுடைய மக்களை யானைக்காலில் இடறச் செய்ததும் போர்க்குற்றங்களாகக் கருதப்பட்டதை சங்க இலக்கியத்தின் வாயிலாக அறியமுடிகிறது.

சங்ககால மன்னர்களின் அரண்மனையில் மழைநீர்க்குழாய்களும், பெரிய வாயில்களும் அவற்றில் ஓவியங்களும் அமைக்கப்பட்டிருந்தன. குறவர் குடில்கள் தினைத்தாளால் வேயப்பட்டும், விலங்குகள் உள்ளே நுழையாதவாறு கதவுகள் குறுகலாகவும் அமைக்கப்பட்டிருந்தன. ஆயர் இல்லம் மூங்கில் கொண்டும், உழவர் இல்லம் வைக்கோலாலும், வலைஞர் இல்லம் நாணல் புற்களாலும் வேயப்பட்டிருந்தன.

போர் வீரர்கள் புலித்தோல் ஆடையைப் போருக்கும் பாதுகாப்புக்கருதி கசவசம் அணிந்தனர். குளிர்காலத்தில் ஆடு, எலி மயிரினால் நெய்யப்பட்ட ஆடைகளை அணிந்தனர். பிறப்பு, இறப்பு மற்றும் திருமணங்களில் புதிய வெண்ணிற ஆடை அணிவதைப் பழக்கமாகக் கொண்டிருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

பழந்தமிழர் குளிர் மற்றும் வெப்பக் காலங்களுக்கு ஏற்ற உணவு முறைகளைப் பயன்படுத்தினர். மான், முயல், பன்றி, உடும்பு, காடை, கானக்கோழி போன்ற இறைச்சிகளையும், தாவர உணவு, பருப்பு, கீரைகள், காய்கள் போன்ற சைவ உணவுகளையும் உண்டதை அறியமுடிகின்றது.

உயிரினும் நாணமும், நாணத்தினும் கற்பும் சிறந்ததாகக் கொண்டு சங்க கால மகளிர் வாழ்ந்திருந்தனர். கணவனைப் பிரிந்திருந்த காலத்தில் மனைவி எவ்வகையான ஒப்பனைகளையும் செய்து கொள்ளாது இருத்தலையும், கணவன்

இறந்தவுடன் மனைவியானவள், உடன் தீ மூழ்குதல், கைம்மை நோன்பு நோற்றல் போன்ற செயல்களால் கற்பு தடம் மாறாமல் வாழ்ந்திருந்தனர்.

விருந்தினர்க்குச் சுவையான உணவு தந்து விருந்தோம்புவதே பழியற்ற வாழ்க்கை என்று நினைத்து வாழ்ந்த சங்கத் தமிழர்களின் மாண்பு போற்றுதலுக்குரியதாகும்.

மகளிர், அணியிழை, ஒளியிழை, இலங்கிழை, சேயிழை போன்ற அணிகலன்களைப் பயன்படுத்தியை அறிய முடிகின்றது.

திருவிழாக்காலங்களில் கொட்டகை அமைத்துக் கூத்து ஆடினர். குரவைக் கூத்து, துணங்கைக் கூத்து, துடிதுணகல், கோடியர் கூத்து, பாவைக் கூத்து போன்ற கூத்துகள் நடைபெற்றன.

வளிமண்டலம், சூரியனின் பாதை, அதன் இயக்கத் தன்மை, வெள்ளிக் கோளின் தன்மை போன்ற அறிவியல் சார்ந்த அறிவினைச் சங்ககால மக்கள் பெற்றிருந்தனர்.

விளக்கு அணைதல், பால் புளித்தல் போன்றவை தீ நிமித்தங்களாகவும், சகுனம் பார்த்தல், குறிகேட்டல், பல்லி சொல்லும் பலன் போன்ற நம்பிக்கை சார்ந்த பழக்கவழக்கங்களும் அவர்களிடம் இருந்ததைக் காண முடிகின்றது.

இவ்ஆய்வின் மூலம் பண்டைத் தமிழர்களின் வழிபாட்டு முறைகளும், போர் மற்றும் அரசாட்சி மரபுகளும், புறவாழ்வியல் கூறுகளும் விளக்கப்பட்டுள்ளன.

# துணைநூற் பட்டியல்

## முதன்மைத் தரவுகள்


1 ஆலிஸ்.,அ(உ.ஆ) பதிற்றுப்பத்து
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ்(பி)லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர்
சென்னை -98.
முதற்பதிப்பு - 2004

2. சுப்பிரமணியன்.,பெ. (உ.ஆ) பரிபாடல்
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ்(பி)லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர்
சென்னை -98.
முதற்பதிப்பு - 2004

3. செயபால்.,இரா.(உ.ஆ) அகநானூறு
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ்(பி)லிட்
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர்
சென்னை -98.
முதற்பதிப்பு - 2004

4. தட்சிணாமூர்த்தி.,அ.(உ.ஆ) ஐங்குறுநூறு
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ்(பி)லிட்
41-பி சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர்
சென்னை -98.
முதற்பதிப்பு - 2004

5. நாகராசன்.,வி.(உ_ஆ) குறுந்தொகை
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ்(பி)லிட்
41-பி சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர்
சென்னை -98.
முதற்பதிப்பு - 2004

6. பாலசுப்பிரமணியன்.,கு.வெ.(உ_.ஆ) நற்றிணை
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ்(பி)லிட்
41-பி சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர்
சென்னை -98.
முதற்பதிப்பு – 2004.

7. பாலசுப்பிரமணியன்.,கு.வெ.(உ_.ஆ) புறநானூறு
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ்(பி)லிட்
41-பி சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர்
சென்னை -98.
முதற்பதிப்பு - 2004

8. மோகன்.,இரா.(உ_.ஆ) பத்துப்பாட்டு
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ்(பி)லிட்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர்
சென்னை -98.
முதற்பதிப்பு - 2004

9. விசுவநாதன்.,அ.(உ_.ஆ) கலித்தொகை
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ்(பி)லிட்
41-பி சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர்
சென்னை -98.
முதற்பதிப்பு - 2004

## துணைமைத் தரவுகள்


1. அப்பாதுரை.,கா.(மொ.ஆ) — இந்திய நாகரிகத்தின் திராவிடப் பண்பு
திருநெல்வேலி சைவசித்தாந்த தென்னிந்திய நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
சென்னை.

2. அருணாச்சலம்.,ப. — பக்தி இலக்கியம்
தமிழ்ப் புத்தக நிலையம்
சென்னை
முதற்பதிப்பு - 1973.

3. அறவாணன்.,க.ப. — அற்றைநாட் காதலும் வீரமும்
பாரி நிலையம் பிராட்வே
சென்னை
முதற்பதிப்பு - 1978.

4. அன்னிதாமசு., — தமிழர் சமூகவியல்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை
முதற்பதிப்பு - 2000.

5. இராசமாணிக்கம் பிள்ளை., — மொகஞ்சதாரோ அல்லது சிந்துவெளி நாகரிகம்
திருநெல்வேலி சைவசித்தாந்த தென்னிந்திய நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
சென்னை
முதற்பதிப்பு - 1962.

6. இராசரெத்தினம்.,கு. — சங்க இலக்கியத்தில் பொதுமக்கள்
குகன் பதிப்பகம்
சென்னை.

7. இராசமாணிக்கனார்.,க. — பண்டைத் தமிழர் வாழ்வியல்
தமிழ்க்குடில் பதிப்பகம்
சேலம்

முதற்பதிப்பு : 2006

8. இராசமாணிக்கனார்.,மா. பத்துப்பாட்டு ஆராய்ச்சி
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை
முதற்பதிப்பு - 1970.

9. இராம சுப்ரமணியம்.,வ.த. பதிற்றுப்பத்து விளக்கவுரை
திருமகள் நிலையம்
சென்னை.

10. குருசாமி.,சே. இலக்கிய வாழ்வியல் நெறி
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட்
அம்பத்தூர்
சென்னை

11. கேசவன்.,கோ. மண்ணும் மனித உறவுகளும்
சென்னை புக்ஹவுஸ்
சென்னை
முதற்பதிப்பு - 1979

12. கைலாசபதி.,க. பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்
மக்கள் வெளியீடு
சென்னை
முதற்பதிப்பு - 1978.

13. சக்திதரும நடராஜன்.,புலவர். சங்ககால இறைநெறியும் வாழ்வியல் நெறியும்
சரஸ்வதி பதிப்பகம்
ஆர்க்காடு - 632503

14. சசிவல்லி.,சி.வி. தமிழர் திருமணம்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி
சென்னை – 13

இரண்டாம்பதிப்பு - 1985

15. சாமிநாத ஐயர்.,உ.வே.(உ.ஆ) சிலப்பதிகாரம்
கபீர் அச்சுக்கூடம்,
சென்னை
முதற்பதிப்பு - 1960.

16. சாமிநாத ஐயர்.,உ.வே.(உ.ஆ) புறப்பொருள் வெண்பாமாலை
கபீர் அச்சுக்கூடம்
சென்னை
முதற்பதிப்பு - 1972.

17. சாமி.சிதம்பரனார்., எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும்
அறிவுப்பதிப்பகம்
ராயப்பேட்டை
சென்னை

18. சிராஜுதீன்.,க. இலக்கியத் தேடல்
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ்
அம்பத்தூர்
சென்னை
முதற்பதிப்பு - 2009.

19. சீனி வேங்கடசாமி., மயிலை. தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்
பாரிநிலையம்
சென்னை.
முதற்பதிப்பு -1969.

20. சீனி வேங்கடசாமி., மயிலை. அஞ்சிறைத்தும்பி
ஸ்டார் பிரசுரம்
சென்னை
முதற்பதிப்பு - 1975

21. சுப்பிரமணியன்.,ந. சங்ககால வாழ்வியல்
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ்(பி)லிட்

41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர்,
சென்னை -98.
முதற்பதிப்பு – 1986.

22. சுப்ரமணியம்.,எம்.(உ.ஆ) திருக்குறள் உரை விளக்கம்
கமர்சியல் பதிப்பகம்
தென்இந்தியா
சிவகாசி
முதற்பதிப்பு – 2011.

23. சுப்ரமணியன்.,ச.வே.(உ.ஆ) சிலப்பதிகாரம்
கங்கைப் புத்தக நிலையம்
சென்னை
முதற்பதிப்பு - 2004.

24. செயராமன்.,ந. சங்க இலக்கியத்தில் பாடாண் திணை
மீனாட்சிப் புத்தக நிலையம்
மதுரை
முதற்பதிப்பு - 1975.

25. செயராமன்.,ந. களம் கண்ட கருத்துக்கள்
குமரன் பதிப்பகம்
மதுரை
முதற்பதிப்பு - 1977.

26. சோமசுந்தரனார்.,பொ.வே (உ.ஆ) கலித்தொகை
தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
522,டி.டி.கே. சாலை
சென்னை-18
முதற்பதிப்பு - 1965.

27. சோமசுந்தரனார்.,பொ.வே (உ.ஆ) குறுந்தொகை
கழக வெளியீடு
சென்னை
முதற்பதிப்பு - 1972.

28. சோமசுந்தரனார்.,பொ.வே (உ.ஆ) அகநானூறு
கழக வெளியீடு
சென்னை
முதற்பதிப்பு - 1978.

29. சோமசுந்தரனார்.,பொ.வே (உ.ஆ) திருமுருகாற்றுப்படை
பூம்புகார் பிரசுரம்
63, பிராட்வே
சென்னை
முதற்பதிப்பு - 1983.

30. சோமசுந்தரனார்.,பொ.வே (உ.ஆ) பெரும்பாணாற்றுப்படை
தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
522,டி.டி.கே. சாலை
சென்னை-18

31. தட்சணாமூர்த்தி.,அ. தமிழர் நாகரிகமும், பண்பாடும்
ஐந்திணைப் பதிப்பகம்
சென்னை - 5
மறுபதிப்பு - 2014.

32. தமிழண்ணல்., சங்க இலக்கிய ஒப்பீடு
மீனாட்சி புத்தக நிலையம்
மதுரை - 625001
முதற்பதிப்பு – 2003

33. திருஞானசம்பந்தம்.,ச. புறப்பொருள் வெண்பாமாலை
கதிர் பதிப்பகம்
திருவையாறு 204.
முதற்பதிப்பு – 2006.

34. துரைசாமிப்பிள்ளை.,ஔவை.ச.(உ.ஆ) ஐங்குறுநூறு

அண்ணாமலைப் பல்கலைக்கழகம் வெளியீடு
அண்ணாமலைநகர்
சிதம்பரம் - 2
முதற்பதிப்பு – 1978.

35. தேவநேயன்.,ஞா. பழந்தமிழர் ஆட்சி
கழக வெளியீடு
சென்னை - 5
முதற்பதிப்பு – 1961.

36. நச்சினார்க்கினியர்., (உ.ஆ) தொல்காப்பியம்
கழக வெளியீடு
சென்னை
முதற்பதிப்பு - 1973

37. நமச்சிவாயம்.,சே. தமிழர் உணவு
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி
சென்னை -113
இரண்டாம் பதிப்பு – 1999

38. பக்தவச்சலபாரதி., பண்பாட்டு மானிடவியல்
மணிவாசகர் பதிப்பகம்
பாரிமுனை
சென்னை.
முதற்பதிப்பு - 1999

39. பகவதி.,கு. தமிழர் ஆடைகள்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி
சென்னை – 13.
இரண்டாம் பதிப்பு – 1980.

40. பரிமேலழகர்.,(உ.ஆ) திருக்குறள்

தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
522,டி.டி.கே. சாலை
சென்னை-18
முதற்பதிப்பு - 1970

41. பிள்ளை.,கே.கே. தமிழக வரலாறும், மக்கள் பண்பாடும்
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்
சென்னை
முதற்பதிப்பு - 1975.

42. புலியூர்க்கேசிகன்.,(உ.ஆ) அகநானூறு
மணிவாசகர் பதிப்பகம்
பாரிமுனை
சென்னை
முதற்பதிப்பு - நவம்பர் 2009

43. மறைமலையடிகள்., தமிழர் மதம்
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
சென்னை-18
முதற்பதிப்பு - 1965

44. மாணிக்கம்.,வா.சுப. தமிழ்க்காதல்
சவிதா பதிப்பகம்
சென்னை - 98

45. மாதையன்.,பெ. சங்க இலக்கியத்தில் குடும்பம்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்(பி)லிட்
அம்பத்தூர்
சென்னை - 98
முதற்பதிப்பு - 2010.

46. வரதராசன்.,மு தமிழ் இலக்கிய வரலாறு
சாகித்ய அகாடெமி

இரவீந்திரபவன்
35,பெராஸ்ஷா சாலை
புதுடெல்லி - 1
முதற்பதிப்பு - 1972.

47. வித்யானந்தா.,சு. தமிழர் சால்பு
பாரி நிலையம்
திருவல்லிக்கேணி
சென்னை - 5.
முதற்பதிப்பு - 1971.

48. வையாபுரிபிள்ளை.,எஸ். புறுநானூறும் தமிழரும்
வ.உ.சி.நூலகம்
சென்னை - 14